ஸ்ரீ

ஸ்ரீமத்வரவரமுநயேநம:

# தொல்காப்பியச்சேனாவரையம்.



கா-பச்சையப்பமுதலியார் தர்மவிசாரணை

சபாத்தியக்ஷராகிய

ம-ா-ா-ஸ்ரீ

மேலமணமபேடு

## ஸ்ரீநிவாஸசடகோபமுதலியாரவர்கள்

வேண்டுகோளின்படி

சென்னை-நார்மல்ஸ்கூலென்னும போதனாசக்திவிர்த்தி

வித்தியாசாலைத் தமிழ்த்தலைமைப்புலவர்

கோமளபுரம்

## இராசகோபாலபிள்ளையவர்களால்

கையெழுத்து வழுவறப்

பரிசோதிப்பித்து

## பு - கந்தசாமிமுதலியா

**ரவர்களால்**

வர்த்தமானதரங்கிணீ சாகை அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

விபவஹு கார்த்திகைமீ.

ஸ்ரீ

ஸ்ரீமத்பராங்குசாயநம:

# சூ த். தி ர வ க ரா தி.

| சூத்திரம். | பக்கம். |
|---|---|

## சூத்திரவகராதி.

முற்றிற்று.

ஸ்ரீ



ஸ்ரீ

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| க0 | ௬ | வழாஅதோம்ப | வழாஅலோம்ப |
| க௪ | உ௩ | கனவு | களவு |
| ,, | க௩ | மின்றியே | மின்றியும் |
| ௩உ | ௫ | றவொடு | றவற்றொடு |
| ௪௩ | ௩உ | இதவு | இவையு |
| ௪௫ | ௬ | பொருளெல்லா | பொருளுமெல்லா |
| ௪௧ | உக | மெனவுரு | மெனவுமுரு |
| ௫0 | க௩ | வறுப்பா | வுரைப்பா |
| ௫௧ | உஉ | யரசனது | யரசரது |
| ௬௪ | உஅ | பதுகாவலை | பாதுகாவலை |
| ௬௬ | கஉ | லைறுண் | லுறுண் |
| க0௫ | ௩அ | சொலுணா | சொலாலுணர் |
| க0அ | கஎ | செய்ததா | சேய்த்தா |
| க0௧ | ௩௩ | துறபொரு | தறபொரு |
| கக0 | ௩எ | ஞைமைபோ | ஞைமைக்குபபோ |
| ககஎ | ௩௩ | தானுங் | தாமுங் |
| கஉ0 | உக | உண்டே | உண்டேஎ |
| கஉஎ | கஉ | யோகார | யேகார |
| க௩௫ | ௩௩ | பினை | பிணை |
| க௩௬ | க | ,, | ,, |
| க௫0 | க௪ | தாம்யாமெ | தான்யானே |
| க௫௩ | ௩0 | சொல்லை | சொல் |
| க௬க | கக | சிறப்பின்றும் | சிறப்பீற்றவாம் |

ஹரிஓம் - நன்றாக - குருவாழ்க.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# தொல்காப்பியம்.

## சொல்லதிகாரம்.

முதலாவது,

## கிளவியாக்கம்.

க. உயர்திணையென்மனார் மக்கட்சுட்டே, யஃறிணையென்மனா
ரவரலபிறவே, யாயிருதிணையி னிசைக்குமனசொல்லே.

நிறுத்தமுறையானே சொல்லுணர்த்திய வெடுத்துக்கொண்டா ரதனா
னிவ்வதிகாரஞ் சொல்லதிகாரமென்னும் பெயர்த்தாயிற்று. சொல்லாவதெ
ழுத்தொ டொருபுடையா னொற்றுமையுடைத்தாய்ப் பொருள்குறித்துவருவ
து. உரையாசிரியரும் எழுத்தாதற் றன்மையொடு புணர்ந்தென்பா ரெழுத்
தொடு புணர்ந்தென்றா ராகலி னொருபுடையொற்றுமையே கூறினார். தன்
மையொடு புணர்ந்தென்றாக்கா லோரெழுத்தொருமொழிக் கெழுத்தொடு
புணர்தலின்மையிற் சொல்லாதலெய்தாதென்க. பொருள்குறித்துவாராமையி
னசைநிலை சொல்லாகாவெனின், ஆவயினாறு முன்னிலையசைச்சொலென்று
ம், வியங்கோளசைச்சொலென்று மோதுதலான் அவையுமிட முதலாயபொ
ருள்குறித்து வந்தனவென்க. யாகாபிறபிறக்கென்னுந் தொடக்கத்தனவோ
வெனின் அவையு மூன்றிடத்திற்கு முரியவாய்க் கட்டுரைச்சுவைபட வருத
லிற் பொருள் குறித்தனவேயாம். இக்கருத்தேபற்றியன்றே யாசிரியரொல்லா
ச் சொல்லும்பொருள் குறித்தனவேயென் றோதுவாராயிற்றென்க. சொற்றா
னிரண்டுவகைப்படும் தனிமொழியுந் தொடர்மொழியுமென. அவற்றுட் டனி
மொழியாவது சமயவாற்றலாற் பொருள்விளக்குவது; தொடர்மொழியாவ
து அவாய்நிலையானு மண்மையானுந் தகுதியானு மியைந்துபொருள்விளக்
குவது. தனிமொழியீட்டம் - பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லு மிடைச்
சொல்லு முரிச்சொல்லுமெனத் தனிமொழி நான்குவகைப்படும். மரமென்
பது பெயர்ச்சொல், உண்டானென்பது வினைச்சொல், மற்றென்ப திடைச்
சொல், நனியென்ப துரிச்சொல். இருமொழித்தொடரும், பன்மொழித்தொ
டருமெனத் தொடர்மொழி இரண்டுவகைப்படும். சாத்தன்வந்தானென்ப
திருமொழித்தொடர், அறம்வேண்டியரச னுலகம்புரந்தானென்பது பன்மொ
ழித்தொடர். அதிகாரமென்னுஞ் சொற்குப்பொருள் பலவுளவேனு மீண்டதி
காரமென்ற தொருபொருணுதலி வரும்பலவோத்தினதுதொகுதியை, வட
நூலாரு மோரிடத்துநின்றசொல் பலசூத்திரங்களொடு சென்றியைதலையும்

ஒன்றனதிலக்கணம்பற்றிவரும் பலசூத்திரத்தொகுதியையு மதிகாரமென்ப. சொல்லதிகாரஞ் சொல்லையுணர்த்திய வதிகாரமெனவிரியும். அச்சொல்லை யாங்ஙனமுணர்த்தினாரோவெனிற் றம்மையேயெடுத்தோதியு மிலக்கணங்கூறியு முணர்த்தினாரென்பது. வழுக்களைந்து சொற்களையாக்கிக்கொண்டமையா னிவ்வோத்துக் கிளவியாக்கமாயிற்று. ஆக்கம அமைத்துக்கோடல். நொய்யு நொறுங்குங்களைந்து அரிசியமைத்தானை யரிசியாக்கினானென்பவாகலின்] சொற்கள் பொருள்கண் மேலாமாறுணர்த்தினமையிற் கிளவியாக்கமாயிற்றெனினுமமையும். பொதுவகையாற் கிளவியென்றமையாற் றனிமொழியுந் தொடர்மொழியுங் கொள்ளப்படும். கிளவி, சொல், மொழி என்னுந் தொடக்கத்தன வெல்லா மொருபொருட்கிளவி. உயர்திணையென்மனார் - சொல்லே என்பது மக்களென்று கருதப்படும்பொருளை யாசிரிய ருயர்திணையென்றுசொல்லுவர், மக்களென்று கருதப்படாத பிறபொருளை யஃறிணையென்றுசொல்லுவர், அவ் விருதிணை மேலுஞ்சொற்க ணிகழுமென்றவாறு. எனவே யுயர்திணைச் சொல்லு மஃறிணைச்சொல்லுமெனச் சொல்லிரண்டென்றவாறும். மக்கட்சாதி சிறந்தமையானுயர்திணையென்றார். என்மனாரென்பது செய்யுண்முடிபெய்திநின்றதோராரீற்று நிகழ்காலமுற்றுசசொல். என்றிசினோர், கண்டிசினோரென்பன முதலாயினவும் அவ்வாறுவந்த நிகழ்காலமுற்றுச்சொல். என்பவென்னு முற்றுச்சொல்லினது பகரங்குறைத்துமன்னு மாருமென விரண்டிடைச்சொற் பெய்துவிரித்தாரொன் றுனையாசிரியர் கூறினாராலெனின் என்மனாரென்ப திடர்ப்பட்டுழிச் சிறுபான்மைவாராது நூலுள்ளுஞ் சான்றோர்செய்யுளுள்ளும் பயின்றுவருதலானு மிசைநிறையென்பது மறுத்துப் பொருள்கூறுகின்றார், பின்னுமிசைநிறையென்றன் மேற்கோண்மலைவாதலானு மவர்க்கது கருத்தன்றென்க. மாணாக்கர்கட் குணர்வுபெருகல்வேண்டி வெளிப்படக்கூறா துய்த்துணரவைத்த லவர்க்கியல்பாகலாற் செய்யுண்முடிபென்பது கூறாராயினார். என்மனாராசிரியரெனவே யுயர்திணை யஃறிணையென்பன தொல்லாசிரியர்குறியாம். ஆசிரியரென்னும்பெயா வெளிப்படாதுநின்றது. மக்களாகிய சுட்டியாதன்க ணிகழுமது மக்கட்சுட்டெனப் பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த வன்மொழித்தொகை. ஈண்டுமக்களென்றது மக்களென்னு முணர்வை. எனவே மக்களேயாயினு மக்களென்று சுட்டாது பொருளென்று சுட்டியவழி உயர்திணையெனப் படாதென்பதாம். இனியவரலவென்றது பிறவென்[illegible]டின் யாதல்லாத பிறவென் றவாய்நிற்குமாகலின் அவரலவென்றார். மக்கட் சுட்டேயென்று மேனின்றமையின் மக்களல்லாத பிறவென்றுணர்தலாமெனின் ஆற்றன் முதலாயினவற்றாற் கொள்வது சொல்லில்வழியெனமறுக்க. இனியவரலவென்றே யொழியினவற்றது பகுதியெல்லா மெஞ்சாமற் றழுவாமையி னெஞ்சாமற்றழுவுதற் கவரலபிறவென்றார். செய்யுளாகலா னுயிருதி[illegible]யினெனச் சுட்டுநீண்டது. வரையறையின்மையினீண்டு யகரவுடம்படு மெய்யாயிற்று. சொன்னிகழ்ச்சிக்குப் பொருளிடமாகலி னுயிருதிணையின்கண்ணென வேழாவதுவிரிக்க. இன்சாரியை வேற்றுமையுருபுபற்றியும், பற்றாதும் வருமென் றுனையாசிரிய ரிரண்டாவது விரித்தாராலெனின் சாரியையுங்

வழிச்சாரியை கெடுதலுஞ் சாரியையுள் வழித்தன்னுருபுநிலையலுமென விர
ண்டாவதற்குத் திரிபோதினமையானுஞ் செலவினும் வரவினுந் தரவினுங்
கொடையினு மென்புழியும்பிறண்டுமெல்லா மேழாவது விரித்தற்கேற்பப்
பொருளுணர்த்தமையானு மவ்வுரைபோலி யுரையென்க. ஆயிருதிணையினுமெ
ன்னு மும்மைவிகாரவகையாற் றொக்குநின்றது. இசைக்குமென்பது செய்யு
மென்னு முற்றுச்சொல். மன்னென்னுமிடைச்சொல் மனவெனவீறுதிரிந்து
நின்றது. மன்னென்று பாடமோதுவாருமுளர். ஏகாரமீற்றசை. சொல்வரை
யறுத்தலே இச்சூத்திரத்திற்குக் கருத்தாயின் ஆடூஉவறிசொல், மகடூஉவ
றிசொல்லென்றாற்போல உயர்திணைச்சொல், அஃறிணைச்சொல்லெனவமையு
ம. உயர்திணைமக்களஃறிணைபிறவெனல் வேண்டாவெனி னுயர்திணையஃறிணை
யென்பன தொல்லாசிரியர் குறியாகலான் ஆடூஉமகடூஉப்போல வழக்கொடு
படுத்துப் பொருளுணாதலாகாமையி னுயர்திணைமக்க ளஃறிணைபிறவெனல்
வேண்டுமென்பது. இவ்வாறொருபொரு ணுதலிற்றாக வுரையாக்காற் சூத்திர
மொன்றுமா றில்லையென்க.

உ. ஆடூஉவறிசொன் மகடூஉவறிசொல், பல்லோரறியுஞ் சொல்
லொடுசிவணி, யம்முப்பாற்சொ லுயர்திணையவ்வே.

ஆடூஉவறிசொலலும், மகடூஉவறிசொலலும், பல்லோரறியுஞ் சொல்லொ
டுபொருந்தி யம்மூன்று கூற்றுச்சொல்லு முயர்திணையனவாம். எ-று. ஆண்
மகனை ஆடூஉவென்றலும், பெண்டாட்டியை மகடூஉவென்றலும் பண்டையார்
வழக்கு. அறிவுமுதலாயினவற்றா னாண்மகன்சிறந்தமையி னாடூஉவறிசொன்
முற்கூறப்பட்டது. பன்மையிருபாலும் பற்றிவருதலிற் பல்லோரறிசொல் பிற்
கூறப்பட்டது. இரண்டாம்வேற்றுமை உயர்திணைக்கட் சிறுபான்மை தொக
ப்பெறுதலிற றொக்குநின்றது. திரிநதபுணர்ச்சியனமையின் விகாரவகையாற்
றொக்கதென்பாருமுளர். சிவணியென்னும் வினையெச்ச முயர்திணைய வாமெ
ன்னும் வினைக்குறிப்புக்கொண்டது. ஆறாம்வேற்றுமை யேற்றுநின்ற சொற்
பெயராயும், வினைக்குறிப்பாயு நிற்குமாகலான் உயர்திணையவாமென்னு முப்
பாற்சொல்லின்வினை ஆடூஉவறிசொன் மகடூஉவறிசொல்லென்னு மிரண்டன்
வினையாகிய சிவணியென்னுஞ் செய்தெனெச்சத்திற்கு வினைமுதல் வினையா
யினவாறென்னையெனின் உயர்திணையவாத லாடூஉவறிசொன் மகடூஉவறிசொ
ல்லென்பனவற்றிற்கு மெய்துதலான் வினைமுதல் வினையாமென்க. முதனிலை
மூன்றும் வினைமுதன்முடிபின வென்புழிவினைமுதல் வினையென்னுந் தன்னை
யல்லது பிறிதொன்றற்குப் பொதுவாகாது வினைமுதற்கே வினையாதல் வே
ண்டுமென்னும் வரையறையின்மையின்] அல்லாக்கா லவனுமிவளுஞ் சிற்றி
லிழைத்துஞ் சிறுபறையறைந்தும் விளையாடுப வென்பனபோல்வன வமை
யாவாமென்க. ஆடூஉவறிசொன் முதலாயினவற்றை யுணர்த்தியலலது அவற்றி
இலக்கணமுணர்த்த லாகாமையிற் பாலுணர்த்துமெழுத்து வகுப்பவேயனை
தாமும் பெறப்படும். இச்சூத்திரம் வேண்டாவென்பது கடாவன்மையுணர்க.
உயர்திணைச்சொ லுணர்த்தியதனது பாகுபாடுகூறுகின்றாராகலின் அம்முப்

பாறசொ லுயர்திணைய வென்ருராயினு முயர்திணைச்சொன் மூன்றுபாகு படுமென்பது கருத்தாகக்கொள்க. இக்கருத்தானன்றே யாசிரியரம்முப்பாற் சொல்லுமென் விணைத்தெனவறிநதபொருட் டொகுதிக்குக்கொடுக்கு மூம் மைகொடாராயினு முரையாசிரியரு முயர்திணையெனப்பட்ட பகுப்பை விரி ப்புழியித்துணையல்லது விரிபடாதென்ப தீண்டுக்கூறியதென் றுரைத்ததூஉ மென்க. ஆயிருபாற்சொ லஃறிணை யவ்வேயென்பதற்கு மீதொக்கும்.

௩. ஒன்றறிசொல்லே பலவறிசொல்லென், றாயிருபாற்சொ லஃறிணையவ்வே.

ஒன்றனையறியுஞ்சொல்லும், பலவற்றையறியுஞ் சொல்லுமென வவ்விர ண்டு கூற்றுச்சொலலு மஃறிணையனவாம். எ - று.

௪. பெண்மைசுட்டிய வுயர்திணைமருங்கி, னாண்மைதிரிந்த பெயர்நிலைக்கிளவியுந், தெய்வஞ்சுட்டிய பெயர்நிலைக்கிளவியு, மிவ்வெனவறியுமந்தந்தமக்கிலவே, யுயாதிணைமருங்கிற் பால்பிரிந்திசைக்கும்.

உயர்திணையிடத்துப் பெண்மைத்தன்மைகுறித்த வாண்மைதிரிநத பெயர்ச்சொல்லுந் தெய்வத்தைக்குறித்த பெயர்ச்சொல்லு மிவையெனத் தம்பொருளை வேறறியநிற்கு மீறறெழுத்தினைத்தமககுடையவல்லவுயாதிணையிடத்த தற்குரியபாலாய் வேறுபட்டிசைக்கும். எ - று. பால்வேறுபட் டிசைத்த லாவது தாமுயர்திணைப்பெயரா யாடூஉவறிசொன் முதலாயினவற்றிற்குரிய வீற்றெழுத்தே தம்விணைக்கீறாக விசைத்தல். பேடிவநதாள் - பேடர்வநதார் - பேடியர்வந்தார் - எனவும், தேவன்வந்தான் - தேவிவந்தாள் - தேவர்வந்தார் - எனவும்வரும். அலிப்பெயரினீக்குதற்குப் பெண்மைசுட்டியவென்றும், மகடூஉப்பெயரினீக்குதற் காண்மைதிரிநதவென்றுங்கூறினு[illegible]பெண்மைசுட்டியவெனவே பெண்மைசுட்டாப் பேடென்பது மொழிக்கப்பட்டதாம். பெண்மைதிரிந்துண்டேனு மாண்மைதிரிதல் பெரும்பான்மையாகலா னாண்மைதிரிந்தவென்ருர். பேடியர் - பேடிமார் - பேடிகள் - என்பனவு மடங்குதற்குப் பேடியென்னும் பெயர்நிலைக்கிளவியென்றது பெண்மைசுட்டிய வாண்மைதிரிந்த பெயர்நிலைக்கிளவியென்ருர். பெண்மைசுட்டியவென்னும் பெயரொச்சம் பெயர்நிலைக்கிளவியென்னும் பெயர்கொண்டது. ஆண்மைதிரிந்த வென்பதி [illegible] தன்மைதிரிபெயரொன்ருற்போலச் சொல்லொடு பொருட்கொற்று [illegible] யாண்மைதிரிந்த பெயர்நிலைக்கிளவியென்ருர். உயர்திணைமருங்கிற் [illegible] இசைக்குமெனவே தமக்கெனவேறீின்மைபெறப்படுதலி[illegible]வென [illegible] தந்தமக்கிலவேயெனல் வேண்டாவெனின் தமக்கெனவீறுடையவா [illegible] உவறிசொன்முதலாயினவற்றிற்குரிய வீற்ருனுமிசைக்குங்கொலென்று [illegible]க்குதற் கந்தந்தமக்கிலவேயெனல் வேண்டுமென்பது. பாலுளடங்கு [illegible] திணையுளடங்காததெய்வத்தையும் பாலுளுந்திணையுளும [illegible] சுட்டியவென்பது செய்யியவென்னும் வினையெச்சமென்று மான்

மைதிரிதல் சொற்கின்மையிற் பெயர்நிலைக்கிளவியென்ப தாகுபெயராட் பொருண்மேனின்றதென்று முரையாசிரியர் கூறினாராலெனின் ஆண்மைதிரிதல் பெண்மைத்தன்மை யெய்துதற்பொருட்டன்றிப் பேடிக்கியல்பாகலிற் பெண்மைசுட்டவேண்டி யாண்மைதிரிந்தவென்றல் பொருந்தாமையானும், பெருளேகூறலுற்றாராயி னாசிரியர் பேடியுந் தெய்வமு மென்று தாங்கருதிய பொருளினிதுவிளங்கச் சுருங்கியவாய்பாட்டாற் சூத்திரிப்பாராகலானு மவர்க்கது கருத்தன்மையா னுரையாசிரியர்க்கு மதுகருத்தன்றென்க.

௫. னஃகானொற்றே யாடூஉவறிசொல்.

னஃகானாகிய வொற்றாடூஉவறிசொல்லாம். எ - று. உண்டனன் - உண்டான் - உண்ணாநின்றனன் - உண்ணாநின்றான் - உண்பன் - உண்பான் - கரியன் - கரியான் எனவரும். ஆடூஉவறிசொலலாவது னகாரவீற்றுச்சொல்லாயினும் பாலுணர்த்துதற் சிறப்புநோக்கி, னஃகானொற்றேயென்றா. அறமாவதழுக்கா றின்மையென்றாற்போல] னஃகானொற் றாடூஉவறிசொல்லென்றாராயினும் ஆடூஉவறிசொல்லாவது னஃகானொறறென்பது கருத்தாகக்கொள்க. ஏகாரம்பிரிநிலை. ளஃகானொற்று முதலாயினவற்றிற்கு மிதுவொக்கும். உரையாசிரியர் பிரிநிலையென்றாராலெனின் பிரிநிலையாயின ஆடூஉவறிசொற் கிலக்கணங்கூறுதலன்றிப் பிரித்ததன் சிறப்புணர்த்துதலே கருத்தாமாகலி னவ்வுரை போலியுரையென்க.

௬. ளஃகானொற்றே மகடூஉவறிசொல்.

ளஃகானாகிய வொற்றுமகடூஉவறிசொல்லாம. எ - று. உண்டனள் - உண்டாள் - உண்ணாநின்றனள் - உண்ணாநின்றாள் - உண்பள் - உண்பாள் - கரியள் - கரியாள் - எனவரும்.

௭. ரஃகானொற்றும் பகரவிறுதியு, மாரைக்கிளவி யுளப்படமூன்று, நேரத்தோன்றும் பலரறிசொல்லே.

ரஃகானாகியவொற்றும், பகரமாகியவிறுதியும், மாரொன்றுமிடைச் சொல்லுமிம்மூன்றும் பலரறிசொல்லாம். எ - று. ஏயென்பதீற்றசை. உண்டனர் - உண்டார் - உண்ணாநின்றனர் - உண்ணாநின்றார் - உண்பர் - உண்பார் - கரியர் - கரியார் - எ-ம் - கூறுப - வருப - எ-ம் - கொண்மார் - சென்மார் - எ-ம் - வரும். மார்எதிர்காலம் பற்றிவந்தஆரோயாம் ரஃகானொற்றெனவடங்குமெனின் அற்றன்று, ஆரோயாயிற்கொண்மாரென்புழிமகரங்காலம்பற்றிவந்ததோ ரெழுத்தாகல்வேண்டும் - உண்பார் - வருவார் - எனக்காலம்பற்றிவருமெழுத்து முதனிலைக்கேற்றவாற்றான் வேறுபட்டுவருமன்றே அவ்வாறன்றி உண்மார் - வருமார் - எனவெல்லாமுதனிலைமேலு மகரத்தொடு கூடிவருதலானும், வினைகொண்டு முடிதற்கேற்பதோர் பொருள்வேறுபா டுடைமையானும் ஆரீறன்று வேறெனவேபடுமென்பது. மூன்றுகாலமும் வினைக்குறிப்பும் பற்றிவருதல் ஒப்புமைநோக்கி அர் ஆர்என்னுமிரண்டற்கையும் ரஃகானொ

வடக்கியோதினார். அன் ஆன் அள் ஆள் என்பனவற்றையு மிவ்வொப்புமைப ற்றி னஃகான் ளஃகானென வடக்கியோதினார். ரகார மூன்றுகாலமும், வினை க்குறிப்பும்பற்றிப் பெருவழக்கிற்றாய் வருதலின்முன்வைத்தார். மார்பகரவீ றுதியிற் சிறுவழக்கிற்றாகலிற் பின்வைத்தார். உண்கும் - உண்டும் - வருதும் - சேறும் - என்னுந்தொடக்கத்தனவும் பலரறிசொல்லாயினும் அவையெண்ணி யுன்மருங்கிற் றிரிதலினேரத்தோன்றாவாகலானிவற்றை நேரத்தோன்றும் ப லரறிசொல்லென்றார். மூன்றும் பலரறிசொல்லென்றாராயினும் பலரறிசொ ல்லாவதிம்மூன்றுமென்பது கருத்தாககொள்க.

அ. ஒன்றறிகிளவி தறடவூர்ந்த, குன்றியலுகரத் திறுதியாகும்.

ஒன்றறிசொல்லாவது தறடவென்னு மொற்றையூர்ந்த குறறியலுகரத் தை யிறுதியாகவுடைய சொல்லாம். எ - று. வந்தது - வாராநின்றது, வரு வது - கரிது எ-ம், கூயிற்று - தாயிற்று - கோடின்று - குளம்பின்று - எ-ம் குண்டுகட்டு - கொடுநாட்டு எ-ம் வரும். கிடக்கை முறைமையாற்கூறா து தறடவெனச் சிறப்புமுறையாறகூறினார். குன்றியலுகரமென மெலிந்து நின்றது. தகரவுகரமூன்றுகாலமும் வினைக்குறிப்பும்பற்றிவருதலும், றகர வுகர மிறந்தகாலமும வினைக்குறிப்பும் பற்றிவருதலும், டகரவுகரம் வினை க்குறிப்பே பறறிவருதலுமாகிய வேறுபாடுடைமையாற குறறியலுகரமென வொன்றாகாது மூன்றாயின.

௯. அ ஆ வ என வரூஉமிறுதி, யப்பான்மூன்றே பலவறி சொல்லே.

பலவறிசொல்லாவன அ ஆ வ என வரூஉமிறுதியை யுடையவக்கூற்று மூன்று சொல்லாம். எ - று. உண்டன - உண்ணாநின்றன, உண்பன - கரியன எ-ம், உண்ணா - தின்னா எ-ம், உண்குவ - தின்குவ எ-ம் வரும். உண்ட - உண் ணாநின்ற - உண்ப - கோட்ட - என்னுந தொடக்கத்தனவும், அகரவீற்றுப பலவறிசொல். அவற்றுளுண்பவென்பது பகரவீற்றுப்பலரறி சொல்லன்றே அஃதஃறிணைக்காயினவா றென்னையெனின் பகரவிறுதியாயினன்றே யுயர்தி ணைக்காவது கண்டுக்காட்டப்பட்டது-கானந்தகைப்ப செலவுசினையவுஞ் சுனை யவுகாடினர் தொய்தல்வேண்டா நயந்துதாங்கொடுப்பபோல என நின்றன போல எதிர்காலத்துவரும் பகரமூர்ந்துநின்ற அகரவீறாகலி னஃறிணைச்சொ ல்லே யாமென்பது. செய்யுளாதலிற் றகைப்பன கொடுப்பனவென்னுஞ்சொ ற்கள் தகைப்ப கொடுப்பவென விகாரவகையா னவ்வாறு நின்றனவாகலான் வழக்குமுடிவிற் கவைகாட்ட லிரம்பாதெனின்-தகைத்தன-தகையாநின்றன- தகைத்த - தகையாநின்ற எ-ம், கொடுத்தன - கொடாநின்றன - கொடுத்த - கொடாநின்ற எ-ம், இறந்தகாலத்தும் நிகழ்காலத்தும் அகரவீறு முதனி லைக்கேற்றவாற்றா னவ்வக்காலத்திற்குரிய வெழுத்துப்பெற்று அன்பெற்றும் பெறாதுமுடியுமாறுபோல எதிர்காலத்து முதனிலைக்கேற்றவாற்றா னக்காலத் திற்குரிய வெழுத்துப்பெற்று அன்பெற்றும் பெறாதுமுடியும். எதிர்காலத்து

க்குரிய வெழுத்தாவன யகரமும் வகரமுமாம். அவற்றுட்பகரம் அன்பெற் றும் பெறாதுமுடிவுழித் தகைப்பன - தகைப்ப - கொடுப்பன-கொடுப்ப எ-ம் வகரம்பெற் றவ்வாறுமுடிவுழி வருவன - வருவ - செல்வன - செல்வ-எ-ம். இவ்வாறு முடியுமாகலின், தகைப்ப - கொடுப்பவென்பன விகாரமெனப்படா வியல்பேயாமென்பது. கொடுப்பனயாவை யவைபோலவென வுவமைகரு தா தவைதம்மையே சுட்டிநிற்றலிற்கொடுப்பவென்பதுபெயரன்மையறிக. அன்பெறு தெதிர்காலத்துவரும் வகரவொற்றூர்ந்துநின்ற அகரமாய் வகர வீறடங்குமெனின் வினைகொண்டு முடிதலொழித்து மாரீற்றிற்குரைத்ததுரை க்க. அவ்வாறுரைக்கவே குகரம்பெற்றவழி யன்பெறற்கேலாமையின் உண் குவ - தின்குவ - என்றுந் தொடக்கத்தன வகரவீறேயாம். வருவ-செல்வவெ னக் குகரம்பெறுதவழி வகரவீறுதலும், அகரவீறுதலுமென விருநிலைமையு முடையவாம். என்னை, எல்லாவினைக்கண்ணுஞ் சேறன்மாலைத்தாகிய வகரவீ றன்றி விலக்கப்படாமையானு மத்தன்மைத்தாகிய அகரவீறு மான்வேந்து ன்பெறுதவழிக் காலவகரமூர்ந் தவ்வாறுநிற்ற லுடைமையானுமென்பது. வருமென்னு முகரம் விகாரவகையா னீண்டுநின்றது. ஈற்றுவகையான் மூன் றாகிய சொல்லென்பாரப்பான மூன்றென்றார்.

க0. இருதிணைமருங்கி னைம்பாலறிய, வீற்றினின்றிசைக்கும் ப
திேனாெழுத்தும், தோற்றந்தாமே வினையொடுவருமே.

உயர்திணை யஃறிணையென்னுமிரண்டுதிணைக் கண்ணுமுளவாகிய வொரு வனொருத்தி பலவொன்று பலவெனனு மைந்துபாலுமறிய வவ்வச்சொல்லி னிறுதிக்கணின்றொலிக்கும் பதினோரெழுத்தும் புலப்படுதற்கண் வினைச்சொ ற்குறுப்பாய்ப் புலப்படும். எ - று. திணையிரண்டேபாலைந்தே யெனவரைய றுத்தற்கு இருதிணைமருங்கி னைமபாலெனறா. னகாரமும், ளகாரமும், ரகா ரமும், மாரும - இறுதிநின்றுணாத்துமென்பதற் கீற்றினின்றிசைக்கும் பதி னோரெழுத்து மென்பதுஞாபகமாயிற்று. அல்லனவற்றிற் கனுவாதமாத்திர மென்றார். தாமேயென்பது கட்டுரைச்சுவைபடநின்றது. வினையெனப்பொது ப்படக்கூறினாராயினு மேற்புழிக்கோடலென்பதனாற் படர்க்கைவினையென்று கொள்ளப்படும். இவைபெயரொடுவருவழித்திரிபின்றிப் பால்விளக்காமையி ன் வினையொடுவருமென்றார்.

கக. வினையிற்றோன்றும் பாலறிகிளவியும், பெயரிற்றோன்றும்
பாலறிகிளவியு, மயங்கல்கூடா தம்மரபினவே.

ஒருதிணைச்சொல்லேனைத்திணைச்சொல்லொடுமுடியுந்திணைவழுவும், ஒரு பாற்சொல்லத்திணைக்கண்ணேனைப்பாற்சொல்லொடுமுடியும்பால்வழுவும், பி றிதோர்காரணம் பற்றாது ஒருபொருட் குரியவழக் கொருபொருண்மேற்செ ன்றதெனப் படுமரபுவழுவும், வினாயதறிறையாகாச் செப்புவழுவும், இன்னு வப்படாதபொருள் பற்றிவரும் வினாவழுவும், ஓரிடத்துச்சொல்லோரிடத்

ருச் சொல்லொடுமுடியுமிடவழுவும், காலக்கிளவிதன்னொ டியையாக்கால
மொடுபுணருங்காலவழுவுமென வழுவேழுவகைப்படும். வழுவற்கவென்றலு
ம், வழுவமைத்தலுமெனவழுக்காத்த லிருவகைப்படும். குறித்தபொருளை ய
தற்குரியசொல்லாற் சொல்லுகவென்றல் வழுவற்கவென்றலாம். குறித்தபொ
ருட்குரியசொல்லன்றாயினு மொருவாற்றானபபொருள் விளக்குதலினமைக
வென்றல் வழுவமைத்தலாம். இச்சூத்திரமுதலாக விவ்வோத்துவழுக்காக்கின்
றது. கூறப்பட்ட பதினோரீற்றவாய்வினைபற்றி வரும்பாலறிசொல்லும், அவ
ன - இவன் - உவன - எனபனமுதலாகப் பெயர்பற்றிவரும் பாலறிசொல்லு
ந் தம்முட்டொடருங்கால ஒருபாற்சொலலேனைப்பாற் சொல்லொடுமயங்கா;
தம்பாற்சொல்லொடுதொடரும். எ - று. எனவே பிறபாற்சொல்லொடு தொ
டர்வனவழுவென்பதாம். ஈண்டுப்பெயரென்றதுபொருளை. திணையுணராக்கா
லதனுட்பகுதியாகிய பாலுணரலாகாமையிற பாலறிகிளவியெனவே திணை
யறிதலும்பெறப்படும். படவேமயங்கல் கூடாவெனறது திணையும்பாலும் ம
யங்கற்கவென்றவாறும். இன்னுமயங்கல் கூடாவென்றதனான் வினைபபாலறி
சொல்லும், பெயாப்பாலறிசொல்லும், பாலறிசொல்லுள் ஒருசாரனவுமிட
முங்காலமு முணர்த்துமாகலினவ்வா றுணாததுவனவற்றானு மயங்கறகவெ
ன்றவாறும். ஆகவே யிடமுங்காலமுமயங்காது வருதலுங்கூறப்பட்டதாம்.
அவன்வந்தான் - அவள்வந்தாள - அவர்வநதார் - அதுவநதது - அவைவந்த
ன - எ-ம், நெருநலவநதான் எ - ம், திணையும்பாலு மிடமுங்காலமும் வழுவா
து முடிந்தவாறு. அவ்வாறன்றி - அவன்வநதது - அவன்வந்தாள் - யான்வந்
தான் - நாளைவந்தேம் - எனமயங்கி வருவனவெல்லாம் வழுவாம. சிறப்புடை
ப்பொருளைத் தானினிதுகிளத்த லென்பதனா லேமபாலுணர்த்துதற் சிறப்பு
டைய படர்க்கை வினைபற்றியோதினோனுந தன்மைச்சொலலே யஃறிணைக்
கிளவியெனறும், முன்னிலைசுட்டிய வொருமைக்கிளவியென்றும் பெயர்வழு
வமைப்பாராகலிற றன்மைமுன்னிலைப் பாலறிகிளவியு மயங்கற்கவென்ப தீ
ண்டைக்கொள்ளப்படும். (உதாரணம்) யான்வநதேன் - யாம்வநதேம் - நீவந
தாய் - நீயிர்வந்திர் எனவரும். யான்வந்தேம் - நீயிர்வநதாய் என்னுந் தொ
டக்கத்தன வழுவாம். மயங்கல் கூடாவென்றது மயங்குதலைப் பொருந்தா
வென்றவாறு. மயங்கல்கூடா தம்மரபினவே யெனபனவற்று ளொன்றனதா
ற்றலா னேனையதன்பொருளு முணரப்படுதலி னொன்றேயமையுமெனிற் சொ
ல்லில்வழிய துய்த்துணாவதென்க. தம்மரபினவே யெனபதனைப்பிரித்து வே
றோர்தொடராக்கிச் சொற்கண்மரபுபிறழா தம்மரபினவேயென மரபுவழுக்
காத்ததாகவுரைக்க. இது யோகவிபாகமெனனு நூற்புணர்ப்பு. முன்னிரு
பொருள்பட வுரைப்பனவெல்லாம் இந்நூற்புணர்ப்பாகக்கொள்க. யானைமே
ய்ப்பானைப் பாகனென்றலும், யாடுமேய்ப்பானை இடையனென்றலு மரபு.
மேய்த்தலொப்புமையான் யானைமேய்ப்பானை இடையனென்றலும், யாடு
மேய்ப்பானைப் பாகனென்றலு மரபுவழு. செப்புவழாநிலையும் வினாவழாநிலை
யுந் சிறப்புவகையானோதப்படு மிடவழாநிலையு மிவ்வாறோதப்படு மரபுவழா
நிலையு மொழிந்தொழிந்தன விச்சூத்திரத்தாற் காத்தார.

கஉ. ஆண்மைதிரிந்த பெயர்நிலைக்கிளவி, யாண்மையறிசொற்
காகிடனின்றே.

உயர்திணைமருங்கிற்பால பிரிந்திசைக்குமென்று மேற்கூறப்பட்ட வாண்
மைதிரிந்த பெயர்நிலைக்கிளவி யாடூஉவறிசொல்லொடு புணர்தற்குப் பொரு
ந்துமிடனுடைத்தன்று. எ - று. ஆண்மையறிசொற் காகிடனின்றென்ற வில
க் காண்மையறிசொல்லொடுபுணர்த லெய்திநின்ற பேடிக்கல்லதேலாமையி
னலிமேற்செல்லாதென்க. இச்சூத்திரத்தைப் பெண்மைசுட்டிய வென்னுஞ்சூ
த்திரத்தின்பின்வையாது நீண்டுவைத்தார்.இதுவழுவற்கவென்கின்றதாகலான்.]

கங. செப்பும்வினாவும் வழாஅலோம்பல்

செப்பினையும் வினாவினையும் வழுவாமற்போற்றுக. எ - று. செப்பென்
பது வினாயபொருளை யறிவுறுப்பது. அஃதிரண்டுவகைப்படும். செவ்வனிறை
யுமிறை பயப்பதுமென] உயிரொத்தன்மைத்தென்று வினாயவழி யுணர்தற்றன்
மைத்தென்றல் செவ்வனிறையாம்; உண்டியோவென்று வினாயவழி வயிறு
குத்திற்றென்ற லுண்ணேனென்பது பயந்தமையினிறை பயப்பதாம். கருவூ
ர்க்குச் செல்லாயோ சாத்தாவெனப் பருநூல் பன்னிருதொடியென்பது செ
ப்புவழுவாம். சொல்லெப்பொருளுணர்த்துமென்று வினாயவழிச் சொல்லொ
ருபொருளு முணர்த்ாதென்பதுமது. வினாயபொருளை வினாவாலுணர்ந்து
தான்குறித்தபொருளைச் செப்பாலுணர்த்துகின்ற ளாகலினென்பது] வினாவி
ன்றியுஞ் செப்புநிகழ்தலின் வினாயபொருளை யெனல்வேண்டாவெனின் வினா
யபொருளை யென்றதறிவுறுப்பது செப்பெனின் அறியலுறவினை யறிவுறுத்
தலின் வினாவுஞ்செப்பா யடங்குதலானுஞ் செப்பென்ப துத்தரமென்பதனோ
டொருபொருட்கிளவியாகலானும் வினாயபொருளை யறிவுறுத்தலே யிலக்கண
மாமென்பது. குமரியாடிப்போந்தேன் சோறுதம்மினென வினாவின்றி நிகழ்
ந்தசொல் யாண்டடங்குமெனின் அறியலுறுதலை யுணர்த்தாதொன்றனை யறி
வுறுத்துநிற்றலிற் செப்பின்பாற்படும். வினாவெதிர்வினாதலேவன் மறுத்தலுற்
றதுரைத்த லுறுவதுகூற லுடம்படுவதெனச் செப்பறுவகைப்படுமென் றுரை
யாசிரியர் கூறினாராலெனின் உயிரொத்தன்மைத்தென்ற வழியுணர்தற்றன்மை
த்தென்றன்முதலாயின வவற்றுளடங்காமையானு மறுத்தலுமுடம்படுதலு
மேவப்பட்டார் கண்ணவாகலானு மறுவகைப்படுமென்று பிறர்மதமேற்கொ
ண்டு கூறினாரென்பது. வினாவாவ தறியலுறவுவெளிப்படுப்பது. அது[மூவகை
ப்படும். அறியான்வினாவும் ஐயவினாவும் அறிபொருள்வினாவுமென] அறியான்
வினா உயிரொத்தன்மைத்தென்பது ஒருபுடையானு மறியப்படாதபொருள் வி
னாவப்படாமையிற் பொதுவகையா னறியப்பட்டுச் சிறப்புவகையா னறியப்
படாமைநோக்கி அறியான் வினாவாயிற்று. ஐயவினா குற்றியோமகனோ தோ
ன்றுகின்ற வுருவமென்பது. அறிபொருள்வினா அறியப்பட்டபொருளையே
ஒருபயனோக்கி அவ்வாய்பாட்டினான்ருன்வினாவுவது. பயன்வேறறிதலும்,

அறிவுறுத்தலுமுதலாயின. கறக்கின்றவெருமை பாலோசினையோவென்பது விஞவழூஉவாம். ஒருபொருள்காட்டி இது நெடிதோ குறிதோ வென்பதுமது. உரையாசிரியர் அறிபொருள்வினவை அறிவொப்புக்காண்டலும் அவனறிவு தான் கோடலும் மெய்யவனைக்காட்டலும் எனவிரித்து ஏனையகூட்டி ஐந தென்றார். இருவகைச்செப்பினு மூவகைவினவினுஞ் செவ்வனிறையுமறியான் வினவுமைய வினவும்வழாநிலையாகலின் வழாஅதோம்ப லென்பதனாற் கொள்ளப்படும். ஏனையவழூஉவமைப்புழிக் காணப்படும். வினவழீஇயினவிடத் தமையாவென் றுரையாசிரியர் கூறினாராலெனின் அற்றன்று யாதெனவருஉம் வினவின்கிளவியெனவும் வன்புறவருஉம் வினவுடை வினைச்சொல்லெனவு முன்னர் வழூஉவமைப்பாராகலான் அது போலியுரையென்க.

௧௪. வினவுஞ்செப்பே வினவெதிர்வரினே.

வினயபொருளை யொருவாற்றான் அறிவுறுத்து வினவிற்கு மறுமொழியாய்வரின் வினவுஞ்செப்பாம் - எ - று. சாத்தா உண்டியோவென்று வினயவழி உண்ணேனோ எனவரும் வினவாய்பாட்டான் வந்ததாயினும் உணபல் என்பது கருத்துபபொருளாகலிற் செப்பெனப்படும். உண்டியோவென்று வினயவழி உண்பல் - உண்ணேனென்றிருது தாஞெனறை வினவுவான் போலக்கூறலின் வழூஉவமைதியாயிற்று.இதுசெப்புவழூஉவமைதியேற்செப்பேவழீஇயினு மெனபுழியடங்குமெனின ஒன்றன்செப்பு ஒன்றற்காவதன்றி வினச்செப்பாயினமையின் வேறுகூறினார்.

௧௫. செப்பேவழீஇயினும் வரைநிலையின்றே, யப்பொருள்புணர்ந் த கிளவியான.

செவ்வனிறையாகாது செப்புவழூஉவரினுங் கடியப்படாது ஒருவாற்றான் வினயபொருட் கியைபுபட்ட கிளவியாதற்கண் எ - று. சாத்தா உண்டியோவென்று வினயவழி நீ யுண்ணென்றும், வயிறுகுத்துமென்றும், பசித்தேனெனவும், பொழுதாயிற்றெனவும் வருமிவை செவ்வனிறையல்லவேனும் வினயபொருளை யொருவாற்றா னறிவுறுத்தலி னமைந்தவாறு கண்டுகொள்க. அஃதேல் இவைதெரிபுவேறு நிலையலுங் குறிப்பிற்றோனறலு மென்புழிக் குறிப்பிற்றோன்றலா யடங்குமாகலி னீண்டுக்கூறவேண்டாவெனி னவ்வாறடங்குமாயினும், செப்பும் வினவும்வழாஅலோம்பலென்றதனை னிவையெல்லாம் வழூவாதலெய்திற்றதனனமைக்கல் வேண்டுமென்பது.

௧௬. செப்பினும் வினவினுஞ் சினைமுதற்கிளவிக், கப்பொருளாகு முறழ்துணைப்பொருளே.

செப்பின்கண்ணும் வினவின்கண்ணுஞ் சினைக்கிளவிக்கு முதற்கிளவிக்கு மூறழ்பொருளுந் துணைப்பொருளும் அவ்வப்பொருளுக் கவ்வப்பொருளேயாம் - எ - று, எனவே சினையுமுதலுந் தம்முண் மயங்கிவருதல் வழூஉவெ

பதாம். உறழ்பொருளாவ தொப்புமைகூறுது மாறுபடக் கூறப்படுவது. இணைப்பொருளாவ தொப்புமை கூறப்படுவது. உ-ம். இவள் கண்ணி னிவள் கண்பெரிய, நும்மரசனி னெம்மரசன் முறைசெய்யும் எ-ம், இவள் கண் ணொக்கு மிவள்கண், எம்மரசனை யொக்கு நும்மரசன்-எ-ம், இவள்கண்ணினி வள்கண்பெரியவோ, நும்மரசனி னெம்மரசன்முறை செய்யுமோ எ-ம். இவள் கண்ணொக்குமோ விவள்கண், எம்மரசனை யொக்குமோ நும்மரசன் எ-ம் வரும். அவன், கோலினுந் தண்ணிய தடமென்றோளே எ-ம். துளித்தலைத் தலைஇயத ளிரன்னோளே எ-ம் - மயங்கி வநதனவழூவாம் பிறவெனின் அவைசெய்யுள் புற்றிவருமுவமவழூவாதலி னீண்டைக்கெய்தா அணியியலுட் பெறப்படும். இம்மகள்கண்ணல்லவோ கயனல்லவோவென வழக்கின்கண்ணு மயங்கிவருமாலெனி னுண்மையுணர்தறகு வினையதன்றி யையவுவமைவாய்பாட்டாற் கண்ணைப் புனைந்துரைத்தல் கருத்தாகலி னன்னவையெல்லா முனாயென்னுஞ் செய்யுளாமென்பது. இந்நங்கைமுலையி னிந்நங்கைகண் ணல்லவென்னுந் தொடக்கத்தன மயக்கமின்மையி னிலக்கணவழக்காம் பிறவெனின் அற்றன்று ஒத்தபண்பு பற்றியன்றே பொருவுவது. கண்ணொடு முலைக்கொத்த பண்பின்மையாற்பொருவுதல் யாண்டையது. ஒத்த பண்புபற்றிய பொருவுதற் கண்ணது இவ்வாராய்ச்சியெனபது. காக்கப்பட்டன செப்புவழாநிலையும் வினாவழாநிலையு மென்பார்செப்பினும் வினாவினுமென்றார். வழாஅலோம்பலென்புழி யடங்குமாயினு நுண்ணுணர்வுடையார்க் கல்லததனு லுணரலாகாமையின் விரித்துக் கூறியவாறு. தன்னின முடித்தலென்பதனாற் பொன்னுந் துகிரு முத்துமணியுமென வெண்ணுங்கா லினமாயபொருளே யெண்ணப் படுமென்பதுகொள்க.

கஎ. தகுதியும்வழக்குந் தழீஇயின வொழுகும், பகுதிக்கிளவி வரை நிலையிலவே.

தகுதிபற்றியும் வழக்குப்பற்றியும் நடக்குமிலக்கணந்திறம்பக்சொற்கடியப்படா எ-று. தகுதியென்பதப் பொருட்குரியசொல்லாற் சொல்லுதனீர்மையன்றென்று அதுகளைந்து நக்கதோா வாய்பாட்டாற்கூறுதல். அது செத்தாரைத் துஞ்சினுரென்றலுஞ் சுடுகாட்டை நன்காடென்றலு மோலையைத் திருமுகமென்றலுங் கெட்டதனைப் பெருகிற்றென்றலுமென வித்தொடக்கத்தன. வழக்கென்பது காரணமின்றி வழங்கற்பாடே பற்றிவருவது. பண்புகொள்பெயராயினும் பண்புகுறியாது சாதிப்பெயராய் வெள்யாடு-வெண்களமர் - கருங்களமரென்று வருவனவும், குடதறுள்ளும் பிறகலத்துள்ளுமிருந்த நீரைச் சிறிதென்றுது சிலவென்றலும், அடுப்பின் கீழ்ப்புடையடுப்பை மீயடுப்பென்றலும், பிறவும் வழக்காறும். பொற்கொல்லா பொன்னைப் பறியென்றலும், வண்ணக்கர் காணத்தை நீலமென்றலு முதலாகிய குழூவின்வந்த குறுநிலவழக்கும், கண்கழீஇவருதும்,கான்மே னீாபெய்துவருதுமென்னுந் தொடக்கத் திடக்கரடக்குந் தகுதியென்றும், மரூஉமுடிபை வழக்காறென்று முனாயாசிரிய ரமைத்தாராலெனின் குழூவின்வநத குறுநிலவழக்

குச சானரோ வழககினகண்ணு மவாசெயயுட்கணணும வாராமையினமை ககப படாவாகலானும, இடககரடக கவையலகிளவியெனவு மறைககுஙகா லெயெனவு முனனரமைககப படுதலானு மரூஉமுடி பெழுததிகாரததுக கூ றபபடடமையானு மவாககது கருததனறெனபது. கருமைமுதலாயின வொ ருஙகரன வனமையிற காககையொடு சாததிக களமபழததைவிதநத துணை யலலது காககைககு வெணமைநேராமையிற காககையிறகரிது களமபழமெ னபுழிக கரிதுவெளிதாயிறறனறு. சிறககுமேறகெனபன வரையறையினறி யொனறனொடு சாததிப பெறபபடுவனவாகலி னொனறறகுக கீழபாலதனை ட பிறிதொனறறகு மேலபாலதெனறலும வழுவனறு. சிறுவெளவாயெனப திடுகுறி. அதனுனிவை வழககாறென வமைககபபடாவாயினு முனையாசிரி யா பிறாமதமுணாததிய கூறினுரெனபது. தததமககுரிய வாயபாடடானன றிய பிறவாயபாடடாறகூறுதல வழுவாயினு மமைகவென மரபுவழு வமை ததவாறு.

௧௮. இனசசுடடிலலாப பணபுகொளபெயாககொடை, வழக காறலல செயயுளாறே.

இனபபொருளைசசுடடுதலினறிய பண்படுதது வழஙகபபடுமபெயா வழ ககுநெறியலல செயயுணெறி. எ - று. செஞஞாயிறறு நிலவுவேணடினும வெ ண்டிஙகளுள வெயிலவேணடினும எனவரும. பலபொருடகுப பொதுவாகிய சொலலனறே யொருபொருடகுச சிறநத பண்பான விசேடிககபபடுவது. ஞாயிறு திஙகளெனபன பொதுசசொ லனமையிற செஞ்ஞாயிறெனறும வெணடிஙகளெனறும விசேடிககபபடாவாயினுஞ செயயுட்கணணியாய சிற றலி னமைககவெனறா. பெருஙகொறறன - பெருஞசாததன என இலகுண மடுதது வழககினகணணுமினஞசுடடாதுவருதலிறசெயயுளாறெனறல கிரம பாதெனின அவையினஞ சுடடாமையின வழுவாயினவலல இலகுணமடு ததலின வழுவாயின. இனஞசுடடலாவது இனததைச சுட்டியவறறினின்று ம விசேடிககபபடுதல. வெணமைமுதலாயின விசேடிததலாவது அக்குணமி லலா வினபபொருளினீககி யககுணமுடையதனை வரைநது சுடடுவிததலன றே. சுடடபபடுவதனக ணககுணமிலலையாயின வரைநது சுட்டுவிககுமாறெ னனை! அதனான விசேடிககறபாலது விசேடியாது நினறதனறாகலின ஈண் டைககெயதா. வழககினுஙகிய வுயாசொறகிளவியெனபுழி யொனறென முடி ததலெனபதனு னமைககபபடும. குறுஞசூலி - குறுநதடியெனனுந தொடக கததன சூலிதடியெனபபிரிநது நிலலாமையிற பணபுகொளபெய ரொனபப டா. பணபடாது வடவேஙகடம - தெனகுமரி - முட்டாழை - கோடசுறு எனததிசையு முறுபபுநதொழிலு முதலாய வடையடுததினஞ சுடடாதுவரு வன ஒனறெனமுடிதத லெனபதனுற செயயுளாறென வமைததுககொளள பபடும. ஒனறனதாறறலா னொனறுபெறபபடுதலின வழககாறலலவெனறு முஞ செயயுளாறெனறுனுங கூறவமையுமெனி னுயததுணாவது சொலலில

வழியெனமறுக்க. பண்புகொள்பெய ரினங்குறித்து வருதன்மரபு. அம்மரபு வழக்கின்கண் வழுவற்கவென்றுஞ் செய்யுட்கண் வழுவமைக்கவென்றுங் கா த்தவாறாயிற்று.

கக. இயற்கைப்பொருளை யிற்றெனக்கிளத்தல்.

தன்னியல்பிற் றிரியாதுநின்றபொருளையதனியல்புகூறுங்கா லாக்கமு ங் காரணமுங் கொடாதிற்றெனச் சொல்லுக. எ - று. இயல்பாவது பொ ருட்குப் பின்றோன்றா துடனிகழுந் தன்மை. உ - ம். 'நிலம்வலிது - நீர்தண் ணிது - தீவெய்து - வளியுளரும் - உயிருணரும் - எனவரும். இற்றென்பது வினைக்குறிப்பு வாய்பாடாயினும் உளரும் - உணரும் என்னுந் தெரிநிலைவினை யு மிற்றென்னும் பொருள்படநிற்றலி னிற்றெனக்கிளத்தலேயாம். நிலம்வலி தாயிற்றென வியற்கைப்பொருளாக்கம்பெற்று வருமாலெனின் கல்லுமிட்டி கையும்பெய்து குற்றுச்செய்யப்பட்டநிலத்தை வலிதாயிற்றெனி னிது செயற் கைப்பொருளேயாம். நீர்நிலமுஞ்சேற்றுநிலமு முன்மிதித்துச்சென்று வன்னி லமிதித்தால் நிலம் வலிதாயிற்றென்றவழிமெலிதா யதுவலிதாய வேறுபட்ட தென வாக்கம வேறுபாடு குறித்துநிறறலி னியறகைப்பொருளாக்க மொடு வநததன்றாம். அல்லது நிலத்திறகு வன்மைவிகாரமென்றோதாது நிலம் வலி தாயிற் றென்னுமாயிற் றிங்கள கரிதென்பதுபோலப் பிறழவுணர்நதார் வழ க்காயாராயப்படாதென்க.

உ௦. செயற்கைப்பொருளை யாக்கமொடுகூறல்.

காரணத்தாற் றன்மைதிரிந்தபொருளை யத்திரிபுகூறுங்காலாக்கங்கொ டுத்துச் சொல்லுக. எ - று. ஆக்கமொடுகூற லென்பதனாற் றிரிபுகூறுதல்பெ ற்றாம். என்னை? அதன்கணல்லது வாராமையின்] இயறகைப்பொருள் செய ற்கைப்பொருளென்பன விருபெயர்ப் பண்புத்தொகை.

உக. ஆக்கந்தானே காரணமுதற்றே.

செயற்கைப்பொருளை யாக்கமொடு கூறுங்காற் காரணத்தை முற்கூறிஅ தன்வழி யாக்கங்கூறுக. எ - று. தானேயென்பது செய்யுட்சுவை குறித்துநி ன்றது. கடுக்கலநதகைபிழியெண்ணெய் பெற்றமையான் மயிர்நல்லவாயின, எருபபெய்திளங்களைகட்டு நீகால்யாத்தமையாற் பைங்கூழ் நல்லவாயின, நீர்கலத்தலா னிலமெலிதாயிற்று, தீசசார்தலா னீர்வெய்தாயிற்று எனவரும். மயிர்நல்ல - பயிர்நல்லவெனச் செயறகைப்பொரு ளாக்கம்பெறாது வந்ததா லெனின் அந்நன்மைபொருட்குப் பின்றோன்றாதுடன்றோனறிற்றே லியற் கையேயாம். அவ்வாறன்றி முன்றீயவாய்ப் பினநல்லவாயினவேனுந் தீயநி லைமை சாறாதான் மயிர்நல்ல - பயிர்நல்லவென்றாற்படுமிழுக்கென்னை! அது செயற்கையாவதுணர்ந்தா னுக்கங்கொடாது சொல்லினன்றே வழுவாவதெ ன்க. செயற்கைப்பொருளை யாக்கமுங் காரணமுங் கொடுத்துச்சொல்லுக வென்பதே கருத்தாயிற் சூத்திரமொன்றாகற் பாற்றெனின் அவ்வாறோதின்

ஆக்கமுங் காரணமுஞ் செயற்கைப்பொருட்கிணைத்தவாயினவென்பது பட்டுக்காரணமின்றியும் போக்கின்றென்பதனோடு மாறுகோடலானுங் காரணஞ் செயற்கைப்பொருளதோவாக்கத்ததோவென வையுறப்படுதலானுமாக்கந்தானே காரணமுதற்றெனப் பிரித்துக்கூறினானென்பது. இயற்கைப்பொரு ளாக்கமுங் காரணமும் பெறாதுவருதலுஞ் செயற்கைப்பொருளவை பெற்றுவருதலு மிலக்கணமெனவே யிவ்வாறன்றி வருவன மரபுவழுவென்பதாம். நுண்ணுணர்வுடையோர்க்குத் தம்மரபினவேயென வடங்குவவாயினு மேனையுணர்வினோர்க் கிவ்வேறுபா டுணரலாகாமையின் விரித்துக்கூறினார்.

௨௨. ஆக்கக்கிளவி காரணமின்றியும், போக்கின்றென்ப வழக்கினுள்ளே.

காரணமுதற்றெனப்பட்டவாக்கச்சொல்காரணமின்றிவரினுங் குற்றமின்று வழக்கினுள் எ - று. மயிர்நல்லவாயின - பயிர்நல்லவாயின - எனவரும். வழக்கினுட்காரணமின்றியே வருமெனவே செய்யுளுட்காரணம் பெற்றே வருமென்பதாம். பரிசிலர்க்கருங்கலனல்கவுங்குரிசில்வலியவாகுநின்றோய்தடக்கை - எ - ம். குருதிபடிந்துண்ட காகமுருவிழந்து குக்கிற்புறத்த சிரல்வாய - எ - ம். கருமுருகன் சூடியகண்ணி திருநுதாலின்றென்குரற் கூந்தற்பெய்தமையாற்பண்டைத்தன்சாயலவாயினதோள் - எ - ம் காரணம் பெற்று வந்தவாறு கண்டுகொள்க. குக்கிற்புறத்த சிரல்வாய எனவாக்கமின்றி வந்தனவாலெனின் தொகுக்கும்வழித் தொகுத்தலென்பதனா னுண்டாக்கந் தொக்குநின்றதென்பது. அரியகானஞ் சென்றோர்க்கெளியவாகிய தடமென்றோளே - எ - ம் - நல்லவையெல்லாந் தீயவாந்தீயவு நல்லவாஞ்செல்வஞ்செயற்கு. எ - ம் - செயற்கைப்பொருள்செய்யுளுட்காரணமின்றிவந்தனவாலெனின் கனவுக்காலத்தரியனவிக்காலத்தெளியவாயினவென்பது கருத்தாகலானக்காலங்காரணமென்பது பெறப்படுதலானும், ஊழானென்பது அதிகாரத்தான் வருமாகலானு மவைகாரணமின்றிவந்தனவெனப் படாவென்பது.

௨௩. பான்மயக்குற்ற வையக்கிளவி, தானறிபொருள்வயிற் பன்மைகூறல்.

திணைதுணிந்து பால்துணியாத வையப்பொருளை யவ்வத்திணைப் பன்மையாற்கூறுக. எ - று. கிளவியென்ப தீண்டுப்பொருளை. ஐயப்பொருளாவது சிறப்பியல்பாற்றோன்றாது பொதுவியல்பாற் றோன்றியபொருள். உ - ம். ஆண்மகன்கொல்லோ பெண்டாட்டிகொல்லோ விஃதோதோன்றுவார். எ- ம். ஒன்றோ பலவோசெய்புக்கன - எ - ம் வரும். திணைவயினென்னாது தானறிபொருள்வயினெனப்பொதுப்படக்கூறியவதனான் ஒருவன்கொல்லோ பலர்கொல்லோ கறவையுய்த்தகள்வர் - எ - ம், ஒருத்திகொல்லோ பலர்கொல்லோ விக்குருக்கத்திநீழல்வண்டலயர்ந்தார் - எ - ம் திணையோடாண்மை பெண்மை துணிந்தபன்மையொருமைப்பாலையமுங்கொள்ளப்படும். ஒருமையாற்கூறின் வழுப்படுதனோக்கிப்பன்மைகூறலென வழாநிலைபோலக்கூறினாரேனு மொரு

மையைப்பன்மையாற்கூறுதலும் வழுவாதலினையப்பொருண்மேற்சொன்னிக ழமாறுணர்த்தியமுகத்தாற் பால்வழு வமைத்தவாறும்.

உச. உருபெனமொழியினு மஃறிணைப்பிரிப்பினு, மிருவீற்றுமுரித்தே சுட்டுங்காலை.

உருபெனச் சொல்லுமிடத்தும் ஒருமையும் பன்மையுமாகப் பிரிக்கப்படு மஃறிணைப் பொதுச்சொற்கண்ணு மிவ்விருகூற்றினுமையப் புலப்பொதுச்சொல்லாதலுரித்து - எ - று. எனவே ஆண்மகன்கொல்லோ பெண்டாட்டிகொல்லோ தோன்றுநின்றவுருபு எ - ம். ஒன்றுகொல்லோ பலகொல்லோ செய்புக்கவுருபு எ - ம், குற்றிகொல்லோ மகன்கொல்லோ தோன்றுநின்றவுருபு - எ - ம், ஒன்றுகொலலோ பலகொல்லோ செய்புக்கபெற்றம் - எ - ம்- சொல்லுகவென்பதாம். ஐயக்கிளவியென்பததிகாரத்தாற்பெற்றும். உருபினுமென்னுதுருபெனமொழியினுமென்றதனு னுருபின்பொருளவாகியவடிவுபிழம்பு பிண்டமென்னுந் தொடக்கத்தனவுங்கொள்க. பன்மைகூற லுயர்திணைப் பாலையததிற் குரித்தென்றும் - உருபெனமொழிதல் திணையையத்திற்குரித்தென்று முறையாசிரியா கூறினாரலெனின் அவையவற்றிற்கே யுரியவாயினஃறிணைப் பிரிப்பென்றுற்போல வுயர்திணைப் பான்மயக்குற்றவென்றுந் திணையத்தென்றும் விதநதோதுவராசிரியர் அவ்வாறோதாமையானும் நடையுளவை பொதுவாய் வருதலானு மவைபோலியுளாயென்க.ஒருவன்கொல்லோ பலர்கொல்லோவென்றற்றொடக்கத் துயர்திணைப் பன்மையொருமைப்பாலையத்திற்குருபுமுதலாயினவேலாமையுந்திணையையத்திற்கு மேனைப்பாலையத்திற்குமேற்புடைமையுஞ்சுட்டி யுணர்கவெனபது போதரச்சுட்டுங்காலையென்றார். சுட்டுதல் கருதுதல்.

உரு. தன்மைசுட்டலு முரித்தெனமொழிப, வன்மைக்கிளவி வேறிடத்தான.

ஐயுற்றுத்துணியும்வழியன்மைக்கிளவியன்மைத்தன்மையைச் சுட்டிநிற்றலு முரித்தென்றுசொல்லுவர் துணிநததழீஇக்கொள்ளப்பட்ட பொருளின்வேறாய பொருளிடத்து எ - று. என்றது குற்றிகொல்லோ மகன்கொல்லோ வென்றானும், ஒருவன்கொல்லோ ஒருத்திகொல்லோவென்றானும், ஒன்றுகொல்லோ பலகொல்லோவென்றானும ஐயநிகழ்ந்தவழித்துணிதலுமுண்டு - பிறநடையுட்டுணிந்தவழி மறுக்கப் படும்பொருண்மே லன்மைத்தன்மையேற்றினுமமையும் - எ - று. மகனென்று துணிந்தவழிக்குற்றியன்றுமகனெனவும், குற்றியென்று துணிந்தவழி மகனல்லன் குற்றியெனவும் - ஆண்மகனெனத்துணிந்தவழிப் பெண்டாட்டியல்லள் ஆண்மகனெனவும், பெண்டாட்டியென்று துணிந்தவழி ஆண்மகனல்லன் பெண்டாட்டியெனவும் - ஒன்றென்று துணிந்தவழிப் பலவல்ல ஒன்றெனவும், பலவென்று துணிந்தவழி ஒன்றன்று பலவெனவும் மறுக்கப்படும்பொருண்மேல் அன்மைக்கிளவி

யன்மைத் தன்மையைச்சுட்டி நின்றவாறு. உம்மை எதிர்மறையாகலான் வே றிடத்துச் சுட்டாமையே பெரும்பான்மையென்பதாம். ஆகவே யிவ்வுருபுகுற் றியன்று மகனென ஐயப்புலமாகிய பொதுப்பொருண் மேலானும், குற்றியல் லன் மகனெனத் துணிபொருண் மேலானும் அனமைக்கிளவி அன்மைசுட்டி நிற்றல் பெரும்பான்மை யென்பதாம். என்னை! வேறிடத்துச் சுட்டாமையாவ தீண்டுச் சுட்டலேயாகலான்] குற்றியன்று மகனென்றவழி மகனென்பது நின்றுவற்றுமெனின் எவ்வயிற்பெயரும் வெளிப்படத்தோன்றி யவ்வயினிலே யல் செவ்விதென்பவென்பதனு னெழுவாய் வெளிப்படாதுநிற்றலுமுண்மை யான் வெளிப்படாதுநின்ற விவனென்னுமெழுவாய்க் கதுபயனிலையாகலி னி ன்றுவற்றுதல் யாண்டையதென்க. அல்லனவற்றிற்கு மீதொக்கும். குற்றிய ல்லனென்புழிக் குற்றியென்ப தல்லனென்னுஞ் சொலலொடியைந்தவா றெ ன்னையெனின் இவ்வுருபு குற்றியாமென்றவழி யாமென்றதனொடு குற்றியெ ன்பதூஉ மெழுவாயாய்நின்றே யியைந்தாற்போல விவன்குற்றியல்லனென் புழியாமென்பத னெதிர்மறையாகிய வன்மைக்கிளவியொடுங் குற்றியென்ப தெழுவாயாய்நின்றே யியையுமென்பது. எழுவாயா யியைதலின்றேயாயி ன்நீயல்லனென்புழி நீயென்பது வேற்றுமைக்கேற்ற செய்கைபெறுது நின்ற தென்க.

உசு. அடைசினைமுதலென முறைமூன்று மபங்காமை, நடைபெ ற்றியலும் வண்ணசசினைச்சொல்.

பண்புச்சொல்லுஞ் சினைச்சொல்லு முதற்சொல்லுமென மூன்றுங் கூறப் பட்ட முறைமயங்காமல் வழக்கைப்பொருந்திநடக்கும் வண்ணச்சொல்லொ டுதொடர்ந்த சினைச்சொல்லையுடைய முதற்சொல் - எ - று. வடிவுமுதலாகிய பிறபண்புமுளவேனும் வண்ணப்பண்பினது வழக்குப்பயிற்சிநோக்கி வண்ண ச்சினைச்சொலென்முர். உ - ம். செங்காலுரை - பெருந்தலைச்சாத்தன் - என வரும் - கால்செந்நாரை - தலைபெருஞ்சாத்தன் எனமுறைமயங்கிவரின் மர புவழுவாமென்க. வழக்கினுண் மயங்காதுவருமெனவே, கவிசெந்தாழைக் கு விபுறத்திருந்த செவிசெஞ்சேவலும் பொருவலும் வெருவா வாய்வன்காக்கை யுங் கூகையுங்கூடி எனச்செய்யுளுண்மயங்கியும் வரப்பெறுமென்றவாறும். செவிசெஞ்சேவல் - வாய்வன்காக்கை - என்பன செஞ்செவிச்சேவல் - வல் வாய்க்காக்கையென்னும் பொருள்படநின்றமையின் வண்ணச்சினைச்சொன் மயக்கமாயின. அஃதேற்சினையடையாகிய செம்மையும்வன்மையும் முதலடை யாயினவா றென்னையெனின் சினையொடு முதற்கொற்றுமை யுண்மையா ன வைமுதலொடு மியைபுடையவென்பது. பெருந்தோட் சிறுநுசுப்பிற் பேரம ர்க்கட்பேதையென்புழி மூன்றும்வழிமுதல்கிடவாது பின்னுமடையுஞ்சினையு ம் புணர்த்தமையான் வண்ணச்சினைச்சொற் செய்யுளுண்மயங்கிவந்ததென் றுரையாசிரியர்கூறினாராலெனின் மூன்றும்வழிப்புணர்க்கப்படும் பேதையெ ன்னு முதற்சொல் பேரமர்க்கணென்னுந் தொகையொடுவேற்றுமைப் பொரு ள்படத்தொக்கதொக்க - சிறுநுசுப்பென்னுந்தொகையொடுமப்பொருள்பட்த்

தொக்கொருசொல்லாய்ப் பெருந்தோட்பல்யாகசாலைமுதுகுடுமிப் பெருவழுதியென்றாற்போல மூன்றும்வழிப் பிறசொல்லடுத்துப் பேதையென்னு முதல்கிடந்ததெனவேபடுதலின் மயக்கமின்மையானவர்க்கது கருத்தன்றென்க. அன்றிப்பெருந்தோண் முதலாகியமூன்றும் பலபெயரும்மைத் தொகைபடத் தம்முட்டொக்கொருசொல்லாய்ப் பின்பேதையென்பதனொடு வேற்றுமைத்தொகைபடத் தொக்கனவெனினும், அவை உம்மைத் தொகைபடத்தொகாதுநின்று பேதையென்பதனொடு வேற்றுமைத்தொகைபட வொருங்குதொக்கனவெனினுந் தம்முளியையாது பேதையென்பதனொடியைதலி னுண்டு மயக்கமின்மையறிக. அஃதே லிவ்வாறுவருதல் வழக்கிற்குமுரித்தோவெனின் அடுக்கிய வடையுஞ்சினையும் பொதுமைநீக்குதற்கன்றி யணிகுறித்து நிற்றலிற் செய்யுட்கேயுரிததென்பது. சிறுபைந்தூவியெனச் சினையொடுகுண மிரண்டடுக்கிவருதல் செய்யுட் குரித்தென்றும், இளம்பெருங் கூத்தனென முதலொடு குணமிரண்டடுக்கிவருதல் வழக்கிற்குரித்தென்றும் பிறர்மதமேற் கொண்டுகூறினார். ஒன்றாகப் பலவாக வினஞ்சுட்டாதன செய்யுட்குரியவாம்; இனஞ்சுட்டநின்றன வழக்கிற்குரியவாமென்பதே யுரையாசியர்கருத்தென்க. அன்றிப் பிறநூன்முடிந்தது தானுடம்படுதலென்பதனாற் சினையொடுகுணமிரண்டடுக்கல் செய்யுளாறென்று கொள்ளினுமமையும். முதலொடுகுண மிரண்டடுக்கல் வழக்கியல்; சினையொடடுக்கல் செய்யுளாறே யென்றாராகலின்] வண்ணச்சினைச்சொ லென்றதனான் வண்ணமுஞ் சினையுமுதலுங் கூறுதற்கண்ண திவ்வாராய்ச்சியென்பதாம். எனவே இளம்பெருங்கூத்தன் - பெரும்பலாக்கோடு - என்னுந்தொடக்கத்தன வேண்டியவாறு வரப்பெறுமென்றவாறு. மயங்காதுவருகவென மரபுவழுக்காத்தவாறு.

உஎ. ஒருவரைக்கூறும் பன்மைக்கிளவியு, மொன்றனைக்கூறும்
பன்மைக்கிளவியும், வழக்கினாகிய வுயர்சொற்கிளவி, யில
க்கணமருங்கிற் சொல்லாறல்ல.

ஒருவனையு மொருத்தியையுஞ் சொல்லும் பன்மைச்சொல்லும், ஒன்றனைச்சொல்லும் பன்மைச்சொல்லும் வழக்கின்கணுயர்த்துச் சொல்லுஞ் சொல்லாம் இலக்கணமுறைமையாற் சொல்லுநெறியல்ல - எ - று. உ - ம். யாம்வந்தேம் - நீயிர்வந்தீர் - இவர்வந்தார எனவரும். உயர்சொலுயர்க்குஞ் சொல். உயர்சொற்கிளவியென்புழிக் கூறியதுகூறலன்மை பண்புத்தொகையாராய்ச்சிக்கட்சொல்லுதும். தாம்வந்தார் தொண்டனாரெனப் பன்மைக்கிளவி யிழித்தற்கண்ணும் வந்ததாலெனின் ஆண்டுயர்சொற்றானே குறிப்பு நிலையாயிழிபு விளக்கிற்றென்பது. இலக்கணமருங்கிற் சொல்லாறல்லவென்றதனா னிலக்கணமன்மையும், வழக்கினாகிய வுயர்சொற்கிளவியென்றதனான் வழுவன்மையுங்கூறினார். கூறவே வழுவமைதியென்றவாறாம். அஃதேல் வழக்கினாகிய வுயர்சொற்கிளவியெனவே வழுவமைதியென்பது பெறுது மிலக்கணமருங்கிற் சொல்லாறல்லவெனல் வேண்டாவெனி னிங்ஙனங்கூறிற்செய்யுள் வரைந்தவாறோ வழுவமைத்தவாறோவென வையமாக்கலி னவ்வாறு கூறல்

வேண்டுமென்பது. பன்மைக்கிளவியுமெனப் பொதுவகையாற் கூறினாரேனு முயர்த்தற்கண் வழங்கப்பட்டுவரு முயர்திணைப்பன்மையும் விரவுப்பன்மையு மே கொள்ளப்படுமென்றற்கு வழக்கினாகியவென்றார். தன்னினமுடித்த லெ ன்பதனா னெருத்தையுமாவையும் எந்தைவந்தான் - எம்மனைவந்தாள் - என வுயர்திணையா யுயர்த்துவழங்கலும், ஒன்றென முடித்தலென்பதனாற் கன்னி ஞாழல்-கன்னியெயில்-எனவஃறிணையாய்நின் றுயர்திணைவாய்பாட்டாற்கூற ப்படுதலும், பண்புகொள் பெயர்க்கொடை வழக்கினகத்தும் பெருங்கொற்ற ன் - பெருஞ்சாத்தன்என இல்குணமடுத்துயர்சொல்லாய் வருதலுங்கொள்க.

உஅ. செலவினும்வரவினுந் தரவினுங்கொடையினு, நிலைபெற த்தோன்று மந்நாற்சொல்லுந், தன்மைமுன்னிலை படர்க் கையென்னு, மம்மூவிடத்து முரியவென்ப.

செலவுமுதலாகிய நான்குதொழிற்கண்ணு நிலைபெறப் புலப்படாநின்ற வந்நான்குசொல்லுந தன்மை முன்னிலைபடர்க்கையென்னு மம்மூவிடத்திற்கு முரியவாய்வரும். எ - று. செலவுமுதலாகியதொழிற்கட் சிறப்புவகையா னி லைபெறாது பொதுவாய்வரு மியங்குதலீதலென்னுந் தொடக்கத்தனவற்றினீ க்குதற்கு நிலைபெறத்தோன்றுமென்றார். முற்றுமெச்சமுந் தொழிற்பெயருமா கிய தொழில்பற்றிவரும்வாய்பாடு பலவாயினுமவையெல்லா மிநநான்குதொ ழிலும்பற்றித் தோன்றுதலி னான்குசொல்லென்றார். பொருள்வகையான் மு ன்னறியப்பட்டமையானந்நாற்சொல்லுமென்றார். இச்சூத்திரத்து ளிங்குமு தலாகிய தன்மைக்கண்ணு மாங்குமுதலாகிய படாக்கைக்கண்ணு மடக்கப் பட்டன. வினைச்சொன் மூன்றிடத்திற்கு முரியவாதல் வினையியலுட் பெறப் படுதலி னீண்டுக்கூறல்வேண்டாவெனின் ஆண்டுப்பாலுணர்த்து மீற்றானிடத் திற் குரிமைகூறினா ரீண்டீற்றானன்றிச் செல்வுமுதலாயின முதனிலைதாமே யி டங்குறித்து நிற்றலுடைமையா னிவ்வேறுபா டாண்டுப் பெறப்படாமையி னீ ண்டுக்கூறினாரென்பது. அஃதேற்றருசொல் வருசொல்லாயிருகிளவியுந தன் மைமுன்னிலை யாயீரிடத்தபடர்க்கையிடத்தகொடைச்சொல்லுஞ் செலவுச் சொல்லுமெனவோதுக; இச்சூத்திரம் வேண்டாவெனின் அங்ஙனமோதினிட ஞ்சுட்டுமுதனிலை யிந்நான்குமேயென்னும் வரையறை பெறப்படாமையினி து வேண்டுமென்பது. அஃதேற்போதல் புகுதலென்னுந் தொடக்கத்தனவு மி டஞ்சுட்டுதலினான்கென்னும் வரையறை யமையாதெனின் அவை யிக்காலத்து ச் சிலவிடத்துப்பயின்றுவருமாயினு மூன்றிடத்திற்கும் பொதுவாகலினன்றே யாசிரியரந்நாற்சொல்லுமெனவிவற்றையே வரைந்தோதுவாராயிற்றென்பது.

உகூ. அவற்றுள், தருசொல்வருசொ லாயிருகிளவியுந், தன்மை முன்னிலை யாயீரிடத்த.

கூறப்பட்டநான்குசொல்லுட் டருசொல்லும் வருசொல்லுமாகியவிரண் டுந் தன்மை முன்னிலையாகிய விரண்டிடத்திற்குமுரிய - எ - று. உ-ம். எனக் குத்தந்தான் - நினக்குத்தந்தான் - என்னுழைவந்தான் - நின்னுழைவந்தான் -

எ - ம், ஈங்குவந்தான் எ - ம் வரும். ஈற்றானன்றித் தரப்படும்பொருளையேற் பான் தானுமுன்னின்றானு மாகலானும், வரவுத்தொழில் தன்கண்ணுமுன்னின் றான்கண்ணுஞ் சென்று முடிதலானு மவ்விருசொல்லுந் தன்மைமுன்னிலைக் குரியவாயினவாறு கண்டுகொள்க. நிலைபெறத்தோன்று மந்நாற்சொல்லுந் தன்மைமுன்னிலை படர்க்கையென்னுமம் மூவிடத்துமுரியவெனறு மூன்றிடத்திற் கும் வரைவின்றியாமெனவுங் கொள்ளவைத்தமையாற் பெருவிறலமரர்க்கு வென்றிதந்த - எ - ம் - தூண்டிலவேட்டுவன் வாங்கவாராது - எ - ம் - மயங் கிவருவனவு மமைக்கப்படும். அஃதேற்படர்க்கைச்சொன்மயக்கமு மெய்து மாலெனின அஃதெச்சவியலுட்பெறப்படுதலி னீண்டுக்கொள்ளப்படாதென்க. ஒருவன சேய்நிலத்துநின்று மணிநிலத்துப் புகுந்தானாயிற் சேய்நிலநோ க்கவணிநில மீங்கெனப்படுதலின் அவன்கண்வந்தான்-ஆங்குவந்தான் என்பன விலக்கணமேயாம. இந்நான்கும் கொடைப்பொருளவென் றுரையாசிரியர்கூ றினாராலெனின் தூண்டில்வேட்டுவனவாங்க வாராதென்பதனை யமைத்தாரா கலி னு புகுக்கது கருத்தன்றெனக. தரவு வரவையுணாந்துவனவற்றைத் தரு வதும் வருவதுமபோலத் தருசொல வருசொலெனப்பட்டன.

௩௰. ஏனையிரண்டு மேனையிடத்த.

செலவுச்சொல்லுங் கொடைச்சொல்லும் படர்க்கைக்குரிய - எ - று. உ-ம். அவன்கட்சென்றான்- அங்குச்சென்றான் - அவற்குக்கொடுத்தான - என வரும. செலவுக்தொழில்படாக்கையானகட்சென றுறுதலானுங் கொடைப பொருளேற்பான படாக்கையானாகலானு மீரற்றானன்றியிவ்விருசொல்லும்பட ாக்கையிடத்திற்குரியவாயினவாறுகண்டுகொள்க.

௩௰௧. யாதெவனென்னு மாயிரு கிளவியு, மறியாப்பொருள்வயிற் செறியத்தோன்றும்.

யாதெவனென்னுமிரண்டுசொல்லுமறியாபபொருளிடத்துவினாவாயாப்பு றத்தோன்றும் - எ - று. உ - ம். இச்சொற்குப்பொருளயாது - இச்சொற்குப் பொருளெவன் எனவரும். எவ்வகையானு மறியாப்பொருள்வினாவப்படா மையினீண்டறியாப்பொருளென்றது பொதுவகையானறியப்பட்டுச் சிறப்பு வகையானறியப்படாதபொருளையாம. யா-யாவை- யாவன் - யாவள் - யாவ ர் - யார் - யாண்டு - யாங்கு - என்னுந்தொடக்கத்தன திணையும்பாலுமிடமுமு தலாகிய சிறப்புவகையானுஞ்சிறிதறியப்பட்டபொருளவாகலின அறியாப் பொருள்வயிற்செறியத்தோன்றாமையா னிவற்றையேவிதந்தறியாப்பொருள் வயிற்செறியத்தோன்றுமென்றார. இவையுந்திணையும்பாலுங்குறித்து வருதலி ற்சிறப்புவகையானுமறியப்பட்ட பொருளவேயன்றோவெனின அன்றுஇச்சொ ற்குப்பொருள்யாது எவனெனறுவினாயவழியிருப்பானும் அஃறிணையொருமை யும பொதுமையுந்துணிந்தவறறுட்பகுதி யறிதற்குவினாவுகின்றா னல்லன்பொ துவகையான்வினாவுகின்றானென்றுணருமாகலின்.] அவ்வாறுதல்வழக்கினைத்

துவினாவுவானது மிறுப்பானதுங்குறிப்பொடுபடுத்துணர்க. முன்னர்வழுவமைத்தற்கவையின்னபொருட்குரியவெனஅவற்றதிலக்கணங் கூறியவாறு.

௩௨. அவற்றுள், யாதெனவரூஉம் வினாவின்கிளவி,யறிந்தபொருள்வயினையந்தீர்தற்குத், தெரிந்தகிளவியாகலுமுரித்தே.

கூறப்பட்டவிரண்டனுள்யாதென்னும் வினாச்சொல்லறியாப்பொருள் வினாவாதலேயன்றியறிந்தபொருட்கணையநீக்குதற்காராய்ந்த சொலலாதலுமுரித்து. எ - று. உ-ம். இம்மரங்களுட்கருங்காலியாது - நம்மெருதைந்தனுட்கெட்டவெருதியாது எனவரும். நமருள்யாவர்போயினார் - அவற்றுளெவ்வெருதுகெட்டது - எனப்பிறவுமறிந்தபொருள்வயினையந்தீர்தற்குத்தெரிநதகிளவியாய்வருதலினவையுமீண்டமைக்கற்பாலவெனின் அவையறிந்தபொருள்வயினையந்தீர்தற்கல்லதியாண்டும்வாராமையினீண்டமைக்கப்படாவென்பது. இதனான்வினாவழுவமைத்தார.

௩௩. இனைத்தெனவறிந்த சினைமுதற்கிளவிக்கு, வினைப்படு தொகுதியி னும்மைவேண்டும்.

கேட்போரா னித்துணையென்றறியப்பட்ட சினைக்கிளவிக்கு முதற்கிளவிக்கும் வினைப்படுதொகுதிக்க ணும்மைகொடுத்துச்சொல்லுக. எ - று. பன்னிருகையும் பாற்படவியற்றி - எ-ம், முரசுமுழங்குதானை மூவருங்கூடி - எ-ம் வரும். அறிந்த சினைமுதற்கிளவியெனவே முன்னறியப்படாக்கால் முருகற்குக் கைபன்னிரண்டு - தமிழ்நாட்டிற்கு வேநதர்மூவர் - எனவுமமைபெறாது வருமென்பதாம். ஐநதலைநாக முடன்றது - நான்மறைமுதல்வர்வநதார் - என்புழி இனைத்தெனவறிந்த சினைமுதற்கிளவியாயினும் வினைப்படுதொகுதி யன்மையி னும்மைபெறாவாயின. அஃதேற் பன்னிருகையு மென்புழியுந தொகுதிப்பெயர் வினையொடுதொடராது கையென்பதனொடொட்டிநிற்றலின் வினைப்படுதொகுதியன்றாம்பிறவெனின் ஒட்டிநின்றதாயினு மைந்தலைநாகம் நான்மறைமுதல்வரென்பனபோலா திருசொல்லு மொருபொருண்மேல்வருதலிற் கையென்பதனொ டியைந்த வியற்றியென்னும்வினை தொகுதிப் பெயரொடுமியைந்ததாம். அதனா னதுவினைப்படுதொகுதியாமென்பது. அஃதேற்கண்ணிரண்டுங்குருடு - எருதிரண்டுமூரி எனப்பெயர்கொண்டவழி யும்மை பெறுமாறென்னையெனின் பெயராக வினையாகமுடிக்குஞ் சொல்லொடுபடுதலை யீண்டு வினைப்படுதலென்றாராகலின் அவையும் வினைப்படுதொகுதியாமென்க. ஐந்தலை-நான்மறையென்பனவற்றிற்குநாகமுதல்வரென்பன முடிக்குஞ்சொல் லன்மையினவையும் வினைப்படுதொகுதியாகாமையுணர்க. சிறப்புடைப்பொருளைத்தானினிதுகிளத்தலென்பதனாற் சினைமுதற்கிளவியென்றாராயினுஞ் சிறவாத பண்புமுதலாயினவுங் கொள்ளப்படும். சுவையாறுமுடைத்திவ் வடிசில் கதியைந்து முடைத்திக்குதிரை - எனவரும். இருதோட்டோழர்பற்ற எ-ம், ஒண்குழையொன்றொல்கி யெருத்தலைப்ப - எ-ம் உம்மையின்றி வந்தனவாலெனின் ஆண்டும்மைசெய்யுள் விகாரந்தாற்றொக்குநின்றன வென்பது.

௩௪. மன்னாப்பொருளு மன்னவியற்றே.

இல்லாப்பொருட்கு மிடமுங் காலமும் பொருளு முதலாயினவற்றொடு படுத்தின்மைகூறுதற்க ணும்மைகொடுத்துச்சொல்லுக. எ - று. பவளக்கோட்டு நீலயானை சாதவாகனன் கோயிலுள்ளுமில்லை எ - ம், குருடுகொண்டல் பகலுமிலலை எ-ம், உறற்பாலநீக்க லுறுவர்க்குமாகா எ-ம் வரும். இல்லாப்பொருட் கொருகாலு நிலையுறுதலின்மையின் மன்னாப்பொருளென்றார். இட முதலாயினவற்றொடு படுத்தறகணென்ப தேற்புழிக்கோடலென்பதனாற்பெற்றாம். அவற்றொடுபடாதவழிப் பவளக்கோட்டு நீலயானையில்லையென வும்மையின்றி வருமென்பதாம். முற்றும்மையு மெச்சவும்மையுமாகிய வேறுபாடுடையவேனு மும்மைபெறுத லொப்புமையா லன்னவியற்றென்றார். இரண்டு சூத்திரத்தானு மரபுவழுக்காத்தவாறு.

௩௫. எப்பொருளாயினு மல்லதில்லெனி, னப்பொருளல்லாப் பிறிதுபொருள்கூறல்.

யாதானு மொருபொருளையாயினு மொருவனல்ல தில்லென்னும் வாய்பாட்டானில்லையெனலுறி னப்பொருடன்னையேகூறா தப்பொருளல்லாத பிறிதுபொருள்கூறுக. எ - று. உ-ம். பயறுளவோ வணிகீரென்று வினவுவழி உழுந்தல்லதில்லை, கொள்ளல்லதில்லையென அல்லதில்லென்பான் பிறிது பொருள்கூறியவாறுகண்டுகொள்க. அல்லதில்லெனினெனப்பொருள்பற்றியோதினாராகலி னல்லதிலலென்னும் வாய்பாடேயன்றி யுழுந்தன்றியில்லை உழுந்தேயுள்ளதென வப்பொருள்படுவனவெல்லாங்கொளக. உழுந்தல்லதில்லையெனப்பிறிதுபொருள்கூறாது பயறல்லதில்லையெனவப்பொருள்கூறிற் பயறுளஅல்லனவில்லையென மறுதலைப்பொருள்பட்டுச் செப்புவழுவாமாறறிக. யாதானுமாகவல்லதில்லெனிற் பிறிதுபொருள்கூறுகவென வெஞ்சாமற்றழீஇயாப்புறுத்தற்கெப்பொருளாயினுமென்றார். அல்லதில்லென்பதற்குத் தன்னுழையுளளதல்லதென்றும், அப்பொருளல்லாப் பிறிதுபொருள்கூற லென்பதற்கு இனப்பொருள்கூறுகவென்று முரைத்தாராலுரையாசிரியரெனின் பயறுளவோவென்று வினயவழிப்பயறில்லையென்றாற்படும் வழுவின்மையானும், உள்ளதல்லதென்றல் கருத்தாயி னாசிரியரல்லதெனக் குறித்தபொருள்விளங்காமையி னகப்படச்சூத்திரியாமையானும், பாம்புணிக்கருங்கல்லும் பயறும்விற்பானொருவனுழைச்சென்று பயறுளவோவென்றவழிப் பாம்புணிக்கருங்கலல்லதில்லையென்று லினப்பொருள்கூறாமையாற்பட்ட விழுக்கின்மையானுமவைபோலியுரையென்க. அல்லதூஉமினப்பொருள் கூறுகவென்பதேகருத்தாயின் அப்பொருளல்லாவினப்பொருள்கூறலென்னுது பிறிதுபொருள்கூறலென்னார் மன் ஆசிரியர் அதனானுமஃதுரையன்மையுணர்க.

௩௬. அப்பொருள்கூறிற் சுட்டிக்கூறல்.

அல்லதிலலென்பான் பிறிதுபொருள்கூறா தப்பொருடன்னையே கூறுமாயினப்பயறல்ல தில்லையெனச்சுட்டிக்கூறுக. எ- று. பயறுளவோவென்றவழி

ச்சுட்டாது பயறல்லதில்லையெனிற் பயறுளவுமுந்துமுதலாயின வில்லையென
ப்பிறிதுபொருளேற்பித்துச் செப்புவழுவாமெனபது. அல்லதில்லெனபததிகா
ரத்தாற்பெற்றும். தன்னினமுடித்தலென்பதனாற் பசும்பயறல்லதில்லை-பெரு
ம்பயறல்லதில்லையெனக் கிளந்துகூறுதலுங்கொள்க. செப்புமினாவுமென்ற
தனானிவ்வேறுபா டினிதுவிளங்காமையானும், பொருளொடுபுணராச்சுட்டெ
னவழுவமைக்கின்றாராகலானு மிவற்றைவிதந்துகூறினார்.

கூள. பொருளொடுபுணராச் சுட்டுப்பெயராயினும், பொருள்
வேறுபடாஅது தோன்றுகும்மே.

சுட்டானன்றிப் பொருள்வரையறுத்துணர்த்தாச் சுட்டுப்பெயரார் கூற
ம்பொருள் வேறுகா திப்பயறெனச்சுட்டிக்கூறிய பொருளேயாம் -எ-று. என்
சொல்லியவாறோவெனி னிவையல்லதில்லை யென்றவழி யிவையென்பது பய
ற்றையே சுட்டா துழுந்துமுதலாயினவற்றிற்கும் பொதுவாய்நிற்றலின் வழு
வாமன்றேயாயினு முன்கிடந்த பயறுகாட்டி யிவையெனறு ஞகலினவற்றை
யே சுட்டுமுதலா னமைகவெனச் செப்புவழுவமைத்தவாறு. சாதியம் பண்பு
ந்தொழிலு முதலாயினபற்றி யொருபொருளை வரைந்துணர்ததா தொல்லா
ப்பொருண்மேலுஞ் .சேறலிற்பொருளொடு புணராச்சுட்டுப்பெயரென்றார்.
வேறுபடாதொன்றுகு மென்பனவறறுளொன்றே மையுமெனின்பொருள்
வரைந்துணர்த்தும்பெயரோடு பொருள்வரையறுணராததாச் சுட்டுப்பெய
ரொடு வேறுபாடுடைத்தேனும் ஒருபொருண்மேன் முடிதலின் ஒருபொரு
ட்டாமெனபது விளக்கியபொருள் வேறுபடாதொன்றுகுமென்றார். அப்பொ
ருள்கூறுதறகணென்றது பொதுப்படக்கூறியவதனாற் பிறிதுபொருள்கூறும்
வழியுமிவையல்ல தில்லையெனச் சிறுபான்மை சுட்டுப்பெயராற் கூறினுமமை
யுமென்பதாம. யானைநூல் வல்லானொருவன் காட்டுட்போவுழியோர்யானை
யடிச் சுவடுகண்டு இஃதரசுவாவாதற்கேற்ற விலக்கணமுடைத்தென்றவழியு
ம், இஃதோர் செல்வற்கொத்த வெம்மானைமெலல வென்மகன்வயிற்பெ
யர்தந்தேனே யென்புழியுஞ் சுட்டுப்பெயர் பொருளொடுபுணராது நிற்றலி
னவற்றையமைக்கின்ற திச்சூத்திரமென்பாருமுளர்.

கூஅ. இயற்பெயர்க்கிளவியுஞ் சுட்டுப்பெயர்க்கிளவியும், வினை
க்கொருங்கியலுங்காலந்தோன்றிற், சுட்டுப்பெயர்க்கிளவி
முற்படக்கிளவா, ரியற்பெயர்வழிய வென்மனார்புலவா.

இயற்பெயருஞ் சுட்டுப்பெயருமொன்றன்வினையொன்று கொள்ளாதிரண்டு
ம் பிறிதுவினைகோடற் கொருங்கு நிகழுங்காலந்தோனறுமாயி னுலகத்தார சு
ட்டுப்பெயரை முற்படக்கூறாரியற்பெயர்க்கு வழியவாகக் கூறுவரொன்றுசொ
ல்லுவர் புலவர் - எ - று. வினைக்கொருங்கியலுங் காலப்பெயரொழுவாயாயு மு
ருபேற்றுநின்றனவெல்லாங் கொள்ளப்படும். வினைக்கென்புழி யவ்விருபொ
ரு மொருவினைகோடலும் தனித்தனி வினைகோடலுங்கொள்க. ஒருங்கியலு

ன்றதனு லவையொருபொருண்மேல் வருதல்கொள்க. உ-ம். சாத்தன் அவன்வந்தான்-சாத்தன்வந்தான் அவன்போயினன் எ-ம், சாத்திவந்தாள் அவட்குப பூக்கொடுக்க எ-ம் வரும். அவன்தான்வந்தான் - அவனொருவனுமறந்கூறும்-அஃதொன்றுகுரும் என இயற்பெயரல்லா விரவுப்பெயர்க்கு முயர்திணைப்பெயர்க்கு மஃறிணைப்பெயாக்கும் வரையறையினறிச் சுட்டுப்பெயா முற்கிளக்கவும்படுதலின் இயற்பெயர்க்கிளவியென்முர். அவ்வாறவை முறகிளக்கப்படுவ தொருவினைகோடறகண்ணேயென்பது. அற்றேல் அவைமுடவன்வந்தான் அவற்குச்சோறுகொடுக்க- நஙகைவநதாள அவட்குப்பூக்கொடுகக-குதிரைவந்தது அதற்குமுதிரைகொடுக்க எனத் தனித்தனி வினைகோடற்கட் சுட்டுப்பெயர் பிற்கிளக்கப்படுதல முனனையதற்குத் தன்னினமுடித்தலினுலு மேனையிரண்டற்கு மியற்பெயரொன்ற ழிகையானுங்கொள்க. பிறிதுவினை கோடறகணனவே அவன்சாத்தன் - சாத்தனவன் என ஒன்றற்கொன்று பயனிலையாதற்கண்ணும், ஒருபொருண்மேல் நிகழுமெனவே அவனுஞ் சாத்தனும்வந்தார் - சாததனும் அவனும்வநதார என வேறுபொருளவாய் வருதற்கண்ணும் யாது முறகூறினுமமையுமென்பதாம். வினையென்றது முடிக்குஞ்சொல்லை. சுட்டுப்பெயர்யாண்டும் இயறபெபாவழிக் கிளக்கப்படுமென யாப்புறுத்தற்கு முற்படக்கிளவாரொன்று மியறபெயர் வழியவென்றுங் கூறினார். சுட்டுப்பெயரொன்முராயினும அகர இகரச் சுட்டுப்பெயரேகொள்க. இதுவுமோர் மரபுவழுகாநிலை.

௩௯. முற்படக்கிளத்தல் செய்யுளுளுரித்தே.

இயற்பெயருஞ் சுட்டுப்பெயரும் வினைக்கொருங்கியலும்வழிச் சுட்டுப்பெயரை முற்படக்கூறுதல் செய்யு ளுளுரித்து. எ - று. அவனணங்கு நோய்செய்தா னாயிழாய்வேலன், விறனமிகுதாாச சேநதன்போர்வாழ்த்தி - முகனமர்ந், தன்னையலா கடப்பந தாரணியினென்னைகொல், பினனையதன்கண்விளைவு. எனவரும். இதனுட்சேநதனென்ப தியறபெயர். ஒருவினைகொள்வழிச் சுட்டுபபெயர் முற்கிளத்தலவாதவழிக் கண்டுகொள்க. இது செய்யுளிடத்து மரபுவழுவமைத்தவாறு.

௪௦. சுட்டுமுதலாகிய காரணக்கிளவியுஞ், சுட்டுப்பெயரியற்கையிற் செறியததோன்றும்.

சுட்டைமுதலாகவுடைய காரணப்பொருண்மையை யுணர்த்துஞ்சொல்லுஞ் சுட்டுபபெயாபோலத் தன்னாற்சுட்டப்படுமபொருளை யுணர்த்துஞ்சொறகுப் பின்கிளக்கப்படும. எ - று. ஈண்டுச்சுட்டபபடும்பொருள் தொடர்மொழிப்பொருள். சாத்தன் கையெழுதுமாறுவல்ல னதனுற றந்தையுவக்கும் - சாத்தி சாநதனைக்குமாறு வல்ல ளதனாற் கொண்டானுவக்கும்-சுட்டுமுதலாகிய காரணக்கிளவி யுருபேறறுநின்ற சுட்டுமுதறபெயரொ டொப்பதோரிடைச்சொல்லாகலிற சுட்டுப்பெயரியற்கையிற் செறியத்தோன்றுமென்முர். செயற்கென்னும் வினையெச்சமு முருபேற்றுநின்ற தொழிற்பெயரொ டொப்புமை

யுடைத்தாயினு முருபும் பெயருமொன்றாகாது பகுப்பப்பிளவு பட்டிசையா தொன்றுபட்டிசைத்தலா னதனின்வேறாயினாற்போல விதுவுமுருபேற்ற சுட்டுப்பெயரோ டொப்புமையுடைத்தாயினும் பிளவுபட்டிசை யா தொன்றுபட்டிசைத்தலான் வேறாகவே கொள்ளப்படுமென்பது. அஃதேற்சாத்தன்வந்தா னஃதரசற்குத் துப்பாயிற்றெனத்தொடர்மொழிப்பொருளையுஞ் சுட்டிவருஞ் சுட்டுப்பெயர்கூறாது யாரணக்கிளவியே கூறியதென்னையெனின் அவ்வாறுவருவன தன்வினை முடித்தலெனபதனுனடங்கும்; ஈண்டுச் சுட்டப்படும் பொருளையுணர்த்துவது பெயரனமையிற சுட்டுப்பெயரியற்கையென்றது வழக்கினகத்துச் சுட்டப்படும்பொருளையுணாத்துஞ் சொற்குப்பின்னிற்றலுஞ் செய்யுளகத்து முனனிற்றலுமாகிய வத்துணையேயாம. செய்யுட்கண் முன்னிற்றல் வநதவழிக்கண்டுகொள்க. பொருள்பற்றாது பண்புமுதலாயின பற்றிவநத சுட்டாதலின வேறோதப்பட்டதென் றுரையாசிரியர் கூறினாராலெனின் சாத்தன்வந்தா னஃதரசற்குத் துபபாயிற்று - எ - ம், கிழவன்பிரிநதா னதனைக் கிழத்தியுணர்நதிலள் - எ - ம்- எழுவாயாயு மேனைவேற்றுமை யேற்றுமசசுட்டுப்பயின்றுவருதலாற பண்புமுதலாயினவற்றைச் சுட்டுஞ்சுட்டெனப் பொதுவகையாற்கூறாது காரணக்கிளவியென ஒருசார் வேற்றுமைக்குரிய வாய்பாடுபற்றியோதுதல் குன்றக்கூறலாகலானுஞ் சுட்டுப்பெயராயிற் சுட்டுமுதலாகிய காரணக்கிளவியென்றுஞ் சுட்டுபபெயரியற்கையிற செறியத்தோன்றுமென்றுங்கூறுதல பொருந்தாமையானு மதுபோலியுரையெனக. இதனான் வழக்கின்கண் மரபுவழாநிலையுஞ் செய்யுட்கண்மரபுவழுவமைதியுமுணாத்தினார்.

சக. சிறப்பினாகிய பெயர்நிலைக்கிளவிக்கு, மியற்பெயர்க்கிளவி முற்படக்கிளவார்.

வினைக்கொருங்கியலும்வழிச் சிறப்பினாகிய பெயர்க்கு மியற்பெயரை யுலகத்தார் முற்படக்கிளவாா பிற்படக்கிளப்பா - எ - று. வினைக்கொருங்கியலு மென்ப தேற்புழிக்கோடலென்பதனாற்பெறாும். ஈண்டுச்சிறப்பாவது மன்னர்முதலாயினாாற் பெறும்வரிசை. ஏனாதிநல்லுதடன் - காவிதிகண்ணந்தை எனவரும். உம்மையாற்றவங்கலவிகுடியுறுப்பு முதலாயினவற்றானாகிய பெயருங்கொள்ளப்படும். அவை முனிவனகத்தியன் - எ - ம், தெய்வப்புலவன் திருவள்ளுவன - எ - ம, சேரமான் சேரலாதான் - எ - ம், குருடன் கொற்றன் எ - ம் வரும். திருவிரவாசிரியன் - மாநதக்கோங்கேனாதி என இயற்பெயர் முன்வந்தனவாலெனின் அவை தொகைச்சொல்லாகலா னவற்றினகண்ணதன் றிவ்வாராய்ச்சியென்பது. ஆண்டியற் பெயர்முன்னிற்றல் பண்புத்தொகையாராய்ச்சிக்கட்பெறுதும்.

சஉ. ஒருபொருள்குறித்த வேறுபெயர்க்கிளவி, தொழில்வேறு கிளப்பி னொன்றிடனிலவே.

ஒருபொருளைக்குறித்துவநத பலபெயர்ச்சொற்க ளொருதொழிலே முடிபாகக்கூறாது பெயாதோறும் வேறாகியதொழில்களைக்கொடுத்து முடிப்பி

ளொருபொருளவாயொன்ருகா. எ - று. ஆசிரியன்பேரூர்கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன்வந்தான் என்ருது, ஆசிரியன்வந்தான்-பேரூர்கிழா னுண்டான் - செயிற்றியன்சென்ருன் என வேறு தொழில் கிளந்தவழி வந்தானு முண்டானுஞ் சென்ருனு மொருவனுகாது வேருய்த்தோன்றிய வா றுகண்டுகொள்க. எந்தைவருக எம்பெருமான்வருக மைந்தன்வருக மணளன் வருக என்புழிக் காதன்முதலாயினபற்றி யொருதொழில் பலகால்வந்தமை யல்லது வேற்றுத்தொழிலன்மையி னொருதொழில் கிளத்தலே யாமென்பது ஈண்டுத்தொழிலென்றது முடிக்குஞ்சொல்லை. ஆசிரியன் வந்தானென்றொரு காற்கூறி யிடையிட்டவனையே பின்னொருகாற் பேரூர்கிழான் சென்ருனென் று கூறியவழி யொருதொடரன்மையா னுண்டாராய்ச்சியில்லையென்பது. அஃதேல்ஆசிரியன்வந்தான் பேரூர்கிழானுண்டான்செயிற்றியன்சென்ருனென விடையீடின்றி நின்றனவு' மொருதொடரன்மையி னுராய்ச்சியின்ரும்பிறவெ னின் ஆற்றன்றுஉட்டொடர் பலவாயினு மவற்றின்ரொருதியா யவன்ரொழி லபலவுங் கூறுதற்பொருண்மைத்தாய பெருநதொடரொன்றெனவே படுமெ ன்பது. ஆசிரியன்பேரூர்கிழானசெயிற்றியனிளங்கண்ணன்சாத்தன்வந்துண்டு சென்ருனென்ரு தாசிரியன்வந்தான் - பேரூர்கிழானுண்டான் - செயிற்றிய ன் சென்ருனெனப் பெயர்தொறும் வேறுதொழில்கிளத்தன்மரபன்மையின் மரபுவழுக்காத்த வாருயிற்று.

சரு. தன்மைச்சொலலே யஃறிணைக்கிளவியெ, றெண்ணுவ ழிமருங்கின் விரவுதலவரையார.

தன்மைச்சொல்லு மஃறிணைச்சொல்லு மெண்ணுதற்கண் விராய்வரப் பெறும் - எ - று. என்சொல்லியவாறேவெனின் உயர்திணைச்சொல்லு மஃறி ணைச்சொல்லு மெண்ணுதற்கண்விராய்வந் துயர்திணைமுடிபுகொள்ளினு மஃ றிணை முடிபுகொள்ளினும் வழுவாமாகலின் மயங்கல்கூடாதம மரபினவென வே யவைவிரா யெண்ணப்படாமையுமெய்திநின்றது. தன்மைப்பன்மைச் சொல்லா லஃறிணைச்சொல்லு முடியுமாகலாற் றன்மைச்சொல்லும் அஃறிணை ச்சொல்லும் விராய்வந் துயர்திணைமுடிபுகொள்ளினு மமையுமெனத்திணை வ ழுக்காத்தவாறு. யானுமென்னெஃகமுஞ்சாறும் எனவரும். பன்மைத்தன்மை வினைகோடலெற்ருற் பெறுதுமோவெனின் தன்மைச்சொல்லே யென்றதனு னும், பன்மையுரைக்குந் தன்மைக்கிளவி யெண்ணியன் மருங்கிற் றிரிபவையு ளவே யென்பதனுனும் பெறுதுமென்பது. அஃதேல் எண்ணியன்மருங்கிற் றி ரிபவையுளவே யென்பதனுன்விராய்வந் துயர்திணை முடிபுகோடலும் பெறப் படுதலி னிச்சூத்திரம்வேண்டாவெனின் உய்த்துணர்ந் திடர்ப்படுவதெடுத்தோ த்தில்வழியெனமறுக்க.

சச. ஒருமையெண்ணின் பொதுப்பிரிபாற்சொ, லொருமைக் கல்ல தெண்ணுமுறைநில்லாது.

ஒருமை யெண்ணினையுணர்த்தும் பொதுப்பிரிபாற்சொல்லாகிய ஒருவ னொருத்தியென்னுஞ் சொற்க ளொருமைக்கணல்ல திருமைமுதலாகிய வெ

ண்ணுமுறைக்கணில்லா - எ - று. எனவே பொதுப்பிரியாப் பாற்சொல்லாகிய ஒருவரெனனுஞ்சொல் இருவர் மூவரெனவெண்ணு முறைக்கண்ணு நிற்கு மென்பதாம். பொதுப்பிரிபாற்சொலென்றாரேனு மொருவனொருத்தி யென் பனவற்றது பாலுணர்த்துமீறே கொள்ளப்படும். என்னை! எண்ணுமுறை நில் லாவென்று விலக்கப்படுவன அவையே யாகலினென்பது. மகன் மகளென் னுந் தொடக்கத்துப்பெயர் பொதுப்பிரிபாற்சொல்லி னீக்குதற் கொருமை யெண்ணினென்றும, ஒருவர் ஒன்றென்பனவற்றி னீக்குதற்குப் பொதுப்பிரி பாற்சொலென்றுங்கூறினார். ஒருவரெனனு மாண்மை பெண்மைப்பொதுவி ற் பிரிதலிற் பொதுபபிரி பாற்சொலென்றார். பொதுப்பிரி பாற்சொலேனு மொற்றுமையானில்லாதென வொருமையாறகூறினார். ஒருவனொருத்தியென ஒருமைக்கணிற்றலு மிருவன் மூவ னிருத்தி மூத்தியென எண்ணு முறைமைக்க ணில்லாமையுங் கண்டுகொள்க. ஒனறெனமுடித்த லென்பதனு னொருவெ னொருவையெனனுந சனமை முன்னிலையீறு மெண்ணுமுறை நிலலாமைகொ ள்க. இது பால்வழுக்காத்தவாறு.

சரு. வியங்கோளெண்ணுப்பெயர் திணைவிரவுவரையார்.

வியங்கோளொடு தொடருமெண்ணுப்பெயா திணைவிராய் வருசல்வரை யார். எ - று. ஆவுமாயனுஞ்செல்க எனவரும். தன்மைபபனமைவினைபோ லாது வியங்கோளிருதிணைககு முரியசொல்லாகலா னிருதிணைச்சொல்லையுமு டிக்குமன்றே யதனானுவுமாயனுஞ்செல்க வென்புழிவழுவின்மையி னமைக்க ற்பாற் றன்றெனின இருதிணைபபொருட்கு முரித்தேனுமொருசொல்லு டனெ ண்ணுதறக ணிருதிணைபபொருளு முணாததாமையின் ஒருதிணையேயுணர்த்து தல்வேண்டும்; ஒருதிணையுணாத்தியவழி யேனைத்திணைபபெயரொடு வைகா மையிற் றிணைவழுவா மதனு னமைக்கலவேண்டுமென்பது. எண்ணெனருவு றன்றென்று வாயிரண்டு மினொனறல் வேண்டுமென்பது இலக்கணமாகலான் யானுமென் னெஃகமுஞ் சாறுமென்புழியு மாவுமாயனுஞ்செலக வென்புழி யுமினனல்லன வுடனெண்ணபபடுதல்ன் வழுவென்றா லுளாயாசிரியரெ னின் திணைவேறுபாடுண்டேனும் யானுமென்னெஃகமுமென்புழி வினைமுதலு ங் கருவியுமாகிய வினையபும், ஆவுமாயனு மென்புழிமேய்ப்பபானும் மேய்ககப் படுவனவுமாகிய வியைபுமுண்மையா னுடனெண்ணப்படுதலானும், யானை தேர் குதிரை காலாளெறிந்தானென முன்னருதாரணங் காட்டுபவாதலானும், பிறண்டுமெண்ணுத திணைவிரவுபபெய ரஃறிணைமுடிபினவெனவாசிரியர்க்கா ராய்ச்சிமுடிபு கோடற்கண்ணதாகலானு மவர்க்கது கருத்தன்றென்க. அல்ல தூஉந் திணைவிராயெண்ணல் வழுவென்பதே கருத்தாயின, நெடுநல்யானையுந தேருமாவும படையமைமறவரு முடையம்யாம. எ-ம், இருமனப்பெண்டிரு ங் கள்ளுங்கவறும், எ-ம், படர்க்கைச்சொல்லு மஃறிணைக்கிளவியும் விராயெ ண்ணுதல் வழக்குப்பயிறசியுடைமையா னவையுமடங்க வுயர்திணைச்சொல் லே யஃறிணைக்கிளவியெனப் பொதுப்படவோதாது தன்மைச்சொல்லே யஃ றிணைக்கிளவியெனத் தன்மைச்சொல்லையே விதந்தோதல் குன்றக்கூறலாமா

கலானு மவர்க்கது கருத்தன்மையறிக. ஆவுமானியற் பார்ப்பனமாக்களும் பெ
ண்டிரும் பிணியுடையீரும் பேணித்தென்புல வாழ்நர்க்கருங்கட னிறுக்கும்
பொன்போற் புதல்வர்ப்பெறாஅதீரு மெம்மம்பு கடிதுவிடுதும் நும்மரண்சேர்
மின எனத் திணைவிராய்வந்தது முன்னிலைவினைகோடலெற்றாற் பெறுதுமெனி
ன் அந்நிகரனசெய்யுண் முடிபெனப்படும், அவற்றை யதிகாரப்புறனடையாற்
கொள்க. திணைவிராயெண்ணப்படும் பெயர்வியங்கோளல்லா விரவுவினையொ
டு தொடாந்துவருவன வழக்கினுள்ளவே லொன்றெனமுடித்த லென்பதனு
றகொள்க.

சகூ. வேறுவினைப்பொதுச்சொ லொருவினைகிளவார்.

வேறுபட்டவினையையுடைய பலபொருட்குப் பொதுவாகிய சொல்லை
யொன்றற்குரிய வினையாற்கிளவார். எ - று. எனவே பொதுவினையாற் கிளப்
பரென்றவாறும். ஆவை அடிசில், அணி, இயம், படையென்னுந் தொடக்கத்
தன. அடிசிலெனப்படு உண்பன, தின்பன, பருகுவன, நக்குவனவென்னு நால்
வகைக்கும், அணியென்பது கவிப்பன, கட்டுவன, செறிப்பன, பூண்பனவென்
னுந் தொடக்கத்தனவற்றிற்கும, இயமெனபது கொட்டுவன, ஊதுவன, எழு
வனவென்னுந தொடக்கத்தனவற்றிற்கும், படையென்பது எய்வன, எறிவன,
வெட்டுவன, குத்துவன என்னுந தொடக்கத்தனவற்றிற்கும் பொதுவாகலின்
அடிசிலயின்றார மிசைந்தார் - எ-ம், அணியணிந்தார மெய்ப்படுத்தார் - எ-ம்,
இயமியம்பினார் படுத்தார் எ-ம், படைவழங்கினார தொட்டார் - எ-ம பொது
வினையாற் சொல்லுக. அடிசிறினறார பருகினார - எ-ம, அணிகவித்தார், பூ
ண்டார் - எ-ம், இயங்கொட்டினார ஊதினார்-எ-ம், படையெறிந்தார் எய்தார-
எ-ம் ஒருசார்க்குரிய வினையாறசொல்லின் மரபுவழுவாமென்பது. பொருளி
ன் பொதுமையைச சொனமையேறறி வேறுவினைப பொதுச்சொலென்றார்.

சஎ. எண்ணுங்காலு மதுவதன்மரபே.

வேறுவினைபபொருள்களைப் பொதுச்சொல்லாற்கூறாது பிரித்தெண்ணு
மிடத்து மதனதிலக்கண மொருவினையாற்கிளவாது பொதுவினையாற் கிளத்
தலேயாம். எ - று. சோறுங்கறியு மயினறார், யாழுங்குழலுமியம்பினார் என
வரும். சோறுங்கறியுந்தின்றார், யாழுங்குழலுமூதினார் எனினவழுவாம். அஃ
தேல்லூன்றுவை கறிசோறுண்டு வருந்துதொழிலல்லது என்புழிஉண்டலென்ப
தொன்றற்கேயுரிய வினையாகலின் வழுவாம் பிறவென்ன உண்டலென்ப தூண்
பன தின்பனவெனப் பிரித்துக்கூறும்வழிச் சிறப்புவினையாம; பசிப்பிணிதீர
நுகரப்படும் பொருளெல்லா முணவெனபபடுமாகலிற் பொதுவினையுமா மத
லானது வழுவனறெனபது. கறியொழித் தேனையவற்றிற்கெல்லா முண்டற்
றொழி லுரித்தாகலிற் பன்மைபற்றிக் கூறினரெனினுமமையும்.

சஅ. இரட்டைக்கிளவி யிரட்டிற்பிரிந்திசையா.

இரட்டித்துநின்று பொருளுணர்த்துஞ்சொற்க ளிரட்டித்துநிற்றலிற் பிரி ந்துநில்லா. எ - று. சுருசுருத்தது, மொடுமொடுத்தது என இசைபற்றியும், கொறுகொறுத்தார், மொறுமொறுத்தார் எனக் குறிப்புப்பற்றியும், குறுகுறு த்தது, கறுகறுத்தது, எனப் பண்புபற்றியும் இரட்டித்துவநதன பிரிந்துநில் லாமை கண்டுகொள்க. அஃதேல் குறுத்தது குறுத்தது எனப்பிரிந்தும் வந்த னவாலெனின் அற்றன்று-குறுத்ததென்பதோர்சொல் குறுவென்பதோர்சொல் லடுத்துக் குறுகுறுத்ததென நின்று குறுமைமிகுதி யுணர்த்திற்றாயிற் குறுத்த தென்பது குறுமையுணர்த்தக் குறுவென்பது மிகுதியுணர்த்திற் றாகல்வேண்டு ம்; குறுவென்பது மிகுதியுணர்த்தாமையிற் குறுகுறுத்ததென்பதொருசொல் லாய்நின் றப்பொரு ளுணர்த்திற்றெனவேபடும். அதனாற்றான் அக்குறுமைமா த்திரமுணர்த்திநிற்ப ததனின்வேறுமென்பது. கறுகறுத்ததென்பதற்குமீதொ க்கும். கறுத்தது கறுத்தது, குறுத்தது குறுத்தது எனச்சொன் முழுவதும் இருமுறைவாராமையி னடுக்கன்மையறிக. ஈண்டிரட்டைக்கிளவியென்றது மக்களிரட்டை, விலங்கிரட்டைபோல வேற்றுமையுடையனவற்றையன்றி யி லையிரட்டையும், பூவிரட்டையும்போல வொற்றுமையும்வேற்றுமையு முடைய வற்றையென்றுணர்க. இரட்டிதது நின்று பொருளுணர்த்துவனவற்றைப் பிரித்து வழங்கன் மரபனமையின்மரபு வழுக்காத்தவாறு.

ச௧. ஒருபெயர்ப்பொதுச்சொ லுளபொருளொழியத், தெரிபு வேறுகிளத்த றலைமையும்பன்மையு, முயர்திணைமருங்கி னு மஃறிணைமருங்கினும்.

உயர்திணைக்கண்ணு மஃறிணைக்கண்ணுமொருபெயராய்ப் பலபொருட்குப் பொதுவாகியசொல்லைப் பிறவுளபொருளொழியத் தெரிநதுகொண்டு பொது மையின் வேறாகச்சொல்லுக தலைமையானும் பன்மையானும் - எ-று. தெரிபெ ன்பதற்குச் செயப்படுபொருடலைமையும் பன்மையுமேயாம். பிறரும் வாழ் வாருளரேனும் பார்ப்பனச்சேரியென்ற லுயர்திணைக்கட் டலைமைபற்றியவழக் கு. எயினர் நாடென்பதத்திணைச்கட் பன்மைபற்றியவழக்கு. பிறபுல்லு மரனு முளவேனுங் கமுகந்தோட்டமென்ற லஃறிணைக்கட்டலைமைபற்றியவழக்கு. ஒ டுவங்காடென்பதத்திணைக்கட் பன்மைபற்றியவழக்கு. பார்ப்பார்பலராயினுங் கமுகுபலவாயினு மவைதாமே பன்மைபற்றியவழக்காம். பலபொருளொரு சொல்லினீக்குதற் கொருபெயரென்றார். ஒன்றெனமுடித்தலென்பதனான் அர சர்பெருநதெரு, வெண்குடை, பெருவிறல், வயிரகடகம், ஆதீண்டுகுற்றி, ஆ னதர், எருத்தில எனப்பொதுச்சொலின்றி வருவனவுங்கொள்க. உளபொ ருளெல்லாங்கூறு தொன்றனையெடுத்துக்கூறுதன் மரபன்றாகலிற் பொதுச் சொன்மேற் சொன்னிகழுமாறுணர்த்தியமுகத்தான் மரபுவழுக்காத்தவாறு.

ருo. பெயரினுந்தொழிலினும் பிரிபவையெல்லா, மயங்கல்கூ டா வழக்குவழிப்பட்டன.

உயர்திணைக்கண்ணு மஃறிணைக்கண்ணும் பெயரினும் வினையினும் பொதுமையிற்பிரிந் தாண்மைக்கும் பெண்மைக்குமுரியவாய் வருவனவெல்லாம் வழூவாகா வழக்குவழிப்பட்டனவாகலான் - எ - று. உயர்திணைக்கண்ணு மஃறிணைக்கண்ணு மென்பததிகாரத்தான்வந்தது. தொடியோர் கொய்குழையரும்பிய குமரிஞாழலென்பதுஉயர்திணைக்கட்பெயரிற்பிரிந்த வாணொழிமிகுசொல். வடுகரசராயிரவர்மக்களையுடையரொன்பது பெயரிற்பிரிந்தபெண்ணொழிமிகுசொல். இவர்வாழ்க்கைப் பட்டாரொன்பது தொழிலிற்பிரிந்தவாணொழிமிகுசொல். இவர்கட்டிலேறினாரொன்பது தொழிலிற்பிரிந்தபெண்ணொழிமிகுசொல். நம்பிநூறெருமையுடையனென்பதுஅஃறிணைக்கட்பெயரிற்பிரிந்தவாணொழிமிகுசொல், நம்மரசனாயிரம்யானையுடையனென்பது பெயரிற்பிரிந்தபெண்ணொழிமிகுசொல். தொடிசெறித்தலும, மக்கட்டன்மையும், இல்வாழ்க்கைப்படுதலும, கட்டிலேறுதலும், எருமைத்தன்மையும, யானைத்தன்மையுமொழிக்கப்படும்பொருட்கு முண்மையாற் பொதுவாய்நிற்றற்பாலன வொருபாற்குரியவாய்வருதலின் மரபுவழுவமைத்தவாறு. பிறசொல்லாற்பிரிவன வேறுபடுவினையினுமினத்தினுஞ் சார்பினுமெனவும், தெரிநிலையுடைய வஃறிணையியற்பெயரெனவும், நினையுங்காலைத் தத்தமரபின்வினையொடல்லது பாறெரிபிலவேயெனவு முன்னோதப்படுதலானு மாண்டுவழுவின்மையானு மீண்டுத் தாமேபிரிவனவேகொள்க. தமமாற்றும்பிரியுமென்பார் பெயரினுந்தொழிலினுமென்றார். பெயர்க்கண்ணும வினைக்கண்ணுந்தாமேபிரிவன வெனினுமமையும். அஃறிணைக்கட் டொழிலிற்பிரிந்தனவுளவேற் கண்டுகொள்க. இன்றிவலூர்பெற்றமெல்லாமறங்கறக்கும் உழவொழிந்தன எனவுரையாசிரியர்காட்டினாராலோவெனின்பெற்றமென்னும பொதுப்பெயர்கறத்தலு முழுதலுமாகிய சிறப்புவினையாற்பொதுமைநீங்குதல வழுவன்மையானீண்டைக்கெய்தாமையி னவர்க்கதுகருத்தன்றென்பது.

௫௧. பலவயினானுமெண்ணுத் திணைவிரவுப்பெயர, ஃறிணைமுடிபின செய்யுளுள்ளே.

திணைவிராயெண்ணப்பட்ட பெயர்செய்யுளகத்துப் பெரும்பான்மையு மஃறிணைச்சொற் கொண்டுமுடியும் - எ - று. வடுகரருவாளர் வான்கருநாடர், சுடுகாடுபே யெருமையென்றிவையாறுங், குறுகாரறிவுடையார் - எ - ம், கடுஞ்சினத்த கொல்களிறுங் கதழ்பரியகலிமாவு, நெடுங்கொடியநிமிர்தேரு, நெஞ்சுடையபுகன் மறவருமென நான்குடன்மாண்டதாயினும - எ - ம், வரும். எண்ணுத்திணை விரவுப்பெயர்பெரும்பான்மையு மஃறிணைச்சொற்கொண்டு முடியுமெனவே சிறுபான்மை யுயர்திணைச்சொற்கொண்டு முடியவும்பெறுமென்பதாம். பார்ப்பாரறவோர் பசுப்பத்தினிபெண்டிர், மூத்தோர்குழவியெனுமிவரைக்கைவிட்டு - எ - ம், பார்ப்பார்தவரே சுமந்தார்பிணிப்பட்டார், மூத்தாரிளையார் பசுப்பெண்டிரென்றிவர்கட், காற்றவழிவிலங்கினாரே - எ - ம் வரும். இருதிணைப்பெயரும் விராய்வந்து ஒருதிணைச்சொல்லான் முடிதல்வழுவாயினுஞ் செய்யுளகத்தமைகவெனத் திணைவழு வமைத்தவாறு. பாணன்

பறையன் றுடியன் கடம்பனென்றந் நான்கல்லது குடியுமில்லை எனவிருதி
ணைப்பெயரும் விரவிவாராதுயர் திணைப்பெயரோவந்து செய்யுளு ளஃறிணை
முடிபுகொண்டனவென் றுரையாசிரியர் கூறினாராலெனின் பாணன் முத
லாயினாரைக் குடியென்று சுட்டியவழிக் குடிக்கேற்றதொகை கொடுத்தல்
வழுவன்மையா னவ்வுரை போலியுரையென்க. குடியென்று சுட்டாதவழிப்
பாணன்பறையன் றுடியன்கடம்பனென் றந்நால்வருமல்லது குடியுமில்லையெ
ன்றேயாம். தம்முடைய தண்ணளியுந் தாமுந் தம்மான்றேரு மெம்மைநினை
யாதுவிட்டாரோல் விட்டகல்க - எ-ம், யாருந்தோழியு மாயமுமாடுந் துறைந
ண்ணித், தானுந் தேரும்பாகனும் வந்தென்னலனுண்டான்-எ - ம் இவையெவ்
வாறு வந்தனவோவெனின் அவை தலைமைப்பொருளையுந் தலைமையில் பொரு
ளையும் விராயெண்ணித் தலைமைப்பொருட்கு வினைசொற்பவே தலைமையில்
பொருளுமுடிந்தன வாவதோர் முறைமைபற்றிவந்தன வின்னடைக்கெய்தாவெ
ன்பது. தானுந் தன்புரவியுந் தோன்றினானென்பதுமது.

௫௨. வினைவேறுபடூஉம் பலபொருளொருசொல், வினைவே
றுபடாஅப்பலபொரு ளொருசொலென், றாயிருவகைய
பலபொருளொருசொல்.

வினைவேறுபடும் பலபொருளொருசொல்லும் வினைவேறுபடாப்பலபொ
ருளொருசொல்லுமென விரண்டுவகைப்படும் பலபொருளொருசொல். எ-று.
இனமுஞ்சார்புமுளவேனும் வேறுபடுத்தற்கண் வினைசிறப்புடைமையி னதனா
ற் பெயர்கொடுத்தார் ஆதீண்டு முற்றியென்பதுபோலவென்பது. இலக்கணச்
சூத்திரங்களேயமைய மிச்சூத்திரம்வேண்டா பிறவெனின இருவகையவென
னும் வரையறையவற்றாற் பெறப்படாமையானும், வருத்தப்பின்றுமிலக்கண
ங்கூறியவழிப் பொருளினிதுவிளங்குதலானு மிச்சூத்திரம்வேண்டுமென்பது.

௫௩. அவற்றுள், வினைவேறுபடூஉம் பலபொருளொருசொல்,
வேறுபடுவினையினு மினத்தினுஞ்சார்பினும், தேறத்தோ
ன்றும் பொருடெரிநிலையே.

அவ்விரண்டனுள்ளும் வினைவேறுபடும் பலபொரு ளொருசொலொரு
பொருட்கேசிறந்தவினையானுமினத்தானுஞ்சார்பானும் பொருடெரி நிலைக்கட்
பொதுமைநீங்கித்தெளியத்தோன்றும். எ - று. மாவென்பதொருசார்விலங்கி
ற்குமொருமரத்திற்கும் வண்டிற்கும்பிறபொருட்கும்பொது. குருகென்பதோ
ர்பறவைக்குமுலைமூக்கிற்கும்வளைக்கும் பிறவற்றிற்கும்பொது. நாகமென்பது
மலைக்குமொருசார்மரத்திற்கும் யானைக்கும்பாம்பிற்கும் பிறவற்றிற்கும்பொ
து. சேவென்பதொருசார்பெற்றத்திற்கு மொருமரத்திற்கும் பிறவற்றிற்கும்
பொது. மாப்பூத்தது - மாவுமருதுமோங்கினவெனவேறுபடுவினையானு மினத்
தானுமாமரமென்பது விளங்கிற்று. கவசம்புக்குநின்றுமாகொணாவென்றவழிக்
குதிரையென்பது சார்பினால்விளங்கிற்று. குருகுமுதலாயினவுமன்ன. வேறு

படுவினையினுமென்றுரோனுமொன்றெனமுடித்தலென்பதனானிம்மாவயிரம்வெ ளிறுஎனவேறுபடுக்கும்பெயருங்கொளப்படும். இனத்தொடுசார்பிடை வேற்றுமையென்னையெனின்ஒருசாதிக்கணணைந்த சாதியினமெனப்படும். அணைந்தசாதியன்றி யொருவாற்றானியைபுடையது சார்பெனப்படுமென்பது.

௫௪. ஒன்றுவினைமருங்கி னொன்றித்தோன்றும், வினைவேறுபடாஅப் பலபொருளொருசொ, னினையுங்காலைக் கிளந்தாங்கியலும.

வேறுபடாதவினைகொண்டவழிவேற்றுபடாதுதோன்றும்வினை வேறுபடாப்பலபொருளொருசொலாராயுங்காற் கிளாதுசொலலப்படும். எ - று. மாமரமவீழ்ந்தது - விலவருமாவீழ்ந்தது - எனவரும. வினைவேறுபடாப்பலபொருளொருசொலெனவேறுநிறபனவில்லை வேறுபடுவினைமுதலாயினவற்றான் வேறுபடுவனதாமேபொதுவினைசொண்டவழி வினைவேறுபடாப் பலபொருளொருசொலலாமென்பதறிவித்தறகொன்று வினைமருங்கி னொன்றித் தோன்றுமென்றார். ஒன்றுவினைமருங்கினொன்றித்தோனறுமெனவொருசூத்திரமாக வுரையாசிரியர்பிரித்தாராலெனின அங்ஙனம்பிரிபபினொன்றுவினைமருங்கினொன்றிததோன்றுதலும், வினைவேறுபடாமபலபொருளொருசொலலுககே யிலக்கணமாய்மாறுகோடலாரும் வினைவேறுபடுவனதாமே பொதுவினைகொண்டவழிவினைவேறுபடாசனவாமென்பது உதனாற்பெறப்படாமையானு மதுபோலியுரையெனக. முன்றும்பினறுமவருஞ்சாடமுதலாயினவற்றாறறிந்தபொருள்விளங்காக்கா, கிளாதேசொலலுகவெனப்படாததறகு நினையுங் காலையென்றார். ஆங்சென்பதுனாயசை. குறித்தபொருள் விளங்காமைக்கூறல் மரபன்மையின்மரபுவழுக்காத்தவாறு.

௫௫. குறித்தோன்கூற்றந் தெரித்துமொழிகிளவி.

ஒருபொருள்வேறுபாடுகுறித்தோன் அஃறாற்றன்முதலாயினவற்றான் விளங்காதாயினதனைத தெரித்துச்சொல்லுக. எ - று. அரிதாரச்சாந்தங்கலந்ததுபோல, வுருகெழத்தோனறிவருமே, முருகுறழு, மன்பன்மலைபெய்தநீர் எ - ம்- வாருமதுச்சோலைவணடுதிரத்தநாணமலரா, னாறுமருவிநளிமலைநன்னாட- எ-ம்வரும். கலந்ததுபோலவருமேயிலங்கருவியன்பனமலைபெய்தநீரெனவும், நாறுமருவிநளிமலைநன்னாடனவுநதெரித்து மொழியாதவழிக் குறித்தது விளங்காதுவழுபடுதலின்மரபுவழுக்காத்தவாறு. வடநூலாரிதனைநேயமென்
ஊட்டியன்னவொண்டளிர்ச்செயலையென்புழி இன்னதனையென்றுதெரித் மொழியாமையின்வழுவாம் பிறவெனின்-உவமையென்னு மலங்காரமாயினன்றே யின்னதொன்றனையென்றல்வேண்டுவது செயலையந்தளிரினதுசெய்யா நிறத்தைச்செய்ததுபோலக் கூறுங்கருத்தினானசெலிற்பிறிதோரலங்காரமாம் அதனானதுகடாவன்றெனபது. படுசநவைத்தன்னபாறைமருங்கினெடுத்து ...த்தன்னவிட்டருஞ்சிறுநெறிஎனவின்னோரன்னவெல்லா மவவலங்காரம்பற்

றிவந்தன. ஒல்லேங்குவளைப்புலான்மகன்மார்பிற்புல்லெருக்கங்கண்ணிநறிது- என்புழிக்குவளைபுலானாறுதற்குமெருக்கங்கண்ணி நறிதாதற்குங்காரணங்கூறு மைழின்வழுவாம்பிறவெனின்புதல்வற்பயந்த பூங்குழன்மடந்தைபரத்தையிற் பிரிந்துவந்தகிழவனொடுப்புலந்துரைக்கின்றாளாகலிற்குவளை புலானாறுதறகவன் றவெருடுகூடியவவள்காதல்காரணமென்பதூஉம், எருக்கங்கண்ணிநறிதாதற் குமகிழ்நன்செய்ததுனிகூர்வெப்பமுகிழ்நகைமுகத்தாற்றணிகருமப்புதல்வன் மேலொருகாலைக்கொருகாற்பெருகுமன்புகாரணமென்பதூஉம் பெறப்படுதலி ன்வழுவாகாதென்பது. மீக்கூற்றமென்புழிப்போலக் கூற்று கூற்றமென நி ன்றது.

௫௬ குடிமையாண்மை யிளமைமூப்பே, யடிமைவன்மை விரு ந்தேகுழுவே, பெண்மையரசே மகவேகுழவி, தன்மை திரிபெய ருறுப்பின்கிளவி, காதல்சிறப்பே செறற்சொல் விறற்சொலென், றுவறுமூன்றுமுளப்படத்தொகைஇ, ய ன்னபிறவுமவற்றொடு சிவணி, முன்னத்தினுணருங்கிளவி யெல்லா, முயர்திணைமருங்கினிலையினவாயினு, மஃறிணை மருங்கிற் கிளந்தாங்கியலும்.

குடிமைமுதலாகவிறற்சொலீறாகச்சொல்லப்பட்டபதினெட்டு முளப்பட அன்னபிறவுமவற்றொடுபொருந்தித்தொக்கு முன்னத்தினுணருங்கிளவிகளெல் லாம் உயர்திணைபொருண்மே னின்றனவாயினு மஃறிணைப்பொருளையுணர் த்தின்றவழிப்போல வஃறிணைமுடிபேகொள்ளும். எ - று. குடிமைநன்று- குடிமைதீது - ஆண்மைநன்று - ஆண்மைதீது - எனவரும். ஒழிந்தனவற்றிற்கு மிவ்வாறுபொருந்தும்வினைதலைப்பெய்க. தன்மைதிரிபெயர் - அலி. இதனொ டொருபொருட்கிளவியாய்வருவனவுங்கொள்க. உறுப்பின்கிளவிகுருடு,முடம் என்னுந்தொடக்கத்தன. காதற்சொல்-பாவை - யானையெனஒப்புமைகருதாது காதல்பற்றிவருவன. சிறப்புச்சொல்-கண்போலச்சிறந்தானைக் கண்ணென் றலும், உயிர்போலச்சிறந்தானைஉயிர்என்றலும்என இவைமுதலாயின. செறற் சொல்-செறுதலைப்புலப்படுக்கும்பொறியறை, செழியிலிஎன்னுந்தொடக்கத்த ன. விறற்சொல்-விறலையுணர்த்தும்பெருவிறல்அருந்திறலென்னுந்தொடக்கத்த ன. தன்மைதிரிபெயர்முதலாயினபொருள்வகையானுறுகவடக்கப்பட்டன.கு டிமையாண்மை யிளமை மூப்படிமை வன்மைபெண்மை யுறுப்பின்கிளவி சி றப்புச்சொல் விறற்சொலெனபன உயர்திணைக்கண் ஆகுபெயரா யல்லதுவா ரா அல்லன இருதிணைக்கண்ணும் ஒத்தவுரிமையவெனககொள்க. காதல்பற்று ச் சிறுவனை யானையென்றலும் ஆகுபெயரா மன்றோவெனின் யாதானுமோரி யைபுபற்றி யொன்றன்பெய ரொன்றற்காய தாகுபெயராம் இயைபுகருதாது காதன்முதலாயினவற்றான் யானையென்றவழி ஆகுபெயருள் அடங்காவென் பது. ஒன்றன்பெயரொன்றற்காதலொப்புமையான் ஆகுபெயரொன்பாருமு ர். சொல்லானன்றித் திணைவேறுபாடு சொல்லுவான் குறிப்பொடுபடுத் து-

ரப்படுதலின் முன்னத்தினுணருங்கிளவியென்றார். அஃறிணைமுடிபினவென்றது அஃறிணைமருங்கிற் கிளந்தாங்கியலும் எனப்பொதுப்படக்கூறியவதனாற் குடிமைநன்று - குடிமைநல்ல - அடிமைநன்று - அடிமைநல்ல எனவேறுபாடின்றி ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய்நிற்றலுங்கொள்ளப்படும். அன்ன பிறவு மென்றதனான்வேந்து - வேள் - குரிசில் - அமைச்சு - புரோசுஎன்னுந் தொடக்கத்தனவுங்கொள்க. குடிமைமுதலாயின உயர்திணையுணர்த்தும்வழி அஃறிணையான் முடிதல்வழுவாயினு மமைகவெனத் திணைவழுவமைத்தவாறு.

ருஎ. காலமுலக முயிரே யுடம்பே, பால்வரைதெய்வம் வினை யேபூதம், ஞாயிறுதிங்கள் சொல்லெனவரூஉ, மாயீரைந் தொடு பிறவுமன்ன, வாவயின்வரூஉங் கிளவியெல்லாம், பால்பிரிந்திசையா வுயர்திணைமேன.

காலமுதலாகச் சொல்லப்பட்டபத்து மத்தன்மையபிறவுமாகிய வப்பகுதிக்கண்வருஞ் சொல்லெல்லா முயர்திணைச்சொல்லாயினுமுயர்திணைக்கட்பால் பிரிநதிசையாவஃறிணைப்பாலாயிசைக்கும் - எ - று. இவற்குக்காலமாயிற்று - உலகம்பசித்தது-உயிர்போயிற்று - உடம்புநுணுகிற்று - தெய்வஞ்செய்தது - வினைவிளைநதது - பூதம்புடைத்தது - ஞாயிறுபட்டது- திங்களெழுநதது- சொன்னன்று - எனவரும். பிறவுமென்றதனால் - பொழுதுநன்று - யாக்கைதீது - விதிவலிது - கனலிகடுகிற்று - மதிநிறைநதது - வெள்ளியெழுந்தது - வியாழநன்று - என்பனபோல்வனகொள்க. காலமென்றது காலக்கடவுளை. உலகமென்பதீண்டு மக்கட்டொகுதியை. உயிரேயுடம்பே யெனப்பொதுமைபடாற் கூறினேனு மக்களுயிருமுடம்புமேகொள்ளப்படும். என்னை? உயர்திணை முடிபுகொள்ளாவென விலக்கப்படுவனவவையே யாகலினென்பது. அஃறிணை யென்மனாரவரலபிறவேயென்புழி யஃறிணையாயடங்கியுயர்திணை முடிபெய்தாமையின் அவையும்விலக்கற்பாட்டிற் கேலாவெனின்அற்றன்றுமக்கட்சுட்டுடைமையானவையுயர்திணையேயாமென்பது. யாதோமக்கட்சுட்டுடையவாறெனின் அறஞ்செய்து துறக்கம்புக்கான் - எ-ம், உயிர்நீத்தொருமகன்கிடநதான - எ - ம். உயிருமுடம்புமவரின்வேறன்றியவராகவுணரப்பட்டு உயர்திணைக்கேற்றமுடிபுகொண்டுநிற்றலின்மக்கட்சுட்டுடையவென்பது. ஓராவைஎம்மன்னைவந்தாளென்றும், ஓரொருத்தைஎந்தைவநதானென்றும் உயர்திணைவாய்பாட்டாற்கூறியவாறுபோல உயிருமுடம்பு மவ்வாறுகூறப்பட்டன வென்று கொள்ளாமோவெனின்கொள்ளாம். அவற்றூன் வரும்பயனோக்கிக்காதலானெம்மன்னை யெந்தையென்றுஞண்டு. ஈண்டுக்காதன்முதலாயினவின்மையின்மக்கட்சுட்டுடையவென்பது. பால்வரைதெய்வமென்பதுஎல்லார்க்குமின்பத்துன்பத்திற்குக்காரணமாகிய விருவினையையும்வகுப்பது. வினையென்பது அறத்தெய்வம். சொல்லென்பது நாமகளாகியதெய்வம். அஃதேறகுடிமை யாண்மை யென்பனவற்றொடிவற்றிடைவேற்றுமையென்னையெனின் அவையிருதிணைப் பொருட்கண்ணுஞ்சேறன்மாலைய; இவையன்னவல்லவென்பது. உலகமென்ப திடத்தையுமாகுபெயரானிடத்துநிகழ்பொருளாகிய மக்கட்டொகுதியையுமு

ணர்த்துமாகலா னிருதிணைக்கண்ணுஞ்சென்றதன்றேவெனின் அற்றன்றுவடநூலுளுலகமென்ப திருபொருட்குமுரித்தாக வோதப்பட்டமையின் மக்கட்டொகுதியையுணர்த்தும் வழியுமுரியபெயரேயாகலி னுருபெயரன்று.அதனுலொருசொலிருபொருட் கண்ணுஞ்சென்றதெனப்படாதிருபொருட்குமுரிமையானிரண்டுசொல்லெனவேபடுமென்பது. வேறுபொருளுணர்த்தலின் வேறுசொல்லாதலேதுணிவாயினும் பலபொருளொருசொலென்புழி யெழுத்தொப்புமைபற்றியொருசொலென்முர். மேலென்பதேழாம்வேற்றுமைப்பொருளுணர்த்துவதோரிடைச்சொலாகலினீறுதிரிந்துமேனவெனநின்றது. இதுவுந்திணைவழுவமைதி.

௫அ. நின்றாங்கிசைத்தலிவணியல்பின்றே.

ஈறுதிரியாதுநின்றாங்குநின்றுயர்திணையாயிசைத்தலீண்டியல் பின்று- எ - று. ஈண்டென்றதுகாலமுதலாகியசொற்களை. அவையிடையீடின்றி மேற்சொல்லப்பட்டு நிற்றலினிவணென்முர். இவணியல்பின்றெனவேகுடிமை யாண்மைமுதலியசொல்லின்கண்-குடிமைநல்லன்- வேந்துசெங்கோனல்லனென நின்றாங்குநின்றுயர்திணையாயிசைத்தலியல்புடைத்தென்பதாம்.

௫௯. இசைத்தலுமுரிய வேறிடத்தான.

காலமுதலாகிய சொல்லுயர்திணையாயிசைத்தலு முரியவீறுதிரிந்து வாய்பாடுவேறுபட்டவழி - எ - று. காலன்கொண்டான்- உலகர்பசித்தார்- எனவாய்பாடு வேறுபட்டவழி யுயர்திணையா யிசைத்தவாறுகண்டுகொள்க.

௬0. எடுத்தமொழியினஞ்செப்பலுமுரித்தே.

இனமாகிய பலபொருட்சனென்றனைவாங்கிக் கூறியவழியச்சொற்றன் பொருட்கினமாகிய பிறபொருளைக் குறிப்பாலுணர்த்தலுமுரித்து - எ-று. உம்மை யெதிர்மறையாகலா னுணர்த்தாமையுமுரிதென்பதாம். அறஞ்செய்தான் றுறக்கம்புகும்- எ-ம்,இழிவறிந்துண்பான்கணின்பமெய்தும்-எ-ம்வரும். இவை சொல்லுவார்க்கினப் பொருளியல்புரைக்குங் குறிப்புள்வழிமறஞ்செய்தான் றுறக்கம்புகான், கழிபேரிரையா னின்பமெய்தான் எனவினஞ்செப்புதலுமக் குறிப்பில்வழி யினஞ்செப்பாமையுங்கண்டுகொள்க. எடுத்தபொருளை யுணர்த்துமொழியை யெடுத்தமொழியென்முர். இனனல்பொருளினிக்குதற்கினமென்முர். அஃதேன்மேல் சேரிக்கோழியலைத்ததெனக் கீழ்ச்சேரிக்கோழியலைப்புண்டதெனவும், குடங்கொண்டான் வீழ்ந்தானெனக் குடம்வீழ்ந்ததெனவுமிவையினஞ்செப்புமென்றும், ஆவாழ்க - அந்தணர்வாழ்கஎன்பன வினஞ்செப்பாவென்று முரையாசிரியர் கூறினராலெனின் அற்றன்று கீழ்ச்சேரிக்கோழியலைப்புண்டலின்றி மேல்சேரிக்கோழியலைத்த லமையாமையானுங் குடம்வீழ்தலின்றிக் குடங்கொண்டான் வீழ்தலமையாமையானுங் கீழ்சேரிக்கோழியலைப்புண்டலும்,குடம்வீழ்தலுஞ்சொல்லானன்றி யின்றியமையாமையாகிய பொருளாற்றலாற் பெறப்படுமாகலா னீண்டைக்கெய்தா இது சொல்லாராய்ச்சி யாகலா

னென்பது. இன்னோரன்ன சொல்லாற்றலாற் பெறப்பட்டனவெனின் புகையுண்டென்றவழி எரியுண்மைபெறுதலுஞ் சொல்லாற்றலாற் பெறப்பட்டதாமென்பது. இனிஆவாழ்க, அந்தணர்வாழ்க என்புழிச்சொல்லுவாரொழிந்[illegible]லங்குமொழிந்த மக்களுஞ்சாகவென்னுங் கருத்தினானுமினிவையுமினஞ் [illegible]புவனவன்றேவென்பது. அதனானைவைபோலியுமையென்க. ஒருதொடர் ஒருபொருளுணர்த்தியமையாது வேறொருபொருளுங் குறித்துநிற்றல்வழுவாயினு மமைகவெனமரபு வழுக்காத்தவாறு.

௬௧. கண்ணுந்தோளு முலையும்பிறவும், பன்மைசுட்டிய சினைநிலைக்கிளவி, பன்மைகூறுங் கடப்பாடிலவே, தம்வினைக கியலு மெழுத்தலங்கடையே.

தம்வினைக்கியலு மெழுத்தான்முடிதலுந் தம்முதல்வினைக்கியலு மெழுத்தான்முடிதலுமெனச் சினைநிலைக்கிளவி யிருமுடிபுடையவற்றுண் முதல்வினையெழுத்தான முடிவுழியென்பார் தம்வினைக்கியலு மெழுத்தலங்கடையென்றார். பன்மைகூறுங் கடப்பாடிலவேயென்றது கண்முதலாயவும் பிறவும்பன்மைகுறித்துநின்ற சினைநிலைக்கிளவி பன்மையாற்சொல்லப்படும் யாப்புறவுடையவல்ல முதலொன்றாயினொருமையானும் பலவாயிற் பனமையானுங்கூறப்படும் - எ - று. உ - ம்- கண்ணல்லள் - தோணல்லள் - முலைநல்லள் - எ - ம், கண்ணல்லர் - தோணல்லர் - முலைநல்லர் - எ - ம் வரும். பிறவுமென்றதனாற் புருவங்காதென்றாற தொடக்கத்தனவுங்கொள்க. பன்மைகூறுங் கடபபாடிலவேயென்றதனாற் பால்வழுவுந தமவினைக்கியலு மெழுத்தலங்கடையேயென்றதனாற் றிணைவழுவுமமைத்தார. பன்மைகொண்டன பன்மையொருமை மயக்கமில்லாத் திணைவழுவாகலிற் றம்வினைக்கியலு மெழுத்தலங்கடையே [illegible]ன்பதனானமைக்கப்படும். மூக்குநல்லள் - கொப்பூழ்நல்லள - எனஒருமைச்சினைப்பெயர்நின் றுயர்திணைகொண்டனவும், சிறங்கரியள், கவ்வுக்கடியள் - எனப்பண்புநதொழிலுநின றுயாதிணைகொண்டனவு ந தன்னினமுடித்தலென்பதனானமைக்கப்படும். கோடுகூரிதுகளிறு - குளம்புகூரிதுகுதிரை எனவஃறிணைப்பன்மைச்சினைப்பெயர்நின்று முதல்வினையாகிய வொருமையான் முடிந்தனவுமமையுமாறென்னையெனின் ஆண்டுப்பன்மை யொருமைமயக்கமல்லது திணைவழுவின்மையினீண்டைக்கெய்தா அப்பன்மையொருமைமயக்க மொன்றெனமுடித்தலென்பதனானமைக்கப்படும். அஃதேலிச்சூத்திரத்தாற் றிணைவழுவொடுகூடிய பால்வழுவமைககப்பட்டதென்ப தெறறாற்பெறுதுமெனின் சினைக்கிளவிக்குத் தம்வினைக்கியலு மெழுத்தாவதூஃறிணைவினைக்குரியவெழுத்தாம் அஃதல்லாததுயர்திணை வினைக்குரியவெழுத்தேயாம். என்னை? அஃறிணைக்கு மறுதலையுயர்திணையேயாகலான்] அதனாற் றிணைவழுவுதலும் பெறுதுமென்பது. அஃதேற் றம்வினைக்கியலுமெழுத்தாவன சினைவினைக்குரியவெழுத்தென்று மவையல்லாதனவாவன முதல்வினைக்குரிய வெழுத்தென்றுமுரைக்க. உரைக்கவேயுயாதிணைச்சினையு மஃறிணைச்சினையு மெல்லாமடங்குமெனின் அற்றன்று அஃறிணைக்கட் சினைவினைக்குரியவெழுத்தாம் முதல்வினைக்குரியவெழுத்திற

கு வேறுபாடின்றி யெல்லாமஃறிணை யெழுத்தேயாகலிற் றம்வினைக்கியலுமெ ழுத்தலங் கடையென்பதற்கேலாதாகலாற் கண்முதலாயின வுயர்திணைச்சினை யே[illegible]மென்பது.

முதலாவது
கிளவியாக்கம் - முற்றிற்று.

இரண்டாவது
# வேற்றுமையியல்.

——:o:——

௬௨. வேற்றுமைதாமே யேழெனமொழிப.

நான்குசொற்கும் பொதுவிலக்கண முணர்த்தின ரதற்கிடையீடின்றி யவற்றது சிறப்பிலக்கண முணர்த்துதன் முறைமையாயினும் வேற்றுமையில க்கண முணர்த்துதற்கு வேறிடமின்மையானும், பொதுவிலக்கணமாத லொ ப்புமையானும், உருபேற்றல் பெயர்க்கிலக்கணமாகலின் வேற்றுமையுணர்த் திப் பெயருணர்த்தன் முறையாகலானுங் கிளவியாக்கத்திற்கும் பெயரியற்கு மிடைவேற்றுமையிலக்கண முணர்த்திய வெடுத்துக்கொண்டார். வேற்றுமை யாவன பெயருமோரிடைச் சொல்லுமாகலி னவற்றதிலக்கணமும் பொதுவி லக்கணமேயாம். வேற்றுமையிலக்கணமென வொன்றாயினுஞ் சிறப்புடைய வெழுவகைவேற்றுமையு மவற்றது மயக்கமும் விளிவேற்றுமையுந் தனித் தனி யுணர்த்தத்தகும் வேறுபாடு யாப்புடைமையான் மூன்றோத்தா னுணர் த்தினார். பொதுவிலக்கணமுணர்த்திச் சிறப்பிலக்கண முணர்த்துதன் முறை மையாகலின் முதற்கண்ணதாகிய பெயர்ச்சொற்குப் பயனிலைகோடலு முரு பேற்றலுங் காலந்தோன்றாமையுமாகிய விலக்கணமுணர்த்துவா ரியைபுபட் டமையான் வேற்றுமையிலக்கணமுணர்த்தினாரெனமேலோத்தினொடிவ்வோ த்திடையியைபு கூறினாரா லுரையாசிரியரெனின் அற்றன்று இவ்வோத்துப் பெயரிலக்கண நுதலியெடுத்துக்கொள்ளப்பட்டதாயினு முருபேற்றலும் பய னிலைகோடலுங் காலந்தோன்றாமையுமாகிய பெயரிலக்கண முன்னோதியியை புபடுதலான் வேற்றுமையுணர்த்துங் கருத்தினராயினவற்றையு மின்னவிலக் கணத்த வெனவுணர்த்திப் பின்னுமெடுத்துக்கொண்ட பெயரிலக்கணமேபற்றி யோதிப்பெயரியலென வோரோத்தான் முடியற்பாற்றன்றே யவ்வாறன்றி வேற்றுமையிலக்கணமேமுன்கூறி யன்றியனைத்தும்பெயர்ப் பயனிலையேயெ னவும் ஈறுபெயர்க்காகு மியற்கையவென்பவெனவும் வேற்றுமையிலக்கணங் கூறி யச்சூத்திரத்தாற் பயனிலைகோடலு முருபேற்றலும் பெயர்க்கிலக்கண மென்ப தியத்துணரவைத்துப் பின்னும் வேற்றுமையிலக்கணமே யுணர்த்தி யிதனை வேற்றுமையோத்தென்று மவற்றது மயக்கமுணர்த்திய வோத்தைவே ற்றுமை மயங்கியலென்றுஞ் சிறப்பில்லா விளிவேற்றுமை யுணர்த்தியவோத் தை விளிமரபென்றுநுதலி யதனாற்பெயர்கொடுத்து மூன்றோத்தாகவைத்து

ப்பெயரியலென வேறோரோத்திற்குப் பெயர்கொடுத்தமையானு மெல்லாச் சொல்லும் பொருள்குறித்தனவே யென்பதுமுதலாகிய வைந்துசூத்திரமும் பெயரிலக்கணமுணர்த்து மோத்தின்முன் வையாதிடைவைத்தல் பொருந்தா மையானு மிவ்வோத்துப் பெயரிலக்கண நுதலியெடுத்துக் கொள்ளப்பட்ட தன்று வேற்றுமையிலக்கணமே நுதலியெழுந்ததெனவே படுமதனு னவ ராக்கது கருத்தன்றென்க. அஃதேற் பெயர்நிலைக்கிளவி காலந்தோன்றாவென ப்பெயரிலக்கணமீண்டுக் கூறியதென்னையெனிற் பயனிலைகோடலு முருபேற் றலும் பெயர்க்கிலக்கணமென்ப தீண்டுப் பெறப்பட்டமையா னவற்றொடி யையக்காலந்தோன்றாமையுமீண்டேகூறினார். பெயரிலக்கணமாதலொப்புமை யானென்பது (வேற்றுமை - மொழிப) என்றதுவேற்றுமையாவன வேழென் றுசொல்லுவர்தொல்லாசிரியர். எ-று. செயப்படுபொருண்முதலாயினவாகப் பெயர்ப்பொருளை வேறுபடுத்துணர்த்தலின் வேற்றுமையாயின. செயப்படு பொருண்முதலாயினவற்றின் வேறுபடுத்துப் பொருண்மாத்திரமுணர்த்தலி னெழுவாயும் வேற்றுமையாயிற்று. அல்லதூஉம்வேற்றுமையென்பதுபன்மை பற்றியவழக்கெனினுமமையும். தாமேயென்பதுகட்டுரைச்சுவைபடநின்றது. ()

௬௩. விளிகொள்வதன்கண்விளியொடெட்டே.

விளிகொள்வதன்கண்ணதாகிய விளியொடுதலைப்பெய்ய வேற்றுமை யெட்டாம். எ - று. வேற்றுமையென்பததிகாரத்தான்வந்தது. முன்னர்விளியெனப்படுவ:கொள்ளும்பெயரொடு தெளியத்தோன்றுமியற்கையவென்பவென்ப வாகலின்விளிகொள்வதென்றது விளிகொள்ளும்பெயரை. ஆதன்கண்விளியெ ன்றதனாற்பெயருமன்று பெயரின்வேறுமன்று; விளிவேற்றுமையாவது திரிந் துமியல்பாயுநிற்கும் பெயரிறுதியென்பதாம். வேற்றுமைதாமேயேழெனமொ ழிபவெனப்பிறர்மதங்கூறியிச்சூத்திரத்தாற்றந்துணிபுரைத்தார். (உ)

௬௪. அவைதாம், பெயரையொடுகு, வின்னதுகண்விளியென் னுமீற்ற.

எட்டெனப்பட்ட வேற்றுமையாவன விளிவேற்றுமையை யிறுதியாகவு டைய பெயர் ஐ ஒடு கு இன் அது கண் ஆம். எ - று. பெயர் ஐ ஒடு கு இன் அது கண் என்பனபலபெயரும்மைத்தொகை. அஃதொருசொல்லாய்விளியெ ன்னுமீற்றவென்பதனுன் விசேடிக்கப்பட்டது. பெயரும், ஐயும், ஒடுவும், குவ் வும், இன்னும்,அதுவும், கண்ணும்எனவிரியும். சிறப்புடைப்பொருளைத்தா னினி து கிளத்தலென்பதனுன் ஒடுவென்று மதுவென்றுமோதினாராகலின் ஆனுருபு ம்,அகரவுருபுங்கொள்ளப்படும். விளிவேற்றுமையினதுசிறப்பின்மைவிளக்கிய பெயரையொடுகு வின்னது கண்விளியென்றது விளியென்னு மீற்றவெனப் பிரித்துக்கூறினார். (௩)

௬௫. அவற்றுள், எழுவாய்வேற்றுமைபெயர்தோன்றுநிலையே.

மேற்சொல்லப்பட்ட வேற்றுமையுண்முதற்கட்பெயரொன்று கூறப்பட்ட வேற்றுமையாவது பெயர்தோன்றியதுணையாய்நிற்கு நிலைமையாம். எ - று.

பெயர்தோன்றிய துணையாய்நிற்குநிலைமையாவது உருபும் விளியுமேலாதுபி றிதொன்றனொடுதொகாதுநிற்குநிலைமை. எனவேயுருபும்விளியுமேற்றுப் பிறி தொன்றனொடு தொக்குநின்றபெயர் எழுவாய் வேற்றுமையாகாதென்றவாறு ம். ஆ, அவன் - எனவரும். (௪)

௬௬. பொருண்மைசுட்டல் வியங்கொளவருதல், வினைநிலையு ரைத்தல் வினாவிற்கேற்றல், பண்புகொளவருதல் பெயர் கொளவருதலென்,றன்றியனைத்தும்பெயர்ப்பயனிலையே.

பொருண்மைசுட்டல் ஆவுண்டென்பது. வியங்கொளவருதல் ஆசெல்க என்பது. வினைநிலையுரைத்தல் ஆகிடந்ததென்றல். வினாவிற்கேற்றல் அஃதியாவ து, அஃதெவன் எனவினாச்சொல்லொடுதொடர்தல். பண்புகொளவருதல் ஆக ரிதுஎன்பது. தன்னினமுடித்தலென்றதனால் ஆவில்லை, ஆவல்ல என்னுந்தொட க்கத்துக் குணப்பொருளவல்லாவினைக்குறிப்பொடுதொடர்தலுங்கொள்க. பெ யர்கொளவருதல் ஆபலஎன்பது. அன்றியனைத்தும் பெயாப்பயனிலையேயென் பதவ்வாறும் பெயர்வேற்றுமைப்பயனிலையாம் - எ- று. முடிக்குஞ்சொற்பொ ருளத்தொடர்மொழிக்குப் பயனாகலிற்பயனிலையென்றார். உண்டென்பதுபண் புமுதலாயினசுட்டா துண்மையேசுட்டலின் வேறுகூறினார். பொய்ப்பொரு ளின் மெய்ப்பொருட்கு வேற்றுமையுண்மையாகலி னவ்வுண்மையைப்பொரு ண்மையென்றார். வியங்கொளவருதல் வினைநிலையுரைத்தற்கண்ணும், வினாவிற் கேற்றல் பெயர்கொளவருதற்கண்ணும், வினைக்குறிப்பாயவழிப பண்புகொள வருதற்கண்ணு மடங்குமாயினும் வினையும், பெயரும், பண்புமுடிக்குஞ்சொல் லாதலேயன்றி முடிக்கப்படுஞ்சொல்லாதலுமுடைய. வியங்கோளும் வினாவு முடிக்குஞ்சொல்லாயல்லது நில்லாமையின் வேறுபாடறிவித்தற்கு வேறுகூறி னொன்பது. பெயர்தோன்று நிலையென்பதனானு மன்றியனைத்தும்பெயாப்பய னிலையேயென்றதனானும் பெயர்தோன்றிய துணையாய்நின்று பயனிலைத்தாத லெழுவாய் வேற்றுமையதிலக்கணமென்பதுபெற்றும். ஆபலவென்புழிப்பல வென்பதற்குப் பயனிலையாதெனின் அது பயனிலையாய் ஆவென்பதனைமுடித்த ற்கு வந்ததாகலிற்றன் பிறிதோர்சொன்னோக்காது ஆவென்பதனொடுதொடர்ந் ததனை முடித்தமைநதுமாறுமென்பது. அஃதேற் பயனிலைகொள்ளாததெழுவா ய் வேற்றுமையாமாறென்னையெனின் உருபேற்றல் பெயர்க்கிலக்கணமாயினு முருபேலாதவழியும பெயராமாறுபோல எழுவாய்வேற்றுமை பயனிலைகொள் ளாதவழியு மெழுவாய்வேற்றுமையேயாமெனபது. இலக்கியமெங்குஞ் செல் லாதனவிலக்கணமாமாறென்னையெனின் ஆண்டிலக்கணமாவன வுருபேற்றற் கேற்றதன்மையும் பயனிலையும் பயனிலைகோடற்கேற்ற தன்மையுமாகலி னத் தன்மையெல்லாவற்றிற்கு முண்மையினிலக்கணமாமெனபது. அகரச்சுட்டன் றியென வீறுதிரிந்துநின்றது. அன்றியனைத்தும்பெயர்ப்பயனிலையெனவே பய னிலைகோடல் பெயர்க்கிலக்கண மென்பதூஉம்பெற்றும. (௫)

௬௭. பெயரினாகிய தொகையுமாருளவே, யவ்வுமுரிய வப்பா லான.

பெயரும்பெயருந்தொக்க தொகையுமுளவவையுமுரிய வெழுவாய் வேற்றுமையாய்ப் பயனிலைகோடற்கு - எ - று. யானைக்கோடுகிடந்தது, மதிமுகம் வெயர்த்தது, கொல்யானைநின்றது, கருங்குதிரையோடிற்று, உவாப்பதினான்குகழிந்தன, பொற்றொடிவந்தாள் எனவரும். பெயரினாகிய தொகையுமென்னுமும்மையாற் பெயரொடுபெயர்தொக்கனவேயன்றி நிலங்கடந்தான்மாகொணர்ந்தான்எனப் பெயரொடு வினைவந்துதொக்கவினையினாகிய தொகையுமுளவென்பதாம். ஆகவே பெயரொடுபெயரும் பெயரொடுதொழிலுந் தொக்கன தொகையென்பதுபெற்றாம். அவ்வுமுரியவெனப் பொதுவகையாற்கூறினாரேனு மேற்புழிக்கோடலென்பதனான் எழுவாய்வேற்றுமையாதற் கேற்புடைய பெயரினாகிய தொகையேகொள்ளப்படும். இருதொடர்படச் சூத்திரித்திடார்ப்படுவதென்னை? பெயரினாகிய தொகையு மெழுவாய்வேற்றுமையாமென்றோதவமையாதோவெனின் அங்ஙனமோதிற் பெயரொடுபெயரும், பெயரொடுவினையுந் தொக்கனதொகைச்சொல்லாமென்னுந் தொகையிலக்கணம் பெறப்படாதாம்; அவ்விலக்கண முணர்த்துதற்கிவ்வாறு பிரித்தோதினாரென்பது. பெயரினாகிய தொகையுமென்றவும்மையான் வினையினாகிய வினைத்தொகை தழுவப்பட்டதென்றும், எல்லாத்தொகையு மொருசொன்னடையவென்பதனாற்றொகைச்சொலெல்லா மெழுவாய்வேற்றுமையாதல் பெறப்படுதலினீண்டவ்வுமுரியவப்பாலானவென்றது தொகைச்சொற்குப் பயனிலைகோடன் மாத்திரமெய்துவித்தற்கென்று முரையாசிரியர் கூறினாராலெனின் அற்றன்று வினைத்தொகைக்கு நிலைமொழிவினையென்ப துரையாசிரியர்க்குக்கருத்தன்மை வினையின்றொகுதி காலத்தியலு மென்னுஞ்சூத்திரத்திற்சொல்லுதும். இனியெல்லாத்தொகையு மொருசொன்னடையவென்பதற்கு ஒருசொன்னடையவாமென்பதல்ல தெழுவாய்வேற்றுமையாமென்னுங் கருத்தின்மையானு மக்கருத்துண்டாயி னவையு மெழுவாய்வேற்றுமையாய்நின் றன்றியனைத்தும் பெயர்ப்பயனிலையேயென்றதனாற் பயனிலையெய்துமாகலி னவ்வுமுரியவப்பாலானவென்றல்கூறிய கூற்றுமாகலானு மதுவுமுரையாசிரியர் கருத்தன்றென்க. அஃதேற்றொகையு மெழுவாய்வேற்றுமையாமென்பதே யிச்சூத்திரத்திற்குக் கருத்தாயினெழுவாய்வேற்றுமை பெயர்தோன்று நிலையேயென்னுஞ் சூத்திரத்தின் பின்வைக்கவெனிற் பெயர்தோன்றிய துணையாய்நிற்றலும் பயனிலைகோடலுமாகிய வெழுவாய்வேற்றுமை யிலக்கணமிரண்டுந் தொகைச்சொற்கு மெய்துவித்தற் கவ்விரண்டுசூத்திரத்திற்கும் பின்வைத்தாரென்பது. ஆண்டுவைப்பினன்றியனைத்தும் பெயர்பபயனிலையேயென்றதனாற் பயனிலைகோடல் பெயர்க்கேயா யத்தொகைக்கெய்தாதாமென்பது. (௬)

௬அ. எவ்வயிற்பெயரும் வெளிப்படததோன்றி, யவ்வியனிலை யல் செவ்விதென்ப.

மூன்றிடத்துப்பெயருஞ் செவிப்புலனாகத்தோன்றிநின்று பயனிலைகோடல் செவ்விதென்பவாசிரியர் - எ - று. எனவேயவ்வாறு தோன்றாதுநின்று பயனிலைகோடலுமுண்டு; அது செவ்விதன்றென்றவாறாம். பெயரொன்ற நீண்டெ

மூவாயை. கருவூர்க்குச்செல்லாயோ சாத்தாவென்றவழிச் செல்வல்-எ-ம், யான்யாது செய்வலென்றவழி இதுசெய்-எ- ம், இவன் யாரென்றவழிப்படைத் தலைவன் - எ - ம் செப்பியவழியா னீ யிவனென்னுமெழுவாய் வெளிப்படாது நின்று செல்வல், இதுசெய், படைத்தலைவனென்னும் பயனிலைகொண்டவாறு கண்டுகொள்க. எவ்வயிற்பெயருமென்றதென்னையெனின் செல்வல், இதுசெய்யென்னுந தன்மைமுன்னிலைவினைகளான் யானீயென்பனவற்றின் பொருளுமுணரப்படுதலின் யான்செல்வல், நீயிதுசெய் எனப்பெயர்வெளிப்படுதல் பயமின்றாயினும் வழக்குவலியுடைத்தாகலி னவ்வாறுவருதல் பயமின்றெனப்படாதென்பதுவிளக்கிய எவ்வயிற்பெயருமென்றானென்பது. அவ்வியலானிலையல் எனவிரியும். பயனிலைகதிருநிலைகூமயு மோதாதெழுவாய்க்கே யோதுதலாற் பயனிலைவெளிப்பட்டேநிற்கும். எவ்வயிற்பெயரும் பயனிலைகோடல் செவ்விதெனவுருபேற்றல்செவ்விதன்றுமெனவுரைத்து அவ்வாய், நீயி ரென்பனவுருபேலாவென்று காட்டினாராலுரையாசிரியரெனின் அவ்வாயென்பதிடைச்சொல்லா யாண்டென்னும்பொருள்பட நின்றவழியுருபேயன்றிப் பயனிலையுமேலாதாம். இனியல்வழிககண் நும்மென்பதுதிரிநது நீயிரொனநின்ற திரிபைப்பெயரெனக்கொண் டுருபேலாதென்றாராயின் நீயென்பதன்றிரிபாகிய நின்னென்பதனையும் பெயராகக்கொண்டு பயனிலைகொள்ளாதென்றுங்கூறல்வேண்டும். அன்றி நும்மின்றிரிபாகிய நீ யிரென்பதனை எல்லாநீயிர் நீயெனக்கிளந்தென-இயற்கைப்பெயரொ டொருங்குவைத்தது நீயிரொன்னுந திரிபேயியல்பாக வேற்றுமைக்கண் நும்மெனத்திரிபி_ மமையுமென்னுங்கருத்தினராயன்றே; அதனுணியல்பாககொள்ளப்பட்ட நிலைமைக்கணீயிரொன்பதனை யுருபேலாதெனறுராயி னும்மெனத்திரிந்துருபேற்பதனை யுருபேலாதென்றல பொருந்தாதாமதனுனது போலியுரையென்க. (எ)

௬௬. கூறியமுறையி னுருபுநிலைதிரியா, நிறுபெயர்க்காகு மியற்கையவென்ப.

எழுவாய்வேற்றுமை யுணர்த்தி யேனையறுவகைவேற்றுமை யிலக்கணமுமுணர்த்தியவெடுத்துக்கொண்டாா டெயர் ஐ ஒடு கு இன் அது கண் என்றுகூறப்பட்ட முறைமையையுடைய வுருபுதநிலை திரியாதுபெயர்க்கீறு மியல்பையுடையவென்று சொல்லுவராசிரியர் - எ - று. சாத்தனை - சாத்தனொடு - சாத்தற்கு - சாத்தனின் - சாத்தனது - சாத்தன்கண் - எனவரும். அம்முறை பற்றியவையெண்ணுப்பெயரான் வழங்கப்படுதலிற் கூறியமுறையினுருபென்றார். வினைச்சொலிறுதிநிற்கு மிடைச்சொற்றுமென வேறுணரப்படா தச்சொற்குறுப்பாய்நிற்குமன்றே யிவையவ்வாறு பெயர்க்குறுப்பாகாது தாமென வேறுணரப்பட்டிறுதிநிற்குமென்பார் நிலைதிரியாதென்றார். உருபுபெயர்சார்ந்து வருமெனவேயுருபேற்றலாகிய பெயரிலக்கணமும்பெறப்பட்டது. (அ)

௭0. பெயர்நிலைக்கிளவி காலந்தோன்றா, தொழினிலையொட்டு மொன்றலங்கடையே.

பெயர்ச்சொல் காலந்தோன்றாவினைச்சொல்லொடொக்கு மொருகூறல்
லாதவிடத்து-எ-று. சாத்தன் - கொற்றன் - உண்டல் - தின்றல்-எனக்காலந்
தோன்றாதுநிற்றலும், உண்டான்-தின்றான் - எனத் தொழினிலையொட்டுவன
காலந்தோன்றிநிற்றலுங் கண்டுகொள்க. உண்டான் - தின்றான் - என்னுந்தொ
டக்கத்துப் படுத்துச்சொல்லப்படுந்தொழிற்பெயர் வினைச்சொற்போலத்திணை
யும்பாலுங் காலமுமுதலாயினவற்றைவிளக்கி, அன் ஆன் முதலாகிய வீற்றவாய்
வருதலிற் றொழினிலையொட்டுமென்றார். ஒட்டுமென்ப துவமச்சொல். பெயரா
கிய நிலையையுடையது பெயர்நிலையென வன்மொழித்தொகைப்பெயர்ப்பொ
ருள். தொழினிலையுமது. காலந்தோன்றாவென்பன வொருசொல்லாய்ப் பெய
ர்நிலைக்கிளவியென்பதற்குமுடிபாயின. பயனிலைகோடலு முருபேற்றலுமாகிய
பெயரிலக்கண மீண்டுப்பெறப்படுதலி னவற்றொழியக் காலந்தோன்றாமை
யாகிய பெயரிலக்கணமு மீண்டேகூறினார். பெரும்பான்மைபற்றிக் காலந்
தோன்றாமை பெயரிலக்கணமாயிற்று. (௧௰)

௭௧. இரண்டாகுவதே, ஐயெனப்பெயரிய வேற்றுமைக்கிள
வி, யெவ்வழிவரினும் வினையேவினைக்குறிப், பவ்விருமுத
லிற் றோன்றுமதுவே.

பெயரை யொடு கு என்னுஞ்சூத்திரத்து ஐயெனப் பெயர்பெற்ற வேற்று
மைக்கிளவிஇரண்டாவதாம்; அஃதுயாண்டுவரினும்வினையும் வினைக்குறிப்புமா
கிய வவ்விரண்டு முதற்கண்ணுந்தோன்றுமவை பொருளாகவரும். எ-று. குடத்
தைவனைந்தான் - குழையையுடையன்-எனவரும். எண்ணுமுறையானிரண்டா
குவதென்பதுபெறப்படுமாயினுமிக்குறிதொல்லாசிரியர் வழக்கென்பதறிவித்த
ற்குஐயெனப்பெயரிய வேற்றுமைக்கிளவியிரண்டாகுவதென்றார். இதுமூன்றா
குவது முதலாயினவற்றிற்குமொக்கும். பெயரியவென்பது பெயரொன்பதுமுத
லாக முடிந்ததோர்பெயரெச்சம். தம்மையுணர்த்துவனவும் பெயரெனப்படுத
லின் ஐயெனப்பெயரியவென்றார். வினையேவினைக்குறிப்பென்றாராயினுமவற்றி
ன்செயப்படுபொருளேகொள்ளப்படும். அவ்விருமுதலிற் றோன்றுமென்றமை
யான் முதலாதற்கும் வேற்றுமைப்பொருளாதற்கு மேற்பனவவையேயாகலி
ன்]என்னை?அவைமுதலாதற்கேற்றவாறெனின் செயப்படுபொருண்முதலாயின
தொழிற்குக்காரணமாகலானும், ஆயெட்டென்ப தொழின்முதனிலையேயென
வவற்றை முதனிலையென்று கூறுபவாகலானுமென்பது. அஃதேற்செயப்படு
பொருளாவது தொழிற்பயனுறுவதாகலாற் குழைமுதலாயினவற்றிற் கவ்வி
லக்கணம்பெறாமையிற்செயப்படுபொருளன்மையான் வினைக்குறிப்பெனல்வே
ண்டாவெனின் அற்றன்று அம்முக்காலமுங் குறிப்பொடுங்கொள்ளு மெய்ந்
நிலையுடையவென்றாராகலிற் குறிப்புச்சொல் காலமொடுதோன்றித் தொழிற்
சொல்லாதலுங் குழைமுதலாயின தொழிற்பயனுறுதலுமாசிரியர் துணிபாகலி
னவையுஞ் செயப்படுபொருளாமென்பது. ஆயிற்செயப்படு பொருட்கட்டோ
ன்றுமெனவமையும்; வினையேவினைக்குறிப்பெனல்வேண்டாவெனின் அங்ஙன
ங்கூறிற் செய்ப்பாடினிதுவிளங்குஞ் சிறப்புடைத் தெரிநிலைவினைச்செயப்படு

பொருளையேகூறினரோ குறிப்புப்பொருளுமடங்கப் பொதுவகையாற்கூறினரோவென் றையமாமையநீங்க வினையேவினைக்குறிப்பென்முறென்பது. வினை வினைக்குறிப்பென்பன வீண்டாகுபெயர். புகழைநிறுத்தான் - புகழைநிறுத்தல் - புகழையுடையான், புகழையுடைமை-எனவிரண்டாவதுபெயரொடுதொடர்ந்தவழியும் வினைச்செயப்படுபொருளுங் குறிப்புச்செயப்படு பொருளும்பற்றியேநிற்குமென்பாரெவ்வழிவரினுமென்றியாப்புறுத்தார். இயற்றப்படுவதும், வேறுபடுக்கப்படுவதும், எய்தப்படுவதுமெனச்செயப்படுபொருண்மூன்றும். இயற்றுதலாவதுமுன்னில்லதனையுண்டாக்குதல். வேறுபடுத்தன்முனனுள்ளதனைத்திரித்தல், எய்தப்படுதலியற்றுதலும் வேறுபடுத்தலுமின்றித்தொழிற்பயனுறுந்துணையாய்நிற்றல். (௧௦)

௭௨. காப்பினொப்பினூர்தியினிழையி, னொப்பிற்புகழிற்பழியினென்று, பெறலினிழவிற்காதலின்வெகுளியிற், செறவினுவத்தலிற்கற்பினென்று, வறுத்தலிற் குறைத்தலிற்றொகுத்தலிற்பிரித்தலி, னிறுத்தலினளவினெண்ணினென்று, வாக்கலிற்சார்தலிற்செலவிற்கன்றலி, னோக்கலினஞ்சலிற்சிதைப்பினென்று, வன்னபிறவுமம்முதற்பொருள, வென்னகிளவியுமதன்பாலவென்மனார்.

செயப்படுபொருண் மூன்றனையும்பற்றி வரும்வாய்பாடுகளை விரிக்கின்றார். காப்புமுதலாகச் சிதைப்பீறுகச்சொல்லப்பட்ட விருபத்தெட்டுப்பொருளும் அவைபோல்வனபிறவுமாகிய வம்முதற்பொருண்மேல் வருமெல்லாச்சொல்லுமிரண்டாம்வேற்றுமைப்பாலவென்று சொல்லுவர்புலவர். எ - று. என்றுவென்பதெண்ணிடைச்சொல். இன்னெல்லாம்புணரியனிலையிடைப்பொருணிலைக்குதவாதெண்ணின்கண்வந்தன. முன்னர்வருவனவற்றிற்கு மீதொக்கும். அம்முதலென்றது கூறப்பட்டசெயப்படுபொருளென்றவாறு. எயிலையிழைத்தான்-என்பது இயற்றப்படுவது. கிளியையோப்பும் - பொருளையிழக்கும்-நாணையறுக்கும் - மரத்தைக்குறைக்கும் - நெல்லைத்தொகுக்கும் - வேலியைப்பிரிக்கும் - அறத்தையாக்கும் - காட்டைச்சிதைக்கும் - என்பனவேறுபடுக்கப்படுவன. குறைத்தல்சுருக்குதலுஞ்சிறிதிழககச்சிதைத்தலுமாம். அறுத்தல்சிறிதிழவாமற்சினையையாயினும் முதலையாயினுமிருகூறுசெய்தல். ஊரைககாக்கும் - தந்தையையொக்கும் - தேரையூரும் - குரிசிலைப்புகழும் - நாட்டைப்பழிக்கும் - புதல்வரைப்பெறும் - மனைவியைக்காதலிக்கும் - பகைவரைவெகுளும் - செற்றாரைச்செறும் - நட்டாரையுவக்கும் - நூலைக்கற்கும் - பொன்னைநிறுக்கும் - அரிசியையளக்கும் - அடைக்காயையெண்ணும் - ஊரைச்சாரும் - நெறியைச்செல்லும் - சூதினைக்கன்றும் - கணையைநோக்கும் - கள்வரையஞ்சும் - என்பனஎய்தப்படுவன. வெகுடலுஞ்செறலுங்கொலைப்பொருளவாயவழி வேறுபடுக்கப்படுவனவாம். செறல்வெகுளியதுகாரியம். இயற்றப்படுவதொருதன்மைத்தாகலி னதற்கொருவாய்பாடேகூறினர். ஏனையபல்விலக்கணத்தவாதலிற்பலவாய்பாட்டான் விரித்துக்கூறினர். அன்னபிறவு மென்றதனு

ற்பகைவரைப்பணித்தான் - சோற்றையட்டான் - குழையையுடையான் - பொருளையிலன் - என்னுந்தொடக்கத்தனகொள்க. காப்புமுதலாயின பொருளபற்றி யோதப்பட்டமையான் ஊரைப்புரக்கும் - ஊரையளிக்கும் - தந்தையைநீக்கும் - தந்தையையொட்டும் - தேரைச்செலுத்தும் - தேரைக்கடாவும் - என்பனபோல்வனவெல்லாங்கொள்க. இயற்றப்படுதன்முதலாகியவேறுபாடு குறிப்புவினைச்செயப்படுபொருட்கணேற்பனகொளக. (௧௧)

௭௩. மூன்றுருவதே, ஒடுவெனப்பெயரியவேற்றுமைக்கிளவி,
வினைமுதல்கருவியனைமுதற்றதுவே.

மேல் ஒடுவெனப் பெயர்கொடுத்தோதிய வேற்றுமைச்சொல் மூன்றுவதாம்; அதுவினைமுதலுங் கருவியுமாகிய விரண்டுமுதலையும்பொருளாகவுடைத்து. எ - று. மேல்ஐயொடுகுவ்வென்றோதியவழி யானுருபுநதழுவப்பட்டமையானீண்டு மவ்வாறே கொள்ளப்படும்; படவே மூன்றுவதாதலும் வினைமுதல்கருவிப்பொருட் டாதலும் ஆனுருபிறகுமெய்தும். வினைமுதலாவது கருவிமுதலாயினகாரணங்களைத் தொழிறபடுத்துவது. கருவியாவது வினைமுதற்றொழிற் பயனைச் செயப்படுபொருட்கணுய்ப்பது. அனையென்ப தத்தன்மையவாகிய முதலெனா வவற்றதிலக்கணத்திற்குத் தோறறுவாய்செய்தவாறு. முதலென்பதற்கு மேலேயுரைத்தாம். கொடியொடுதுவக்குண்டான் - ஊசியொடுகுயின்ற தூசும்பட்டும்-எ-ம், அகத்தியனாற்றமிழுரைக்கபபட்டது - வேலானெறிந்தான் எ-ம் வரும். பிறபொருளுமுளவேனும் வினைமுதல்கருவி சிறந்தமையான் வினைமுதல்கருவி யனைமுதற்றென்றார். வினைமுதலகருவிக்க ணொடுவெனுருபிக்காலத்தருகியல்லது வாராது. (௧௨)

௭௪. அதனினியற லதற்றகுகிளவி, யதன்வினைப்படுத லதனினாதல், லதனிற்கோட லதனொடுமயங்க, லதனொடியைந்த வொருவினைக்கிளவி, யதனொடியைந்தவேறுவினைக்கிளவி, யதனொடியைந்த வொப்பலொப்புரை, யின்னானேது வீங்கெனவரூஉ, மன்னபிறவு மதன்பாலவென்மனார்.

அதனினியறல் - மண்ணானியன்றகுடம் - என்பது. மண்முதற்காரணம். முதற்காரணமாவது காரியத்தொ டொற்றுமையுடையது. அதற்றகுகிளவி - வாயாற்றக்கதுவாய்ச்சி - அறிவானமைந்த சான்றோர் - என்பன. இவைகருவிப்பாறபடும். அதன்வினைப்படுதல் - சாத்தனான்முடியுமிக்கருமம் - என்பது. இது வினைமுதற்பாறபடும். அதனினாதல் - வாணிகத்தானாயினான் - என்பது. அதனிற்கோடல் - காணத்தாற்கொண்டவரிசி என்பது. இதுவுங் கருவிப்பாறபடும். இவையைந்துபொருளும் ஒடுவுருபிற்குஞ் சிறுபான்மையுரியவாயினும் பெரும்பான்மைபற்றி ஆனுருபிற்கேயுரியபோலக்கூறினார். அதனொடுமயங்கல் - எண்ணொடுவிராயவரிசி - என்பது. அதனொடியைந்த வொருவினைக்கிளவி - ஆசிரியனொடுவந்த மாணாக்கன் - என்பது. வருதற்றொழி லிருவர்க்குமொத்தலி னொருவினைக்கிளவியாயிற்று. அதனொடியைந்த வேறுவினைக்கிளவி - மலையொடுபொ

ருத மால்யானை-என்பது, பொருதல் யானைக்கல்ல தின்மையின் வேறுவினைக்
கிளவியாயிற்று. அதனொடியைந்த வொப்பலொப்புரை-பொன்னொடிரும்பனை
ர் நின்னொடுபிறரே - என்பது, ஒப்பல்லதனை யொப்பாகக்கூறலின் ஒப்பலொ
ப்புரையாயிற்று. இம்மூன்றிற்கு முடனிகழ்தல் பொதுவென்பதூஉம், அவை
ஒடுவெனுருபிற்கே யுரியவென்பதூஉமுணர்த்திய வதனொடியைதன் மூன்றிற்கு
ங்கூறினார். அதனொடுமயங்கற்கு மீதொக்கும். எல்லாப்பொருட்கண்ணு மது
வென்ற துருபேற்கும் பெயர்ப்பொருளை. அதற்குவினையுடைமையி னென்ப
தற்கு மீதொக்கும். இன்னானேதுவென்பது முயற்சியிற்பிறத்தலா னொலிநிலை
யாது-என்பது. அதனினாதலெனக்காரகவேது முற்படக்கூறப்பட்டமையா னி
து ஞாபகவேதுவாம். இப்பொருள் ஆனுருபிற்கும் இன்னுருபிற்குமுரித்தென்
பது விளக்கிய ஏதுவென்னாது இன்னானேதுவென்றார். இன்னானென்ப தும்
மைத்தொகை. அவற்றதேதுப்பொருண்மையெனறவாறு. எனவென்பதனைமா
ற்றி யேதுவென்பதனபின்கொடுத் தீங்குவரூஉ மன்னபிறவுமெனவியைக்க.
ஈங்கனமென்று பாடமோதுவாருமுளர். அதனினியறலென்பதற்குத் தச்சனு
ற்செய்த சிறுமாவையமெனறும், இன்னானென்பதறகுக் கண்ணாற்கொத்தை
காலானமுடவனென்று முதாரணங்காட்டினாரா லுரையாசிரியரெனின் அற
றன்று தச்சன்செய்த சிறுமாவையமென்பது வினைமுதல்கருவி யனைமுதற்
றென்புழி யடங்குதலா னீண்டுபபாறபடுக்க வேண்டாமையானும், சினைவிகா
ரத்தை முதன்மேலேற்றிக்கூறும்பொருண்மை யின்னானெனபதனும் பெறப்
படாமையானு மதுபோலியுரையெனக. ஒடுவுமானு மிரண்டுவேற்றுமையா
கற்பாலவெனின் அற்றனறு வேற்றுமைமயககமாவ தொருவேற்றுமைய தொ
ருபொருட்கணுகச் சிலபொருட்கணுக வேனைவேறறுமையுஞ்சேறலன்றே யவ்
வாறன்றிச் சிறிதொழித்தெல்லாப் பொருட்கண்ணு மிரண்டுருபுஞ் சேறலா
னும், வடநூனுட் பொருள்வேற்றுமையலல துருபு வேற்றுமையினொருவேற்
றுமையாக வோதபபடாமையானு மீண்டெல்லாவாசிரியரு மொரு வேற்று
மையாகவே யோதினாரெனக. வடநூலொடு மாறுகொள்ளாமைக்கூற லாசி
ரியர்க்கு மேற்கோளாயின் விளிவேற்றுமையை யெழுவாய்வேற்றுமைக்க ண
டக்கற்பாலராவரவ்வாறடக்கலிலரெனின் அற்றன்று விளிவேற்றுமையை யெ
ழுவாய்வேற்றுமைக்க ணடக்கலாணடெல்லார்க்கு மொப்பமுடிந்ததன்று. வ
ழியன்முறைய தெதிர்முகவேற்றுமை வேறெனவிளம்பான்பெயரதுவிகாரமெ
ன்றோதியபுலவனுமுளனொருவனகயா னிந்திரனெட்டாம்வேற்றுமையென்ற
னென்பதாகவி னைந்திர நூலார் விளிவேறறுமையை யெட்டாம்வேற்றுமை
யாக நேர்ந்தாரென்பதுபெறப்படும். ஆசிரியரவர்மதம்பற்றிக் கூறினாராகலி
னதனொடுமாறுகொள்ளாதெனபது. இக்கருத்து விளககியவன்றே பாயிரத்து
ளைந்திரநிறைந்த தொல்காப்பியனெனக் கூறிற்றெனக. அன்னபிறவுமென்ற
தனாற் கண்ணாற்கொத்தை - நூங்குகையானொங்குநடைய - மதியொடொக்கு
முகம்- நூலொடுகழுதையாரஞ்சுமந்தது - என்பனபோல்வனகொள்க. (௧௩)

௭௫. நான்காகுவதே, குவ்வெனப்பெயரிய வேற்றுமைக்கிள
வி, யெப்பொருளாயினுங் கொள்ளுமதுவே.

மேல் கு எனப்பெயர்கொடுத் தோதப்பட்ட வேற்றுமைக்கிளவி நான்காவதாம்; அதுயாதானு மொருபொருளாயினு மதனையேற்றுநிற்கும். எ - று. அந்தணர்க்காவைக்கொடுத்தான் - எனவரும். மாணுக்கற்கு நூற்பொருளுரைத்தானெனக் கொடைப்பொருளவாகிய சொல்லானன்றிப் பிறவாய்பாட்டாற் கூறப்படுவனவும், மாணுக்கற்கறிவுகொடுத்தானெனக் கொடுப்பான்பொருளாய்க்கொள்வான்கட்செல்லாதாண்டுத்தோன்றும்பொருளெல்லா மடங்குதற்கு எப்பொருளாயினுமென்றார். பிறபொருளுமுளவாயினுங் கொடைப்பொருள் சிறந்தமையி னெப்பொருளாயினுங் கொள்ளுமென்றார். (கச)

எசு. அதற்குவினையுடைமையி னதற்குடம்படுதலி, னதற்குப்
படுபொருளி னதுவாகுகிளவியி, னதற்கியாப்புடைமையி
னதற்பொருட்டாதலி, னட்பிற்பகையிற் காதலிற்சிறப்பி
னென், றப்பொருட்கிளவியு மதன்பாலவென்மனார்.

அதற்குவினையுடைமை - கரும்பிற்குவேலி-என்பது, வினைஈண்டுபகாரம். அதற்குடம்படுதல் - சாத்தற்குமகளுடம்பட்டார்- என்பது, சான்றோர்கொலைக்குடம்பட்டார்-என்பதுமது. அதற்குப்படுபொருளாவது- பொதுவாகியபொருளைப்பகுக்குங்காலொருபங்கிற்குப்படும்பொருள் - அதுசாத்தற்குக்கூறுகொற்றன்-என்பது,அதுவாகுகிளவி-கடிசூத்திரத்திற்குப்பொன்-என்பது, பொன்கடிசூத்திரமாய்த்திரியுமாகலினதுவாகுகிளவியென்றார். கிளவி பொருள். அதற்கியாப்புடைமை-கைக்கியாப்புடைத்துக்கடகம்-என்பது,அதற்பொருட்டாதல்-கூழிற்குக்குற்றேவல்செய்யுமென்பது, நட்பு - அவற்குநட்டான் - அவற்குத்தமன்-என்பன, பகை - அவற்குப்பகை - அவற்குமாற்றான் - என்பன, காதல் - நட்டார்க்குக்காதலன்- புதல்வற்கன்புறும்-என்பன, சிறப்பு-வடுகரசர்க்குச்சிறந்தார்சோழியவரசர்-கற்பார்க்குச்சிறந்தனசெவி-என்பன. அப்பொருளென்றதனனபொருளை. இவ்வாடையுமந்நூலானியன்றதென்றதுபோல] எனவேயன்னபிறவுமென்றவாறும். அப்பொருட்கிளவியுமென்றதனாற் பிணிக்குமருந்து, நட்டார்க்குத்தோற்கும்-அவற்குத்தக்காளிவள்- உற்றார்க்குரியர்பொற்றொடிமகளிர்-என்பனபோல்வனவெல்லாங்கொள்க. (கரு)

எஎ. ஐந்தாகுவதே, இன்னெனப்பெயரியவேற்றுமைக்கிளவி,
யிதனினிற்றிதுவென் னுமதுவே.

மேல்இன்னெனப்பெயர்கொடுத்தோதப்பட்ட வேற்றுமைக்கிளவி யைந்தாவதாம்; அஃதிப்பொருளினித்தன்மைத்திப்பொருளென்னும் பொருண்மையையுணர்த்தும்.எ-று. ஐந்தாவதுநான்குபொருண்மையுடைத்துப் பொருவுமெல்லையுநீக்கமுமேதுவுமென.அவற்றுட்பொருவிருவகைப்படும்- உறழ்பொருவும் உவமப்பொருவும்என. ஏதுவுமிருவகைப்படும்-ஞாபகவேதுவுங் காரகவேதுவுமென. அவற்றுண்ஞாபகவேதுப்பொருண்மை மேலேகூறப்பட்டது. காரகவேதுப்பொருண்மையச்சமாக்கமென்பனவற்றாற்பெறப்படும். நீக்கப்பொருண்மைதீர்தல்பற்றுவிடுதலென்பனவற்றாற்பெறப்படும். ஏனையிரண்டுமிதனினி

ற்றிதுவென்பதனாற்கொள்ளப்படும். அவ்விரண்டனையுமஃதிருமுறையானுணர்த்துமாகலான்.]எல்லைப்பொருள்-கருவூரின்கிழக்கு-இதனினூங்கு-எனவரும். கிழக்கூங்கென்பனவினைக்குறிப்பல்லவேனுமிற்றென்னும் பொருள்படநிற்றலினிற்றென்றலேயாம். பொரூஉப்பொருட்குதாரணமுன்னர்ப்பெறப்படும். (௧௬)

௭௮. வண்ணம்வடிவேயளவேசுவையே, தண்மைவெம்மையச்சமென்று, நன்மை*தீமைசிறுமைபெருமை,வன்மைமென்மைகடுமையென்று, முதுமையிளமைசிறத்தலிழித்தல், புதுமைபழமையாக்கமென்று, வின்மையுடைமைநாற்றந்தீர்தல், பன்மைசின்மைபற்றுவிடுதலென், றன்னபிறவுமதன்பாலவென்மனார்.

வண்ணமுதலாகப்பற்றுவிடுதலீறுகச் சொல்லப்பட்டனவு மவைபோல்வனபிறவு மைந்தாம்வேற்றுமைத்திறத்தனவாம். எ-று. வண்ணம்வெண்மைகருமைமுதலாயின. வடிவுவட்டஞ்சதுரமுதலாயின. அளவு நெடுமைகுறுமைமுதலாயின. சுவை கைப்புப்புளிப்புமுதலாயின. நாற்றம் நறுநாற்றமுந்தீநாற்றமுமுதலாயின. காக்கையிற்கரிதுகளம்பழம் - இதனின்வட்டமீது- இதனினெடிதீது-இதனிற்றீவிதீது-இதனிற்றண்ணிதீது - இதனின்வெய்தீது - இதனினன்றீது - இதனிற்றீதீது - இதனிற்சிறிதீது- இதனிற்பெரிதீது-இதனின்வலிதீது-இதனின்மெலிதீது - இதனிற்கடிதீது - இதனின்முதிதீது - இதனினிளைதீது - இதனிற்சிறந்ததீது-இதனினிழிந்ததீது - இதனிற்புதிதீது-இதனிற்பழைதீது-இவனினிலனிவன்- இவனினுடையனிவன்-இதனினாறுமீது-இதனிற்பலவிவை-இதனிற்சிலவிவை'.எ-ம்.அச்சம்-கள்ளரினஞ்சும்-எ-ம், ஆக்கம் - வாணிகத்தினாயினான்-எ-ம், தீர்தல்-ஊரிற்றீர்ந்தான்-எ-ம், பற்றுவிடுதல்-காமத்திற்பற்றுவிட்டான்-எ-ம்வரும். அச்சமுதலியநான்குமொழித் தொழிந்தவிருபத்துநான்குமொத்த பண்புவேறுபாடுபற்றிப்பொரூஉப்பொருள்விரித்தவாறு. அன்னபிறவுமென்றதனால் அவனினளியனிவன்- அதனிற்செய்ததீது - இகழ்ச்சியிறகெட்டான்-மகிழ்ச்சியின்மைந்துற்றான்-என்பனபோல்வனகொள்க.பலவாய்பாட்டொடுவழக்கின்கட்பயின்றுவருதலுடைமையாற் பொரூஉப்பொருளிதற்குச் சிறப்புடைத் தாகலிற்பெரும்பான்மையுமதனையேவிரித்தார். (௧௭)

௭௯. ஆறுகுவதே, அதுவெனப்பெயரியவேற்றுமைக்கிளவி,தன்னினும்பிறிதினுமிதனதிதுவெனு,மன்னகிளவிக்கிழமைத்ததுவே.

அதுவெனப்பெயர்கொடுத்தோதப்பட்டவேற்றுமைக்கிளவியாறுவதாம்; அதுஉடையதாய்நிற்குந்தன்னானும்பிறிதொன்றானுமிதனதிதுவென்பதுபட நிற்குமதனாற்கிளவியிற்றோன்றுங்கிழமையைப் பொருளாகவுடைத்து. எ-று. எ

ணவேயாருவதுகிழமைபபொருடடெனறுமக்கிழமைதனனுனவநததறகிழமை
யும பிறிதானவநதபிறிதினகிழமையுமென விரணடெனறுஙகூறியவாறும். த
னனெனறதுதனனொடொறறுமையுடையபொருளை. பிறிதெனறது தனனின்
வேருகியபொருளை. அஃதேறறனணினுமபிறிதினுமாகியகிழமைத தெனனுதித
னதிதுவெனனுமனனகிளவிககிழமைததெனறதெனனையெனின பொருடகிழ
மையும பணபுககிழமையுநதொழிறகிழமையுமவைபோலவனவுமெனக்கிழமை
தாமபல அவறறுளொனறுசுடடா திதனதிதுவெனனுஞசொலலாறறேனறுங
கிழமைமாததிரஞ சுடடுமெனறதற கிதனதிதுவெனனு மனனகிளவிககிழமை
ததெனருா. இதனவிவையெனனும பனமையுருபுததொடரு மடஙகுதறகனன
கிளவியெனருா. ஒனறுபலகுழீஇயதறகிழமையம வேறுபலகுழீஇடதறகிழமை
யுமொனறியறகிழமையுமுறுபபினகிழமையுமெயதிரிநதாயதறகிழமையு மென
நதறகிழமைஐயநதுவகைபபடும. பொருளினகிழமையு நிலததினகிழமையுங
காலததினகிழமையுமெனப பிறிதினகிழமைமூனறுவகைபபடும. அவறறிறகு
தாரணமுனனாககாடடுதும. (கஅ)

௨௰. இயறகையினுடைமையினமுறைமையிறகிழமையிற, செ
யறகையின முதுமையினவினையினெனரு, கருவியிறறுணை
யிறகலததினமுதலி, னொருவழியுறுபபிறகுழூவினென்ரு,
தெரிநதுமொழிசசெயதியினிலையினவாழசசியிற, றிரிந
துவேறுபடூஉமபிறவுமனன, கூறியமருஙகிறறேன்றுங்கி
ளவி, யாறனபாலவெனமனாபுலவா.

இயறகைமுதலாக வாழசசியீருகசசொலலபபடடனவும திரிநது வேறு
படூஉ மனனபிறவுமாகிய மேறகூறபபடட கிழமைபபொருடசுடடோனறுஞ
சொலலெலலா மாறுமவேறறுமைத திறததனவெனறு சொலலுவாபுலவா.
எ - று. திரிநதுவேறுபடூஉமனனபிறவுமெனருனோ திரிநதுவேறுபடுதலனன
பிறவுமெனறதனுற றழுவபபடுவனவறறு ளொருசாரனவறறிறகே கொளக.
எளளதுகுபபை - படையதுகுழாம எனபனகுழூஉககிழமை. அவைமுறையா
னே யொனறுபலகுழீஇயதும வேறுபலகுழீஇயதுமாம. சாததனதியறகை
நிலததககலம - எனபன இயறகைககிழமை சாததனதுநிலைமை-சாததனதில
லாமை எனபனநிலைககிழமை. இவையொனறியறகிழமை. யானையதுகோடு -
புலியதுகிர் - எனபனவுறுபபினகிழமை. உறுபபாவதுபொருளினேகதேசமெ
னப தறிவிததற சொருவழியுறுபபெனருா. சாததனதுசெயறகை-சாததனது
கறறறிவு-எனபன செயறகைககிழமை. அரசனது முதுமை - அரசனது முதி
ாவு - எனபன முதுமைககிழமை. முதுமையெனபது பிறிதோா காரணமபற
ருது காலமபறறியொருதலையாக வபபொருடகட டோனறுமபருவமாகலிற
செயறகையுளடககாது வேறுகூறினா. சாததனதுதொழில-சாததனது செல
வு-எனபனவினைககிழமை. இவைமெயதிரிநதாயதறகிழமை. சாததனதுடைமை
சாததனதுதோட்டம - எனபனவுடைமைககிழமை. மறியதுதாய-மறியதுதந
தை-எனபனமுறைமைககிழமை. இசையதுகருவி-வணைகலசசுறறுகிரி - எனப

னகருவிக்கிழமை. அவனது துணை-அவனதிணங்கு-என்பனதுணைக்கிழமை. நிலத்ததொற்றிக்கலம்- சாத்தனதுவிலைத்தீட்டு-என்பனகலக்கிழமை. ஒற்றியது முதல்-ஒற்றியதுபொருள்-என்பனமுதற்கிழமை. கபிலரதுபாட்டு-பாணரதுபாட்டியல்-என்பனசெய்யுட்கிழமை. தெரிந்துமொழியாற்செயயப்படுதலிற்றெரிந்துமொழிச்செய்தியாயின. இவைபொருட்பிறிதின்கிழமை. முருகனதுகுறிஞ்சிநிலம்-வெள்ளியதாட்சி-என்பனகிழமைக்கிழமை. காட்டதியானை-யானையதுகாடு- என்பனவாழ்ச்சிக்கிழமை. அவற்றுண்முருகனது குறிஞ்சிநிலம்- யானையதுகாடு-என்பனநிலப்பிறிதினகிழமை. காட்டதியானை- என்பது பொருட்பிறிதின்கிழமை. ஏனையதுகாலப்பிறிதின்கிழமை. திரிந்துவேறுபடூஉமன்னபிறவுமென்றதனால்-எட்சாந்து-கோட்டுநூறு-சாத்தனதொப்பு-தொகையதுவிரி-பொருளதுகேடு-சொல்லதுபொருள்-என்னுந்தொடக்கத்தனகொள்க. அவற்றுள்-எட்சாந்து-கோட்டுநூறு-என்பனமுதலாயினமுழுவதூஉந்திரிதலின் வேறு கூறினர். மேற்சொல்லப்பட்டதற்கிழமை பிறிதின்கிழமையென்பனவற்றைவிரித்தவாறு. (கக)

அக. ஏழாகுவதே, கண்ணெனப்பெயரியவேற்றுமைக் கிளவி,
வினைசெய்யிடத்தினிலத்திற்காலத்தி, னனைவகைக்குறிப்
பிற்றோன்றுமதுவே.

கண்ணென்றுபெயர்கொடுத்தோதப்பட்ட வேற்றுமைச்சொலேழாவதாம்; அதுவினைசெய்யாநிற்றலாகிய விடத்தின்கண்ணு நிலமாகியவிடத்தின்கண்ணுங் காலமாகியவிடத்தின்கண்ணுமெனவம்மூவகைக்குறிப்பின்கண்ணுந்தோன்றும். எ-று. எனவேயேழாவதிடப்பொருண்மைத்தென்றவாறும். குறிப்பிற்றோன்றுமதுவென்றது அவற்றையிடமாகக்குறித்தவழியவ்வேற்றுமை தோன்றுமென்றவாறு. எனவேஇடமாகக்குறிக்கப்படாதவழியப்பெயர்க்கண் வேற்றுமைதோன்றாதென்பதாம். தன்னினமுடித்தலென்பதனானேனைவேற்றுமைச்சொற்களு மவ்வப்பொருட்கட் குறிப்பில்வழியவ்வப்பெயர்க்கண் வாராமை கொள்க. தட்டுப்புடைக்கண்வந்தான் - மாடத்தின்கணிருந்தான்-கூதிர்க்கண் வந்தான்- எனவரும். (உ0)

அஉ. கண்கால்புறமகமுள்ளுழைகீழ்மேல், பின்சாரயல்புடை
தேவகையெனாஅ,முன்னிடைகடைதலைவலமிடமெனாஅ,
வன்னபிறவுமதன்பாலவென்மனார்.

கண்முதலாக விடமீறாகச்சொல்லப்பட்ட பத்தொன்பதுபொருளுமவை போல்வனபிறவுமேழாவதன்திறத்தன. எ- று. கண்ணென்னும்பொருளாவது கண்ணின்றுகூறுதலாற்றுனவனாயின். எ - ம், கண்ணகன்ஞாலம். எ-ம்- கண்ணென்னுமிடச்சொல்லானுணர்த்தப்படு மிடப்பொருண்மை. தேவகையென்பது திசைக்கூறு. கண்கால்புறமகமுள்ளென்பனமுதலாயின அவற்றது பொருள்வேற்றுமைவழக்குநோக்கி யுணர்ந்துகொள்க. கண்ணின்றுசொல்லியானை-யென்கணின்றிவைசொல்லற்பாலையல்லையென்றும், ஊர்க்காற்செய்யை-ஊர்

ககட்செயயெனறும, ஊாபபுறததுநினறமரததை ஊாககணமரமெனறும, எ
யிலகததுபபுககானை-எயிறகடபுககானெனறும,இலலுளிருநதானை-இறகணிருந
தானெனறும, அரசனுழையிருநதானை அரசனகணிருநதானெனறும,ஆலினகீ
ழககிடநதவாளை ஆலினகடகிடநததெனறும, மரததினமேலிருநதகுரஙகை-
மரததினகணிருநததெனறும, ஏாபபினசெனறானை ஏாககடசெனறானெனறும
காடடுசசாாோடுவதனை காடடினகணோடுமெனறும, உறையூாககயனினறசி
ராபபளளிககுனறை உறையூாககடகுனறெனறும,எயிறபுடைநினறானை- எயிற
கணினறானெனறும, வடபாலவேஙகடநதெனபாறகுமரியெனபனவறறை- வட
ககணவேஙகடந தெறகடகுமரியெனறும, புலிமுனபடடானை - புலிககடபட
டானெனறும, நூலினிடையுங கடையுந தலையுநினறமஙகலததை நூறகண
மஙகலமெனறும, கைவலததுளளதனை கைககணுளளதெனறும, தனனிடத
துநிகழவதனை - தனகணிகழவதெனறும அவவிடபபொருளபறறி ஏழாமவே
றறுமை வநதவாறுகணடுகொளக. எனறுமெனபதெணணிடைசசொல. கண
முதலாயினவெலலா முருபெனறாா லுரையாசிரியரெனின உருபாயினேழா
வதறகுக கணணெனப தொருபாதனமேல பெறபபடடமையாற பெயாததுவ
கணகாலெனறலகூறியதுகூறிறறுகலாகும-ஊாபபுறததிருநதான,ஊரகததிரு
நதான, கைவலததுளளதுகொடுககுமெனப புறமகமவலமெனபனவறறுவழி
யததுசசாரியைகொடுத துதாரணங காடடினமையானு மவாககறு கருத
தனறெனக. உருபலலவேலெனனுழை யெனமுனசென நிலைமொழி யுருபிற
கோதியசெயகை பெறறவாறெனனையெனின அசசபொருடடாகலினெனவுந
தமமுடைய தணணளியுநதாமுமெனனு முருபினபொருளபடவரும [illegible]மொழி
வநதுழியு நிலைமொழிசசெயகைபெடறுநிறறலி னசசெயகை யுருபுபுணாச
சிககேயெனலும யாபபுறவினறெனக அனனபிறவுமெனறதனாற பொருட
ணுணாவு-எனகணணபுடையன-மலாககணாறறம-ஆகாயததுககட பருநது என
னுந தொடககததனகொளக. (௨௧)

௮௩. வேறறுமைபபொருளைவிரிககுஙகாலை, யீறறுநினறியலுந
தொகைவயிறபிரிநது, பலலாறுகப பொருளபுணாநதி
சைககு, மெலலாசசொலலு முரியவெனப.

வேறறுமைததொகையை விரிககுமிடதது வேறறுமையேயனறி யனமொ
ழிததொகையை விரிபபுழிபபலலாறறா னனமொழிபபொருளொடு புணாநது
வரு மெலலாசசொலலும விரிககபபடுப எ - று. உருபுதொகபபொருணிறற
லின வேறறுமைததொகையை வேறறுமைப பொருளெனறாா. தொகையை
வேறறுமை பொருளெனறும யாணடு மாளப. அனமொழிததொகைபணபுத
தொகைமுதலாகிய தொகையிறுதிநின றியறலினீறறு நினறியலுந தொகை
யெனறாா. தாழகுழல் - பொறறொடி - மடகாரணம - எனனு மனமொழித
தொகைகளை விரிபபுழிததாழகுழலையுடையாள பொறறொடியையணிநதாள ம
ணஞ்ஞிடடகாரணததானியனற தெனவரும.உடைமையுமணிதலுமியறலுமகரு
ஙகுழறபேதை-பொறறொடியரிவை-மடநடம எனனும வேறறுமைததொகை

கனை விரிப்புழியுங் கருங்குழலையுடையபேதை - பொற்றொடியையணிந்தவரி வை-மண்ணுனியன்றகுடம் எனவந்தவாறு கண்டுகொள்க. பொருள்புணர்ந்தி சைக்குமெனவே யிருதொகைக்கண்ணு மொருவாய்பாட்டானன்றிப் பொரு ள்சிதையாம லுணர்த்துதற்கேற்ற வாய்பாடெல்லாவற்றானும் வருமென்பதா ம். அவ்வாறுதன மேற்காட்டப்பட்டனவற்றுட் கண்டுகொள்க. அன்மொழித் தொகையிற் சொற்பெய்துவிரித்தல் யாண்டுப்பெற்றுமெனின் அதுவுமனுவாத முகத்தானீண்டே பெற்றுமென்க. பெறவே யிரண்டுதொகையும் விரிப்புழிவ ரும் வேறுபாடு கூறியவாறும். இதனை வேற்றுமைத்தொகையே யுவமத்தொ கையேயென்னுஞ் சூத்திரத்தின்பின் வைக்கவெனின் அதுவுமுறையாயினு மினிவருஞ்சூத்திரங்களான் வேற்றுமைத்தொகைவிரிப்பற்றிய மயக்க முணர் த்துதலா னுண்டுப்படுமுறைமை யுணாத்துத லீண்டுமியையுடைத்தென்க. உ ரையாசிரிய ரிரண்டுசூத்திரமாகவறுத் தாசிரியர் மதவிகற்பங்கூறித் தம்மத மிதுவெனபதுபோதர வொன்றாக வறுப்பாருமுளரொன்றார். இரண்டாயொ ன்றுயவழிப் பிறிதுரையின்மையி னுரையாசிரியாகருத் திதுவேயாம். (உஉ)

வேற்றுமையியல் - முற்றிற்று.

மூன்றாவது

## வேற்றுமைமயங்கியல்.

-:0:-

அச. கருமமல்லாச் சார்பென்கிளவிக், குரிமையுமுடைத்தே கண்ணென்வேற்றுமை.

மேற்கூறபபட்டவேற்றுமை தம்முண்மயங்குமாறுணர்த்திய வெடுத்து க்கொண்டார். அம்மயக்கமிருவகைப்படும். பொருண்மயக்கமு முருபுமயக்க முமென] பொருணமயக்கமாவது தன்பொருளிற்றீராது பிறிதொன்றன்பொ ருட்கட்சேறல். உருபுமயக்கமாவது தன்பொருளிற்றீர்ந்துசேறல். யாதனுரு பிற் கூறிற்றுயினுமென்பதனு னுருபுமயக்க முணர்த்தினாரல்லனவற்று னெல் லாம் பொருண்மயக்கமுணாத்தினார். இவ்விருவகைமயக்கமு முணர்த்துதலா னிவ்வோத்து வேற்றுமைமயங்கியலென்னும்பெயர்த்தாயிற்று. மயக்கமேயன் றி வேற்றுமைக்கோதிய விலக்கணத்திற்பிறழ்ந்து வழீஇயமைவனவும் பிறவு மியைபுடையன வீண்டுணர்த்துதலா னிக்குறி பன்மைநோக்கிச்சென்ற குறி யெனவுணர்க. (கருமமல்லா-வேற்றுமை) இரண்டாவதற்கோதப்பட்ட சார்பு பொருண்மை கருமச்சார்புங் கருமமல்லாச்சார்புமென இரண்டுவகைப்படும். அவற்றுட் கருமச்சார்பு தூணைச்சார்ந்தானென வொன்றனையொன்று மெய் யுறுதலாம். கருமமல்லாச்சார்பு மெய்யுறுதலின்றி யரசனைச்சார்ந்தானென வருவதாம். கருமமல்லாச்சார்புபொருண்மைக் குரித்தாய் வருதலுமுடைத் தேழாவது. எ - று. அரசர்கட்சார்ந்தானெனவரும். கருமமாவ தீண்டுமெய்

யுறுதலாயி னரசர்கட்சார்ந்தானென்புழி யுறுதலின்மையிற் சார்பாமாறென் னையெனின் தூண்பற்றுக வொருசாத்தன் சார்ந்தாற்போல வரசர்பற்றுக வச்சார்ந்தானெனுழுகுதலிற் சார்பாயிற்றென்பது. உம்மையெதிர்மறை. தூணி ன்கட்சார்ந்தானெனக் கருமச்சார்ச்சிக்க ணேழாவதுசென்றாற்படு மிழுக்கெ ன்னையெனின் அன்னதோர்வழக்கின்மையே பிறிதில்லையென்க. இக்காலத்தவ் வாறு வழங்குபவாலெனின் கருமமல்லாச் சார்ச்சிக்கண்வரு முருபைச்சார்த லொப்புமையாற் கருமச்சார்ச்சிக்கண்ணுங்கொடுத் துலகத்தாரிடைத்தெரிவி ன்றிவழங்குகின்றாரெனவேபடும் ஆசிரியர் கருமமல்லாச்சார்பென்கிளவியெ ன விதந்துகூறினமையானென்பது. (க)

அரு. சினைநிலைக்கிளவிக் கையுங்கண்ணும், வினைநிலையொக்கு மென்மனார்புலவர்.

சினைமேனிற்குஞ்சொல்லிற்கிரண்டாவது மேழாவதும் வினைநிலைக்கணொ க்கும். எ - று. கோட்டைக்குறைத்தான் - கோட்டின்கட்குறைத்தான் எனவ ரும். வினைக்குறிப்பைநீக்குதற்கு வினையென்றார். வினைநிலையொக்குமென்றா ரேனும் புகழ்தல்பழித்தலென்னுந் தொடக்கத்தனவொழித்து மயங்குதற்கே ற்கு மறுத்தல்குறைத்தன் முதலாயின வினையேகொள்ளப்படும். இரண்டாவ தன்பொருட்க ணேழாவது சென்றதாயினுஞ் சிறுவரவிற்றன்றி யிரண்டாவ துபோல வேழாவதுவழக்கின்கட் பயின்றுவருதலி னொக்குமென்றார். அது காரணத்தாற் கருமமல்லாச்சார்ச்சிக்குஞ் சினைக்கிளவிக்கு மேழாவதுரிமை யுடைத்தென வுடன்கூறாது வேறுகூறினாரென்பது. (உ)

அசு. கன்றலுஞ்செலவு மொன்றுமார்வினையே.

கன்றற்பொருண்மேலவருஞ்சொலலுஞ் செலவுப்பொருண்மேல் வருஞ் சொல்லுமிரண்டாவதற்குமேழாவதற்கு மொருதொழில. எ - று. சூதினைக்க னறினான் - சூதின்கட்கன்றினான் - நெறியைச்சென்றான் - நெறிக்கட்சென்றா ன் - எனவரும். பொருள்பற்றியோதினமையாற் சூதினையிவறினான்- சூதின்க ணிவறினான்-நெறியைநடந்தான்- நெறிக்கணடந்தான்-எனவருவனவுங்கொள் க. இரண்டாவதற்கிப்பொருண்மேலேகூறப்பட்டமையாற்கன்றல் செலவென் னும்பொருட்கேழாவது முரித்தென்றேதவமையுமெனின் அங்ஙனமோதினே ழாவதன்வரவுசிறுபான்மையென்பதுபடுமாகலி னுடனோதினாரென்பது. சினை நிலைக்கிளவி நிலைமொழிவரையறையாகலானு மிதுவருமொழிவரையறையாக லானும் வேறுகூறினாரென்பது. (ங)

அஎ. முதற்சினைக்கிளவிக் கதுவென்வேற்றுமை, முதற்கண்வரினே சினைக்கைவருமே.

முதற்சொல்லொடு தொடர்ந்த சினைச்சொல்லிற் காறாம்வேற்றுமைமுத ற்கண்வருமாயிற்சினைச்சொல்லின்கணிரண்டாம்வேற்றுமையேவரும். எ - று. யானையதுகோட்டைக்குறைத்தான் - எனவரும். சினைநிலைக்கிளவிக்கையுங்கண்

னுமென்றதனன் முதற்சினைக்கிளவிக்குமிரண்டுவேற்றுமையுமபரு வதனைநி யமித்தவாறு. இதுவருஞ் சூத்திரத்திற்குமொக்கும. (ச)

அஅ. முதன்முனைவரிற்கண்ணென்வேற்றுமை, சினைமுன்வரு தறெள்ளிதென்ப.

அம்முதற்சினைக்கிளவிககண்முதற்சொன்மு னைகாரவேற்றுமைவரிற்சினை ச்சொன்முன் கண்ணென்றும்வேறறுமைவருதறெள்ளிது. எ - று.யானையைக் கோட்டின்கட்குறைத்தான் - எனவரும். தெள்ளிதென்றதனன் யானையைக் கோட்டைக்குறைத்தா னெனச்சிறுபான்மையைகாரவேற்றுமையும வருமெ ன்பதாம். சினைக்கிளவிக்கண மயக்கமுணர்த்துகின்றசூத்திரத்திடைக் கன்றலு ஞ்செலவுமென்னுஞ்சூத்திரம்வைத்ததென்னையெனின் - ஐயுங்கண்ணுமென்பத திகாரத்தான்வரச் சூத்திரஞ்சுருங்குமாகலிற் சினைநிலைகிளவிக்கென்னுஞ்சூ த்திரத்தின்பின்னதனைவைத்தாரென்பது. (ரு)

அசு. முதலுஞ்சினையும்பொருள்வேறுபடாஅ, நுவலுங்காலைச் சொற்குறிப்பினவே.

முதலுஞ்சினையு முதலாயதுமுதலேயாய்ச் சினையாயதுசினையேயாய்த்த ம்முள்வேறுபொருளாகா சொல்லுங்காற்சொல்லுவா னதுசொல்லுதற்குறிப் பினன் முதலென்றுஞ்சினையென்றும் வழங்கப்படும். எ- று. சொற்குறிப்பின வென்றது முதலெனபபட்ட ததானே தன்னைப்பிறிதொன்றற் கேகதேசமாகக் குறித்தவழிச்சினையுமாஞ் சினையெனப்பட்டதுதானே தன்க ணேகதேசத்தை நோக்கிமுதலெனக்குறித்தவழிமுதலுமாமென்றவாறு. கோட்டநுனியைக் குறைத்தான்-கோட்டைநுனிக்கட்குறைத்தான்- கோட்டைநுனியைக்குறைத் தான் - எனமுதற்கோதபபட்ட வுருபுசினைக்கண்ணும்வநததாலென் றையுற்றுர் க்குக்கருத்துவகையாற் கோடென்பதாண்டுமுதலாய்நிற்றலின் முதற்கோதி யவுருபேமுதற்கண்வந்ததெனவையமகற்றியவாறு. (சா)

கூ௦. பிண்டப்பெயரு மாயியறிரியா, பண்டியன்மருங்கின்மரீஇ யமரபே.

பிண்டத்தையுணர்த்தும்பெயரு முதற்சினைப்பெயரியல்பிற் றிரியா வவ் வாறவற்றைமுதலுஞ் சினையுமாக வழங்குதன் மேற்றொட்டுவழங்கிவாராநின் ற கூற்றுன்மருவியமுறை - எ - று. பிண்டம் பலபொருட்டொகுதி. ஈண்டா யியறிரியாவெனமாட்டெறிநதது முதற்சினைக்கிளவிக்குப்போலப் பிண்டப்பெ யர்க்கு முதற்க ணுருவதுவரிற்சினைக்கிரண்டாவது வருதலுமுதற்கிரண்டாவ துவரிற் சினைக்கேழாவது வருதலுஞ் சிறுபான்மையிரண்டாவதுவருதலுமாம். குப்பையதுதலையைச்சிதறினன் - குப்பையைத் தலைக்கட்சிதறினன் - குப் பையைத் தலையைச்சிதறினன் - எனவரும். பிண்டமுமுதலுஞ் சினையுமேயாக லின் வேறுகூறல்வேண்டாவெனின் குப்பையென்புழித் தொக்கபலபொருள ல்லது அவற்றின்வேறு யவற்றுனியன்று தானென்றெனப் படும்பொருளின்

மையிற் றெல்லாசிரியரதனை முதலென்றுவேண்டா ரதனான்வேறுகூறினரொ ன்பது. படை காடுமுதலாயினவுமன்ன. (எ)

சுக. ஒருவினையொடுச்சொ லுயர்பின்வழித்தே.

அதனொடியைந்த வொருவினைக்கிளவியென மூன்றாவதற்கோதிய வொருவினையொடுச்சொ லுயர்பொருளை யுணர்த்தும்பெயர்வழித்தோன்றும்.எ-று. அரசனொடிளையர்வந்தார் - ஆசிரியனொடுமாணக்கர்வந்தார் - எனவரும். உயர்பொருட்பெயர்வழி யொடுக்சொடுக்கவெனவே யுயர்பில்வழிச்சாத்தனுங் கொற்றனும்வந்தானென விருபெயருமெழுவாயாய் நிற்குமென்பதாம். நாயொடுவந்தான்சாத்தனென விழிபெயர்க்கண்ணு மொருவினையொடுச்சொல் வந்ததாலெனின் யாதானுமோராற்ற னதற்குயர்புண்டாயினல்ல தவ்வாறுகூறார். கூறுபவாயின் அஃ தொருவினையொடுச்சொலெனப்படாது; கைப்பொருளொடுவந்தானென்பதுபோல அது தனக்குண்டாகவந்தானெனப் பிறிதுபொருள்படுவதோரொடு வுருபாமென்க. இதனை வேற்றுமையோத்தின்க ணதனினியறலென்னுஞ் சூத்திரத்தின்பின்வையா தீண்டு வைத்ததென்னையெனின் வேற்றுமையது பெயருமுறையுந்தொகையும்பொதுவகையானவற்றதிலக்கணமுமுணர்த்தியதல்ல தின்னவேற்றுமை யின்னபொருட்கணின்னவாறுமென்னும் விசேடவிலக்கணவதிகாரம் பட்டின்றாகலானுங்டுவையாது மூன்றாவதிப்பொருட்கணிவ்வாறுமென விசேடவிலக்கண மூன்றனுமைந்தனுமெனக் கூறுகின்றாராகலி னதனொடியைய வீண்டுவைத்தார் இதுவுமொருபொருள்பற்றி யோதுகின்ற விசேடவிலக்கணமாகலானென்பது. (அ)

சுஉ. மூன்றனுமைந்தனுந் தோன்றக்கூறிய, வாக்கமொடுபுணர்ந்த வேதுக்கிளவி, நோக்கோரனைய வென்மனார்புலவர்.

மூன்றாம்வேற்றுமைக்கண்ணு மைந்தாம்வேற்றுமைக்கண்ணும் விளங்கச் சொல்லப்பட்ட வாக்கத்தொடுகூடிய வேதுச்சொ லவ்வேதுப்பொருண்மையை நோக்குநோக்கொருதன்மைய - எ - று. வாணிகத்தானாயினான் - வாணிகத்தானாயபொருள் - எ - ம், வாணிகத்தினாயினான்-வாணிகத்தினாயபொருள்- எ- ம் வரும். வாணிகத்தான் - வாணிகத்தின்-எனவுருபொடுதொடர்ந்துநின்ற சொல்லையேதுக்கிளவியென்றார். அதன்வினைப்படுத லதனினாதலென்றும், புதுமை பழமையாக்கமென்று மூன்றாவதற்கு மைந்தாவதற்கும் ஏதுப்பொருண் மேற்கூறப்பட்டமையா னிச்சூத்திரம்வேண்டாவெனின் அற்றன்று பிரிநிலை யேகாரமுதலிய விடைச்சொல்லு மொருசார்வினைச்சொல்லு முன்னோதப்பட்டனவேனு மெச்சமாதலொப்புமையா னெச்சவாராய்ச்சிக்க ணவைதம்மையே பிரிநிலைவினையே பெயரேயொழியிசை யெதிர்மறையும்மையெனவே சொல்லேயெனப் பின்னுங்கூறினாற்போல வேதுப்பொருண்மை மூன்றாவதற்கு மைந்தாவதற்கு மேற்கூறப்பட்டதாயினு மயக்கமாகலொப்புமையான் மயக்கவாராய்ச்சிக்க ணீண்டுங்கூறினாராகலிற கூறியதுகூறலென்னுங் குற்றமின்றென்பது. இஃதச்சக்கிளவியென்பதற்குமொக்கும். அஃதேன்மயக்கமாவதொரு

வேற்றுமை பிறிதொன்றன்பொருட்கட் சேறலன்றே யேதுவின்கண்வரு மூன்றுவது மைந்தாவதுந் தமபொருளேபற்றிநிற்றலின் மயங்கினவெனப்படாவெனின் நன்றுசொன்னாய் ஏதுப்பொருண்மை தனக்குரியவாற்றானவற்றிற்குத் தன்பொருளாயினவாறுபோலப் பிறிதொன்றற்குரியவாற்றாற் பிறிதொன்றன் பொருளாகலுமுடைமையி னம்முகத்தான் மயங்கினவெனவே படுமென்பது. அல்லதூஉ மொருபொருட்க,ணிரண்டுருபுசென்றதுணையான் மயககமாயிற்றெனினுமமையும். ஆக்கமொடுபுணர்ந்த வேதுக்கிளவியெனவே யாக்கமொடுபுணராது ஞாபகவேதுப் பொருண்மைக்கண்வரு மின்னுமானுமொத்த வரவினவல்லவென்பதாம். ஆண்டைந்தாவது பெருவரவிற்றெனக்கொள்க. (௧)

௯௩. இரண்டன்மருங்கி னோக்கனோக்கமவ், விரண்டன்மருங்கி னேதுவுமாகும்.

நோக்கலினஞ்சலினென விரண்டாவதற்கோதிய நோக்கப்பொருண்மை நோக்கியநோக்கமு நோக்கனோக்கமுமென விரண்டுவகைப்படும். நோக்கிய நோக்கங் கண்ணானோக்குதல், நோக்கனோக்க மனத்தானொன்றனைநோக்குதல்; அந்நோககனோக்கமாகியபொருண் மூன்றாவதற்கு மைநதாவதற்குமுரிய வேதுப்பொருண்மையுமாம் - எ- று. நோக்கனோக்கத்தா னோக்கப்படும்பொருளை நோக்கனோக்கமென்றார். நோக்கனோக்க மவ்விரண்டன்மருங்கி னேதுவுமாகுமெனவே யவ்வேதுப்பொருண்மைககுரிய விரண்டுருபு மவ்வேதுப்பொருண்மையிற்றீரா திரண்டாவதன்பொருட்கண் வருமென்பதாம். ஓம்படைப்பொருட்கண வருவனவற்றிற்கு மீதொக்கும். வானோக்கி வாழுமுயிரெல்லாமன்னவன், கோனோக்கிவாழுங்குடி - என்புழிவானைநோக்கிவாழும், கோலைநோக்கி வாழுமெனவிரண்டாவது வருதலேயன்றி வானானோக்கிவாழும் - வானினோக்கிவாழும் - கோலானோக்கிவாழும்- கோலினோககிவாழுமென மூன்றுவதுமை ந்தாவதும் வந்தவாறுகண்டுகொள்க. ஏதுவாயினவாறெனனையெனின உயிருங்குடியும் வானையுங்கோலையு நோக்குவதவற்றானுய பயம்பற்றியவறறைத் தாமின்றி யமையாமையன்றே யதனானவ்வாறு பயப்படுவனவவற்றதின்றி யமையாமைக் கேதுவாகலுமுடையவென்பது. அஃதேல்வானுங் கோ[illegible] வழி நோக்கப்படுவன பிறவாவான்செல்லுமெனின் அற்றன்று [illegible]க்குத்தானென்றவழிக் கண்ணேசெயப்படுபொருளாகலும் பெறப்பட்டாற்போல வானோக்குங் கோலானோக்குமென்புழியு மவைதாமே செயப்படுபொருளாகலும் பெறப்பட்டமையால் நோக்கப்படுவன பிறவாவான்செல்லாவென்பது

௯௪. அதுவென்வேற்றுமை யுயர்திணைத்தொகைவயி, னதுவெனுருபுகெடக் குகரம்வருமே.

ஆறும்வேற்றுமைப்பொருண்மேல்வரு முயர்திணைத்தொகைக்க ணுருபு விரிப்புழியதுவென்னு முருபுகெட வதனபொருட்கணான்காமுருபுவரும். எ- று ஈண்டதுவெனுருபு கெடுதலாவ தவ்வுருபாண்டுவாராமை. நம்பிமகன் - நங்கைகணவன் என்னுந்தொகைகளைவிரிப்புழி நம்பிக்குமகன் - நங்கைக்குக்

கணவன் - எனநான்கனுருபு வந்தவாறுகண்டுகொள்க. உயர்திணைத்தொகைவயினதுவெனுருபுகெடக் குகரம் வருமென்றதனா னாறனுருபஃறிணைப்பாற்றேன்றநிற்றல்பெற்றாம். உயர்திணைத்தொகைவயி னுருவதனைவிலக்கி நான்காவதே சேறலினிதனதிதுவிற்றென்னுஞ் சூத்திரத்தாற் கூறப்படும்பொருளொடுடன்மையாதிதனை வேறுகூறினார். (௧௧)

௯௫. தடுமாறுதொழிற்பெயர்க் கிரண்டுமூன்றுங், கடிநிலையில
வே பொருள்வயினான.

தனக்கேயுரித்தாய்நில்லா தொருகாலீற்றுப்பெயரொடுஞ்சென்று தடுமாறுந்தொழிலொடுதொடர்ந்த பெயர்க்கிரண்டாவது மூன்றாவதுங் கடியப்படா வவ்வேற்றுமைதொக வவற்றின்பொருணிற்குந்தொகையிடத்து. எ - று. புலிகொன்றயானை-புலிகொல்யானை- என்புழிப்புலியைக்கொன்றயானையெனவும், புலியாற்கொல்லப்பட்டயானையெனவும் இரண்டாவது மூன்றாவது மயங்கியவாறுகண்டுகொள்க. கொன்றகொல்லென்பனவினைமுதற்பொருட் குரியவாகப் புலியென்பதுசெயப்படுபொருளாயவழியல்ல திரண்டாவது வாராமையானுமச்சொற்கள்செயப்படுபொருட்குரியவாகப் புலிவினைமுதலாயவழியல்லது மூன்றாவதுவாராமையானு மிவையொருபொருட்கண்வருதனவன்மையின் மயக்கமாமாறென்னையெனின் ஒருபொருட்கண்வாராமையின் மயக்கமெனப்படாதாயினுந் தடுமாறுதொழிற்றொகைக்க ணிரண்டும்வந்துநிற்றலின் மயக்கப்பாற்படுமென்பது. (௧௨)

௯௬. ஈற்றுப்பெயர்முன்னர் மெய்யறிபனுவலின், வேற்றுமை
தெரிப வுணருமோரே.

தடுமாறுதொழிலொடுபுணர்ந்தபெயருளிறுதிப்பெயர்முன்னர்ப்பொருள் வேறுபாடுணர்த்துஞ் சொல்வரினச்சொல்லானப்பொருள்வேற்றுமை தெரிவருணர்வோர். எ - று. புலிகொல்யானையோடாநின்றது, புலிகொல்யானைக் கோடுவந்தன-எனவரும். பிறமயக்கம்போலாதீண்டுப்பொருள் வேறுபாடுணர்ந்தல்லதுருபுவிரிக்கலாகாமையின் மெய்யறிபனுவலின் வேற்றுமைதெரியவென்றார். முன்புலியைக்கொன்றயானைபின்பிறிதொன்றனானிறந்துழியும்புலிகொல்யானைக்கோடுவந்தனவென்ப.அவ்வழிக்கொன்றது கொல்லப்பட்டதென்னும் வேறுபாடுகுறிப்பானுணரப்படுமென்பாருணருமோரொன்றார். பிறவுமன்ன. ()

௯௭. ஓம்படைக்கிளவிக் கையுமானுந், தாம்பிரிவிலவே தொ
கைவருகாலை.

ஓம்படைப்பொருண்மைக் கைகாரவுருபுமானுருபுமொத்தவுரிமைய வவ்வேற்றுமைதொக்கவழி. எ-று. ஓம்படுத்தல் பாதுகாத்தல். புலிபோற்றிவாவென்புழி யோம்படைக்கிளவியிரண்டாவதற்கோதியகாப்பின்க ணடங்குதலிற்புலியைப்போற்றிவாவென ஐகாரவுருபும், புலியவன்போற்றி வருதற்கேதுவாகலுமுடைமையாற் புலியாற்போற்றிவாவென வானுருபுமொத்தவுரிமைய

வாய்வந்தவாறுகண்டுகொள்க. புலியேதுவாகலுமுடைத்தாயினிரண்டன் மருங்கினேக்கனேக்சமுமோம்படைக்கிளவியு மேதுவாகுமெனவமையுமிச்சூத்திரம்வேண்டாவெனின் அங்ஙனமோதினேம்படைப்பொருண்மைக் கைநதாமுருபுமெய்து மதனைவிலக்குதற்கையுமானுநதாம்பிரிவிலவெனவேறுகூறினர். இவைபிரிவிலவெனவேயின்னுருபுபிரிவுடைத்தாய்ப் புலியிற்போற்றிவா வெனச்சிறுபான்மைவருமென்பதாம். இரண்டுவேற்றுமைக்குமோம்படைப்பொருண்மையிச்சூத்திரத்தானெய்து விததாரெனினுமமையும். தாமென்பது செய்யுட்சுவைபடநின்றது. (கச)

கூஅ. ஆறன்மருங்கின்வாழ்ச்சிக்கிழமைக், கேழுமாகுமுறைநிலத்தான.

ஆறும்வேற்றுமைக்கணேதியவாழ்ச்சிக்கிழமைக் குறைநிலத்தின் கணேழாவதும்வரும். எ - று. காட்டியானையென்பது காட்டதியானையெனவிரித்தலேயன்றிக்காட்டின்கண்யானையெனச் சிறுபான்மை யேழாவதுவிரிப்பினுமமையுமென்றவாறு. யானைக்காடு, நம்பியூர்-என்பனவாழ்ச்சிக்கிழமைப்பொருளவாயினுமாண்டேழாவது மயங்காதெனறற்குறைநிலததானவென்ருர். எனவேயுறைநிலபபெயாபின்மொழியாயவழியதிம்மயக்கமென்பதாம். (கரு)

கூகூ. குத்தொகவரூஉங் கொடையெதிர்கிளவி, யப்பொருளாறற் குரித்துமாகும்.

குவ்வென்னுமுருபுதொகவருங்கொடையெதிர்கிளவியாகிய தொகையினதுகொடையெதிர்தலாகிய வப்பொருண்மை யாறும்வேற்றுமைர்குரித்துமாம. எ - று. நாகர்பலி-என்பது நாகர்க்குநோநதபலியெனவிரிதலேயன்றி, நாகரதுபலியென்று விரியினுமமையுமென்றவாறு. கொடையெதிர்கிளவி யென்பதற்குத்தருசொல்வருசொற்குறைத்ததுரைக்க. கொடையெதிர்தல் கொடையைவிரும்பிமேறகோடல். நாகர்க்குக்கொடுத்தலைவிரும்பி மேறகொண்டவழிததிரிபின்றியவர்க்கஃதாகலிறகிழமைப்பொருட்குரியவுருபாறகூறினுமமையுமென்றவாறு. (கசு)

க00. அச்சக்கிளவிக் கைந்துமிரண்டு, மெச்சமிலவே பொருள்வயினன.

அச்சப்பொருண்மைக் கைநதாம்வேற்றுமையு மிரண்டாம்வேற்றுமையுமொத்தகிழமைய வேற்றுமைதொக வவற்றின்பொருணின்றவழி - எ-று. பழியஞ்சுமென்புழிப் பழியினஞ்சும் - பழியையஞ்சுமென விரண்டுமொத்த கிழமையவாய் நின்றவாறறிக. அஃதேல் ஒருபொருட்கண்வரினன்றே மயககமாவ திவை செயப்படுபொருளு மேதுவுமாகிய பொருள்வேறுபாடுடையவாகலின் மயக்கமாமா றென்னையெனின் அற்றன்று ஈண்டேதுவாதலே யஞ்சப்படுதலாய் வேறன்றிநிறறலினெருபொருட்கண் வநதனவேயாம. அதனன் மயககமாமென்பது. (கஎ)

௧0௧. அன்னபிறவுந் தொன்னெறிப்பிழையா, துருபினும்பொரு ளினு மெய்தடுமாறி, யிருவயினிலையும் வேற்றுமையெல் லாந், திரிபிடனிலவே தெரியுமோர்க்கே.

மேன்மயக்கங்கூறப்பட்ட வேற்றுமையேயன்றி யவைபோல்வனபிறவுந் தொன்றுதொட்டுவரும்வழக்கிற்பிழையா துருபானும்பொருளானுமொன்றனி லைக்களத்தொன்றுசென்றுபிறிதொன்றன்பொருளுந் தன்பொருளுமாகிய வீரி டத்து நிலைபெறும் வேற்றுமையெல்லாநதிரிபுடைய வல்லதெரிந்துணர்வோர் க்கு - எ - று. பொதுவகையா னிருவயினிலையுமென்றுரோனும் வழிபோயினு ரெல்லாங் கூறைகோட்பட்டாரொன்றவழிக் கூறைகோட்படுதல் கடவுளரை யொழித் தேனையோர்க்கே யாயினவாறுபோல வேதுப்பொருண்மைக்கண் வ ருமூன்றுவது மைநதாவது மொருபொருளே பற்றிநிற்றலி னிருவயினிலையற் கேலாமையி னவற்றையொழித் தஃதேனையவற்றிற்கேயாம். என்னை? அதன் பொருளிற்றீராது பிறிதொன்றன்பொருட்கட் சேறலுடைமையா னிருவயினி லையற்கேற்றவாறறிக. அன்னபிறவாவன நோயினீங்கினான் - நோயைநீங்கினா ன் - எ - ம், சாத்தனைவெகுண்டான் - சாத்தனொடுவெகுண்டான் - எ - ம், மு றையாற்குத்துங்குத்து - முறையிற்குத்துங்குத்து - எ - ம், கடலொடு காடொ ட்டாது - கடலைக் காடொட்டாது - எ-ம்- வருவனவும் பிறவுமாம். இக்காலத் துச்சிதைந்து வழங்குமயக்கமுண்மையாற் றொன்னெறிப்பிழையாதன வாரா ய்ந்துணரப்படுமென்பார் தெரியுமோர்க்கென்றார். (௧அ)

௧0௨. உருபுதொடர்ந்தடுக்கிய வேற்றுமைக்கிளவி,யொருசொ ன்னடைய பொருள்சென்மருங்கே.

பலவுருபுந்தம்முட் டொடர்நதடுக்கிவந்த வேற்றுமைச்சொற்களெல்லா முடிக்குஞ்சொலொன்றனான்முற்றுப்பெற்றுநடக்குமவ்வொன்றனாற்பொருள் செல்லுமிடத்து. எ - று. ஈண்டுவேற்றுமைக்கிளவியென்றது வேற்றுமையுரு பை யிறுதியாகவுடையசொல்லை. என்னொடுநின்னொடுஞ்சூழாது-எ - ம், அந்த ணர்நூற்குமறத்திறகு மாதியாய்,நின்றதுமன்னவன்கோல்-எ-ம்- வரும். சாத் தன்றாயைக்காதலன், நாய்தேவனுயிற்று- என்புழித்தாயைத் தேவனென்பன காதலனுயிற்றென்னும் பயனிலைக்கடையா யிடைநின்றாற்போலக் கோட்டை நுனிக்கட்குறைத்தான் - இனையிற்கிளியைக்கடியும் - என்புழி நுனிக்கண் கிளி யையென்பன குறைத்தான் கடியுமென்னுமுடிக்குஞ்சொல்லிற்கடையா யிடை நின்றவாகலானவையடுக்கன்மையினவையுதாரணமாகலுமாயாசிரியர் கருத்த ன்றென்க. குழையைச்சாத்தனது கள்ளரினெனவிவ்வாறுதொடராது வருவ னவற்றை நீக்குதற் குருபுதொடர்நதடுக்கியவென்றும், நீதந்தசோற்றையுங் கூறையையுமுண்டுடுத்திருநதேமெனவின்னோரன்னுழியொருசொல்லாற் பொ ருள்செல்லாமையி னவற்றைநீக்குதற்குப் பொருள்சென்மருங்கென்றுங் கூறி னார். பிறவுமன்ன. (௧௧)

**கoரு.** இறுதியுமிடையு மெல்லாவுருபு, நெறிபடுபொருள்வயி னிலவுதல்வரையார்.

வேற்றுமைத்தொடரிறுதிக்கண்ணு மதனிடைநிலத்து மாறுருபுந் தத்தமக்கோதியபொருட்க ணிற்றலைவரையார். எ-று. கடந்தானிலத்தை - வந்தான் சாத்தனொடு-கொடுத்தான்சாத்தற்கு-வலியன்சாத்தனின் - இருந்தான்குன்றத்துக்கண்-எ-ம், நிலத்தைக்கடந்தான்- சாத்தனொடுவந்தான்-சாத்தற்குக்கொடுத்தான்-சாத்தனின்வலியன்-சாத்தனதாடை-குன்றத்துக்கணிருந்தான் - எ-ம்-வரும். நெறிபடுபொருள்வயி னிலவுதல்வரையாரெனவே அப்பொருளுணர்த்தாக்கானிலவுதல்வரையப்படுமென்பதாம். அங்ஙனம் வரையப்படுவனயாவையெனின் ஆறுவது மேழாவதும்- சாத்தனதாடை- குன்றத்துக்கட்கூகையென விடைநின்று தம்பொருளுணர்த்திற்றுறற்போல ஆடைசாத்தனது கூகைகுன்றத்துக்கண் எனவிறுதிநின்றவழி யப்பொருளுணர்த்தாமையா னவ்வுருபுகளாண்டுவரையப்படும். ஆறனுருபேற்றபெய ருருபொடுகூடிப்பெயராயும் வினைக்குறிப்பாயுநிற்றலுடைமையானந்நிலைமைக்கண் ஆடைசாத்தனதென விறுதிக்கண்ணுநிற்குமென்பது.இவ்வரையறையுணர்த்துதற்கும்,மெய்யுருபுதொகாவிறுதியானவென முன்னருணர்த்தப்படும் வரையறைக்குடம்படுத்தற்கும் ஈறுபெயர்க்காகுமென் றோதப்பட்டவுருபுதம்மையே யிறுதியுமிடையுநிற்குமெனவருத்துக்கூறினானென்பது. (உ0)

**கoச.** பிறிதுபிறிதேற்றலு முருபுதொகவருதலும், நெறிபடவழங்கிய வழிமருங்கென்ப.

பிறிதோருருபு பிறிதோருருபை யேற்றலு மாறுருபுந்தொக்குநிற்றலு நெறிபடவழங்கிய வழக்கைச்சார்ந்துவருதலான் வழுவாகா - எ - று. ஏற்புழிக்கோடலென்பதனாற் பிறிதோருருபேற்பதாறுவதேயாம். பிறிதேற்றலுமென்றமையாற் றனல்லாப்பிறவுருபேற்றல்கொள்க. சாத்தனதனை - சாத்தனதனொடு - சாத்தனதற்கு - சாத்தனதனின் - சாத்தனதன்கண் - எனவுருபுருபேற்றவாறும், நிலங்கடந்தான் - தாய்மூவர் - கருப்புவேலி - வரைவீழருவி- சாத்தன்கை - குன்றக்கூகை - எ - ம், கடந்தானிலம் - இருந்தான்குன்றத்து - எ - ம் - உருபுதொக்கு நின்றவாறுங்கண்டுகொள்க. இறுதியுமிடையுமென்பதனை யதிகாரத்தான்வருவித் திரண்டிடத்துங் கூட்டியுரைக்க. சாத்தனதனதெனச்சிறுபான்மை தன்னையுமேற்றலுரையிற் கோடலென்பதனாற்கொள்க. பெயரிறுதிநின்றவுருபு தன்பொருளோடு தொடராது பிறிதோருருபை யேற்றலும், தாநின்று தம்பொருளுணர்த்தற்பாலன தொக்குநிற்றலு மிலக்கணமன்மையின் வழுவமைத்தவாறு. (உக)

**கoரு.** ஐயுங்கண்ணு மல்லாப்பொருள்வயின், மெய்யுருபுதொகா அ விறுதியான.

ஐகாரவேற்றுமைப்பொருளுங் கண்ணென்வேற்றுமைப்பொருளு மல்லாத பிறபொருண்மேனின்றவுருபு தொடர்மொழியிறுதிக்கட் டொக்குநில்லா. எ - று. இறுதியுமிடையுமென்ப ததிகரிக்க வுருபுதொகவருதலுமென்றமையின் வரைவின்றி யெல்லாவுருபு மிறுதிக்கண்ணுந் தொகுமென்பது பட்டதனைவிலக்கி யிவ்விருபொருட்கண்ணும் வருவனவே யிறுதிக்கட்டொகுவன அல்லனதொகாவென வரையறுத்தவாறு. அறங்கறக்குமென விடைக்கட்டொக்குநின்ற நான்காவது கறக்குமறமென விறுதிக்கட்டொக்குநில்லாமை கண்டுகொள்க. பிறவுமன்ன. (௨௨)

௧0௬. யாதனுருபிற் கூறிற்றாயினும், பொருள்செல்மருங்கின்
வேற்றுமைசாரும்.

ஒருதொடர்யாதானுமோர்வேற்றுமைய துருபுகொடுத்துச்சொல்லப்பட்டதாயினுமவ்வுருபுதன்பொருளா னத்தொட ரப்பொருள்செல்லாதவழிப்பொருள்செல்லும்பக்கத்து வேற்றுமையைச்சாரும். எ - று. பொருள்செல்லாமையாவதுருபேற்றசொல்லு முருபுநோக்கியசொல்லுந் தம்முளியையாமை. அவ்வேற்றுமையைச் சார்தலாவததன்பொருட்டாதல். ஊொயரிநாணற்கிழங்குமணற்கின்றமுளையோரன்ன முள்ளெயிற்றுத்துவர்வாயெனறவழி நான்காவதன்பொருளா னவ்வுருபேற்றசொல்லு மவ்வுருபுநோக்கியசொல்லுந் தம்முளியையாமையி னவற்றையியைவிக்கு மேழாவதன்பொருட்டாயினவாறு கண்டுகொள்க. உருபு தன்பொருளிற்றீராது பிறவுருபின்பொருட்டாய் நிற்குமெனஉருபுமயக்கங்கூறியவாறாயிற்று. அஃதேல் அரசர்கட்சார்ந்தானென்புழியு மிரண்டாவதன்பொருட்க ணேழாவது சென்றதென்றமையானத ●னுடித னிடை வேற்றுமையென்னையெனின் அரசர்கட்சார்ந்தானென்புழி யரசனது சார்தற்கிடமாதலேசாரப்படுதலுமா யிருபொருண்மையு மொற்றுமைப்பட்டு நிற்றலிற தத்தம்பொருள்வயிற் றம்மொடுசிவணு மாகுபெயர்போல விடப்பொருண்மைக்குரிய கண்ணெனுரு பவ்விடப்பொருண்மையொடொற்றுமையுடைத்தாகிய செயப்படுபொருட்கு மாண்டுரித்தேயாம். மணற்கின்றவென்புழி நான்காவதன்பொருளொ டேழாவதன்பொருட்கென்னு மியைபின்மையி னொப்பில்வழியாற் பிறிதுபொருள்சுட்டுமாகுபெயர்போல வப்பொருட்குரித்தன்றி வந்ததெனப்படும். அனனபிறவற்றுள்ளு மிவ்வேறுபாடு தெரிந்துணர்க. தம்பொருளிற்றீர்த விலக்கணமன்மையி னிதனையிலக்கணத்தொடுறழ்ந்து வருவனவற்றொடுவைத்தார். (௨௩)

௧0௭. எதிர்மறுத்துமொழியினுந் தத்தமரபிற், பொருணிலைதிரியா வேறுறுமைசொல்லே.

விதிமுகத்தாற்கூறா தெதிர்மறுத்துக்கூறினுந தத்தமிலக்கணத்தான்வரும்பொருணிலைமைதிரியா வேற்றுமையுருபு. எ - று. மரத்தைக்குறையான்- வேலானெறியான் - எனவரும. என்சொல்லியவாறோவெனின்- குறையானெ

றியானென்றவழி வினைநிகழாமையின் மரமும்வேலுஞ்செயப்படுபொருளுங் கருவியுமெனப்படாவாயினு மெதிர்மறைவினையும் விதிவினையொடொக்குமெ ன்பது நூன்முடிபாகலா னுண்டுவந்தவுருபுஞ் செயப்படுபொருண்முதலாயின வற்றுமேல் வந்தனவெனப்படுமென வழுவமைத்தவாறு. பிறவுமன்ன. (உ௪)

**௧௦௮. கு ஐ ஆனெனவரூஉமிறுதி, அ ஒடு சிவணுஞ்செய்யு ளுள்ளே.**

கு ஐ ஆனெனவரு மூன்றுருபுந்தொடரிறுதிக்கணின்றவழி அகரத்தொ டுபொருநதிநிற்றலுமுடைய செய்யுளுள். எ - று. கடிநிலையின்றே யாசிரியற் க-எ - ம், காவலோனக்களிறஞ்சும்மே- களிறஞ்சுமக்காவலோன-எ-ம், புரை தீர்கேள்விப்புலவரான - எ-ம், உள்ளம்போல வுற்றுழியுதவும் புள்ளியற்கலி மாவுடைமையான - எ - ம் வரும். குகரமுமைகாரமு மீறுகெடவகரத்தொ டு சிவணுதலுடைமையான், ஐ ஆன்கு எனமுறையிற்கூறுது கு ஐ எனவவற் றையியையவைத்தார். இயையவைக்கின்றவர் ஐகார முன்வைக்கவெனின் மு றைஅதுவாயினுஞ்செய்யுளின்பநோக்கிக் குகரமுன்வைத்தாரெனபது. அஃதே லித்திரிபு தம்மீறுதிரிதலென விடைச்சொற்கோதிய பொதுவிலக்கணத்தாற் பெறப்படுதலினீண்டுக்கூறலவேண்டாவெனின் அப்பொதுவிலக்கணத்தானெ ய்துவனவுருபிற்குமெய்துமேற் பிறிதுபிறிதேற்றலும் பிறிதவணிலையலாயட ங்குதலானீண்டுக்கூறல்வேண்டாவாம்; அதனுனன்னபொதுவிலக்கண முருபி ற்கெய்தாதெனமறுக்க. (உ௫)

**௧௦௯. அ எனப்பிறத்த லஃறிணைமருங்கிற்,குவ்வுமஐயு மில்லெ னமொழிப.**

அஃறிணைப்பெயர்க்க ணகரத்தொடு சிவணியீறுதிரிதல் குவ்வுமையுமில வென வெய்தியது விலக்கியவாறு. அ எனத்திரிதலை அ எனப்பிறத்தலென்றார்.

**௧௧௦. இதனதிதுவிற் றென்னுங்கிளவியு, மதனைக்கொள்ளும் பொருள்வயினானு, மதனாற்செயற்படற் கொத்தகிளவியு, முறைக்கொண்டெழுந்த பெயர்ச்சொற்கிளவியும், பால் வரைகிளவியும் பண்பினாக்கமுங், காலத்தினறியும் வேற் றுமைக்கிளவியும், பற்றுவிடுகிளவியுந் தீர்துமொழிக் கிளவியு, மன்னபிறவு நான்கனுருபிற், றொன்னெறிமர பின தோன்றலாறே.**

இதனதிதுவித் தன்மைத்தென்னு மாறுவதன்பொருண்மையும், ஒன்றனை யொன்றுகொள்ளுமென்னு மிரண்டாவதன்பொருண்மையும், ஒன்றனுனொன் று தொழிற்படற்கொக்குமென்னுமூன்றுவதன்பொருண்மையும், முறைப்பொ ருண்மையைக்கொண்டுநின்ற பெயர்ச்சொல்லின தாறும்வேற்றுமைப்பொரு ண்மையும், நிலத்தை வரைந்துகூறும்பொருண்மையும்- பண்பின்கணும் பொ

ருவுமாகிய வைநதாவதனபொருணமையும, காலததினக ணறியபபடுமேழா மவேறறுமைப பொருணமையும, பறறுவிடுபொருணமையும-தீாநதுமொழிப பொருணமையுமாகிய வைநதாவதனபொருணமையும, அவைபோலவன பிற நானகனுருபாற றேனறுதறகட டொனனெறிமரபின-எ-று. யானைககுககோடுகூரிது - எ - ம, இவடகுககொளளுமிவவணி - எ - ம, அவறகுச செயயத் தகுமககாரியம - எ - ம, ஆவிறகுககனறு - எ - ம, கருவூாககுககிழககு-எ-ம், சாததறகுநெடியன - எ - ம, காலைககுவரும - ஏ - ம, மனைவாழகைககுப பறறுவிடடான - எ - ம. ஊாககுததீாநதான - எ - ம் - அபபொருணமையலலாவற றினகணணு நானகாமுருபு வநதவாறு கணடுகொளக. வனபான மெனபாலெ னபவாகலி னிலததைப்பாலெனறுா, சிறபபேதிலனே காதலவஃகியொடநாற டணபுநிலைககளமெனப எனவுவமை நிலைககளததைப பணபெனபவாகலிற பணபினுககமெனறுா. இதுவும வேறறுமைமயககமாகலின மேறகூறபபடட வறறொடுவையா திததனையுமபோதநது வைததனெனனையெனின அதுதொகை, விரிபபமயஙகுமதிகாரமிந, தொகையலவழி யானையதுகோடுகூரிதென னுந தொடாமொழிபபொருள சிதையாமல யானைககுக கோடுகூரிதென நானகாவதாணடுசசெனறு நினறதாகலா னவறறொடுவையாராயினுனெனபது. அஃதேல ஆவினகனறெனவுங கருவூாககிழககெனவுந தொகையாயும வருதலினிபபொருடக ணானகாவதுவருத லீணடுககூறறபாறறனறெனின அஃதொககுமன, ஆயினும பிறவேறறுமைபபொருடக ணானகாவது சேறலொபபுமையா னவறறிறகு வேறோகுததிருசெயயா திவறறொ டொருஙகோதினுனெனபது. அனனபிறவுமெனறதனை ஊாககடசெனறுன - ஊாககணுறறதுசெய வானெனனு மேழாவதனபொருடகணணும, ஊாிடசேயனெனனு மைநதாவ தனபொருடகணணும, ஊாககுசசெனறுன, ஊாககுறறதுசெயவான, ஊாககுசசேயனென நானகாவது வருதலகொளக. பிறவுமனன. (உஎ)

ககக. ஏனையுருபு மன்னமரபின, மானமிலவே சொன்முறை
யான.

நானகனுருபலலாத பிறவுருபுந தொகையல்லாத தொடாமொழிககணு னறனபொருள சிதையாமையொனறு மயஙகுதறகட குறறமிலவழஙகுமுறை மையான - எ - று. உ - ம. நூலதுகுறறஙகூறினுனெனனுந தொடாமொழிக் க ணூலைககுறறஙகூறினுனெனவும, அவடகுக குறறேவலசெயயுமெனனுந தொடாமொழிகக ணவளதுகுறறேவலசெயயுமெனவும வருவனகொளக. பிறவுமனன. (உஅ)

ககஉ. வினையேசெயவது செயயபபடுபொருளே, நிலனேகாலங
கருவியென்று, வின்னதறகிதுபய மாகவெனனு, மனன
மரபி னிரணடொடுந்தொகைஇ, யாயெடடெனப தொ
ழின்முதனிலையே.

வினையும் வினைமுதலுஞ் செயப்படுபொருளு நிலமுங் காலமுங் கருவியுமா கியவாறு மின்னதற்கிதுபயமாகவென்று சொல்லப்படுமிரண்டொடுந் தொக் குத் தொழிலதுமுதனிலையெட்டாமென்று சொல்லுவராசிரியர் - எ-று. ஈண் டேதுப்பொருண்மை கருவிக்கணடக்கப்பட்டது. தொழின்முதனிலையென்ற து தொழிலதுகாரணத்தை; காரியத்தின் முன்னிற்றலின் முதனிலையாயிற்று. காரணமெனினுங் காரகமெனினுமொக்கும். வனைந்தானென்றவழி வனைதற ெருழிலும், வனைந்தகருத்தாவும், வனையப்பட்டகுடமும், வனைதற்கிடமாகிய நிலமும், அத்தொழினிகழுங்காலமும், அதற்குக் கருவியாகிய திகிரிமுதலாயி னவும், வனையப்பட்டகுடத்தைக்கொள்வானும், வனைந்ததனும் பயனுமாகி யவெட்டும்பற்றி யத்தொழினிகழ்ந்தவாறு கண்டுகொள்க. அஃதேல் தொழிலி ன்வேறாயது காரகமாகலின் வனைதற்றெழிலிற் கததொழிருன் காரகமாமா றென்னையெனின், வனைந்தானென்பது வனைதலைச்செய்தானென்னும் பொரு ட்டாகலிற் செய்தற்குவனைதல் செயப்படுபொருணீர்மைத்தாய காரகமாமெ ன்பது. அற்றாகலினன்றே கொளலோகொண்டானென்ப திரண்டாம்வேற்று மைத் தொடராயிற்றென்பது. இன்னதற் கிதுபயமாகவென்னுமிரண்டு மருகி யல்லதுவாராமையி னன்னமரபினிரண்டொடுமெனப்பிரித்துக்கூறினார். அஃ தேற்செய்வதுமுதலாகியமுதனிலை வேற்றுமையோத்தினுட் கூறப்பட்டமை யி னிச்சூத்திரம்வேண்டாவெனின் அற்றன்று இரண்டாவதற்கோதிய பொரு ளெல்லாவற்றையுஞ் செயப்படுபொருளெனத்தொகுத் தேதுவைக்கருவிக்க ண்ணும் வினைசெய்யிடத்தைக் காலத்தின்கண்ணுமடக்கி யேழாகச்செய்தவற் றொடாண்டுப்பெறப்படாத வினையென்னுமுதனிலைகூட்டி யெட்டென்றாராக லி னிப்பாகுபாடாண்டுப் பெறப்படாமையா னிச்சூத்திரம்வேண்டுமென்பது. இதனாற் பய னிலனும் பொருளுங் காலமுங் கருவியுமெனவுஞ் செயப்படுபொ ருளைச செய்ததுபோல வெனவு மேல்வரும்வினைக்கிலக்கணங் கூறுதலும்பிற வுமாம். (உக)

ககங. அவைதாம், வழங்கியன்மருங்கிற் குன்றுவகுன்றும்.

மேற்கூறப்பட்ட தொழின்முதனிலைதா மெல்லாத்தொழிற்கு மெட்டும் வருமென்னும்யாப்புறவில்லை வழக்கின்கட்சிலதொழிற்கட் குன்றத்தகுவன குன்றிவரும் - எ - று. குன்றத்தகுவனவாவன செயப்படுபொருளு மேற்பது ம்பயனுமாம். கொடியாடிற்று-வளிவழங்கிற்று- என்புழிச்செயப்படுபொருளு மேற்பதும்பயனுமாகியமுதனிலை யில்லையாயினு மொழிந்தனவற்றானுடுதலும் வழங்கலுமாகிய தொழினிகழ்ந்தவாறுகண்டுகொள்க. இதனாற் பயனெல்லாத் தொழிற்கு முதனிலையெட்டுங் குன்றாதுவருமோ சிலதொழிற்குச் சிலகுன் றிவருமோவென்னு மையநீங்குதலுஞ் செயப்படுபொருளகுன்றியவினையை யுணர்த்துஞ்சொல் லிரண்டாவதனெ டியையாதென்பது பெறுதலுமாம்.()

ககச. முதலிற்கூறுஞ் சினையறிகிளவியுஞ், சினையிற்கூறு முத லறிகிளவியும், பிறந்தவழிக்கூறலும் பண்புகொள்பெய

ரு, மியன்றதுமொழிதலு மிருபெயரொட்டும், வினை
முதலுரைக்குங் கிளவியொடுதொகைஇ, யனையமரபின
வாகுபெயர்க்கிளவி.

முதற்சொல்வாய்பாட்டாற்கூறப்படுஞ் சினையறிகிளவியும், சினைச்சொல்வாய்பாட்டாற்கூறப்படு முதலறிகிளவியும், நிலத்துப் பிறந்தபொருண்மேலந் நிலப்பெயர்கூறலும், பண்புப்பெய ரப்பண்புடையதனையுணர்த்திப் பண்புகொள்பெயராய்நின்றதூஉம், முதற்காரணப்பெயரா னக்காரணத்தானியன்ற காரியத்தைச்சொல்லுதலும், அன்மொழிப்பொருண்மேனின்ற விருபெயரொட்டும், செய்யப்பட்டபொருண்மே லதனைச்செய்தான்பெயரைச் சொல்லுஞ் சொல்லுமென வப்பெற்றிப்பட்டவிலக்கணத்தையுடைய வாகுபெயர். எ-று. கடுத்தின்றான்-தெங்குதின்றான்- எனமுதற்பெயா சினைமேலும், இலைநட்டுவாழும் - பூநட்டுவாழும் எனச்சினைப்பெயர் முதன்மேலும், குழிப்பாடி நேரிதென நிலப்பெயரந்நிலத்துப்பிறந்த வாடைமேலும், இம்மணிநீலமெனப் பண்புப்பெய ரப்பண்புடையதன்மேலும், இக்குடம்பொன்னெனக் காரணப்பெய ரதனானியன்றகாரியத்தின்மேலும், பொற்றொடிவந்தாளென விருபெயரொட் டன்மொழிப் பொருண்மேலும், இவ்வாடைகோலிகனெனச் செய்தான்பெய ரச்செய்யப்பட்டதன்மேலும் வந்தவாறுகண்டுகொளக. அன்மொழித்தொகை யெச்சவியலுளுணர்த்தப்படுதலி னீண்டுக்கூறல்வேண்டாவெனின் அன்மொழித்தொகை தொகையாதலுடைமையி னீண்டுக்கூறினார். இயற்கைப்பெய ராகுபெயரெனப் பெயரிரண்டாயடங்கும்வழி யொருபெயர்ப்பட்டதன்மேலும் வந்தவாறுகண்டுகொள்க. அன்மொழித்தொகை யெச்சவியலு ளுணர்த்தப்படுமதனை லவ்வாகுபெயராதலுடைமைபற்றி யீண்டுக்கூறினார். எச்சவியலுட் கூறப்பட்டவாயினும் வினையெச்சமுதலாயின வினைச்சொலாதலு மிடைச்சொலாதலுமுடைமையா னவற்றை வினையியலுள்ளு மிடைச்சொலோத்திலுள்ளுங் கூறியவாறுபோலவென்பது. தொல்காப்பியனானுங் கபிலனானுஞ் செய்யப்பட்டநூலைத் தொல்காப்பியங் கபிலமென்றல் வினைமுதலுரைக்குங் கிளவியென்றா னுரையாசிரியரெனின் அற்றன்று ஒருமொழியிலக்கணமீண்டுக் கூறினாராயினும் வெற்புச்சேர்ப்பென்னும்பெயரிறுதி இதனையுடையானென்னும் பொருண்மைதோன்ற அன்னென்பதோரிடைச்சொல் வந்து வெற்பன்சேர்ப்பனென நின்றாற்போலத் தொல்காப்பியன் கபிலன்என்னும்பெயரிறுதி யிவனாற்செய்யப்பட்டதென்னும் பொருடோன்ற அம்மென்பதோரிடைச்சொல்வந் தன்கெடத் தொல்காப்பியம் கபிலமெனநின்றன வென்பதாசிரியர்கருத்தா மதனானவையுதாரணமாகலுரையாசிரியர்க்குக் கருத்தன்றென்க. அனையமரபினவென்ற தவ்வாறியாதானுமோ ரியையுபற்றியொன்றன்பெய ரொன்றற்காகலென வாகுபெயரிலக்கணத்திற்குத் தோற்றுவாய் செய்தவாறு. ஒன்றன்பொருட்க ணொன்றுசேறலென்னு மொப்புமையானவற்றை யீண்டுக்கூறினார். அஃதேலாகுபெயரொழுவாய் வேற்றுமைமயக்கமாகலா னீண்டுக்கூறினாரென்றா லுரையாசிரியரெனின் ஆகுபெய ரோனவேற்றுமை

யுமேற்றுநிற்றலானு மெழுவாய்வேற்றுமையாய்நின்றவழியு மதுபிறிதோர் வேற்றுமைப்பொருட்கட்சென்று மயங்காமையின் வேற்றுமைமயக்கமெனட் படாமையானு மதுபோலியுரையென்க. (௬க)

ககரு. அவைதாந், தத்தம்பொருள்வயிற் றம்மொடுசிவணலு, மொப்பில்வழியாற் பிறிதுபொருள்சுட்டலு, மப்பண்பி னவே நுவலுங்காலை, வேற்றுமைமருங்கிற் போற்றல் வேண்டும்.

மேற்கூறப்பட்டவாகுபெயர்தாந் தத்தம்பொருளினீங்காது தம்பொருளின் வேறல்லாதபொருளொடுபுணர்தலுந் தம்பொருட்கியைபில்லாத பிறிதுபொருளைச் சுட்டிநிற்றலுமென விரண்டியல்புடையவேறுபாடு போற்றியுணரப்படும் - எ - று. கடுவென்னுமுதற்பெயர் முதலோடொற்றுமையுடைய சினைமேனிற்றல் தத்தம்பொருள்வயிற் றம்மொடுசிவணலாம். குழிப்பாடியென்னுமிடப்பெய ரிடத்தின்வேறுயவாடைமேனிற்ற லொப்பில்வழியாற் பிறிதுபொருள்சுட்டலாம். அஃதேற்குழிப்பாடியுமாடையு மிடமுமிடத்து நிகழ்பொருளுமாகிய வியைபுடையவாகலினன்றே யதன்பெயரதற்காயிற்று அதனனஃதொப்பில்வழியாற் பிறிதுபொருள் சுட்டலாமாறென்னையெனின் நன்றுசொன்னாய் அவ்வியைபுடையவேனு முதலுஞ்சினையும் பண்பும் பண்புடையதுமாகலுமுதலாகிய வொற்றுமையாகிய வியல்பிலவாகலி னவைதம்முள்வேறெனவேபடும். அதனாற் குழிப்பாடியென்ப தொப்பில்வழியாற்பிறிதுபொருள் சுட்டலேயாமென்பது. ஒற்றுமையாகிய வியைபுள்வழி யறுதத்தம்பொருள்வயிற் றம்மொடுசிவணிற்றென்று மவ்வியைபின்றி யிடமுமிடத்துநிகழ்பொருளுமாகன்முதலாகிய வியைபேயாயவழி யிஃதொப்பில்வழியாற் பிறிதுபொருள் சுட்டிற்றென்றும் வேறுபடுத்துணரப்படுமென்பார் வேற்றுமைமருங்கிற் போற்றல்வேண்டுமென்றுரொன்பது. அஃதேலிதனைப் பிரித்தொருசூத்திரமாக வுரைத்தாராலுரையாசிரியரெனின் அங்ஙனம் பிரிப்பிற்றம்மொடு சிவணலும் பிறிதுபொருள்சுட்டலுமாகிய விவற்றநுவேறுபாட்டின்க ணென்பதினிதுபெறப்படாமையானு மெழுத்தோத்தினுட் புள்ளியிறுதியு முயிரிறுகிளவியுமென்னுஞ் சூத்திரத் திற்கிகர்ப்பதுகாவலைப் பிரியாதொன்றாகவே யுரைத்தலானு மவர்க்கது கருத்தன்றென்க. (௬௨)

கககூ. அளவுநிறையுமவற்றொடுகொள்வழி, யுளவெனமொழிப வுணர்ந்திசினோரே.

அளவுப்பெயரு நிறைப்பெயரு மாகுபெயராகக்கொள்ளு மிடமுமுடையவென்று சொல்லுவாருணர்ந்தோர். எ-று. பதக்குத்தூணி யென்னு மளவுப் பெயர் இந்நெற்பதக்கு-இப்பயறுதூணியெனவும், தொடிதுலாமென்னு நிறைப்பெயர் இப்பொன்றொடி இவ்வெள்ளிதுலாமெனவு மளக்கப்பட்டபொருண்மேலு நிறுக்கப்பட்டபொருண்மேலு மாகுபெயராய்நின்றவாறு கண்டுகொள்க. ஒன்றிரண்டென்னுந்தொடக்கத் தெண்ணுப்பெயரு மெண்ணப்பட்ட

பொருண்மேனின்றவழி யாகுபெயரேயாகலி னவற்றை யொழித்ததென்னை யெனின் அவையேனைப்பொருட்கு முரியவாகலி னாகுபெயரெனப்படா வத னவற்றை யொழித்தாரென்பது. (௩௩)

௧௧௭. இளந்தவல்ல வேறுபிறதோன்றினுங், கிளந்தவற்றியலா னுணர்ந்தனர்கொளலே.

சொல்லப்பட்டவையேயன்றிப் பிறவுமாகுபெயருளவே லவையெல்லா ஞ்சொல்லப்பட்டவற் றியல்பானுணர்ந்துகொள்க. எ-று. சொல்லப்பட்டவற் றியல்பாவது யாதானுமோரியைபுபற்றி யொன்றன்பெயரொன்றன்மேல் வழ ங்கப்படுதல். யாழ்குழலென்னுங் கருவிப்பெயர் யாழ்கேட்டான்-குழல்கேட் டானென வவற்றானாகிய வோசைமேலும் ஆகுபெயராய்நின்றன. யானைபா வையென்னு முவமைப்பெயர் யானைவந்தான்-பாவைவந்தாள்- எனவுவமிக்க ப்படும் பொருண்மேலும், ஏறுகுத்தென்னுந் தொழிற்பெயர் இஃதோரேறு- இஃதோர்குத்து - எனவத்தொழிலானும் வடுவின்மேலும் வருவனவெல்லாங் கொள்க. பிறவுமன்ன. இயைபுபற்றியொன்றன்பெய ரொன்றற்காங்கா லவ் வியைபோரிலக்கணத்ததன்றி வேறுபட்ட விலக்கணத்தையுமுடைத்து; அவ் விலக்கணமெல்லாங் கடைப்பிடித்துணர்கவென்பார் வேறுபிறதோன்றினுமெ ன்றார். (௩௪)

மூன்றாவது

வேற்றுமைமயங்கியல் - முற்றிற்று.

---

நான்காவது

# விளிமரபு.

---

௧௧௮. விளியெனப்படுப கொள்ளும்பெயரொடு, தெளியத்தோ ன்று மியற்கையவென்ப.

நிறுத்தமுறையானே விளிவேற்றுமையுணர்த்திய வெடுத்துக்கொண்டா ர் அதனானிவ்வோத்து விளிமரபென்னும் பெயர்த்தாயிற்று. விளியென்றுசொ ல்லப்படுவன தம்மையேற்கும் பெயரொடுவிளங்கத்தோன்று மியல்பையுடை யவென்று சொல்லுவராசிரியர். எ-று. விளிவேற்றுமை யெதிர்முகமாக்குதற் பொருட்டாதல் பெயரானேவிளங்குதலிற் கூறாராயினார். ஈறுதிரிதலுமீற்றய னீடலும் பிறிதுவந்தடைதலுமியல்பாகலுமென்னும் வேறுபாடுடைமையான் விளியெனப்படுபவென்றார். கொள்ளும்பெயரொடெனவே கொள்ளாப்பெய ருமுளவென்பதாம். இயல்புவிளிக்கட்டிரியாதுநின்ற பெயரீறே விளியெனப் படுதலி னண்டுநின்றதற்றென விளங்குமென்பார் தெளியத்தோன்றுமென்றார்.

௧௧௯. அவ்வே, யிவ்வெனவறிதற்கு மெய்பெறக்கிளப்ப.

விளிகொள்ளும்பெயருங்கொள்ளாப்பெயருமிவையென மாணாக்கனுணா
ற்பொருட்டவை யிவ்வோத்தினகத்துப் பொருள்படக்கிளக்கப்படும். எ - று.
இதுமொழிவாமென்னுந்தந்திரவுத்தி. அவ்வேயெனக் கொள்ளும்பெயரொடு
தெளியத்தோன்றுமென்ப பெயரானுணர்த்தப்படுவதாய்நின்ற விளியைச்சுட்
டியபெயரைச்சுட்டுதலிட்டுரைத்தரெனின் விளிவேற்றுமையாவது கொள்ளு
ம்பெயரின்வேறன்றி யவைதாமேயாய்நிற்றலி னப்பெயரைச்சுட்டவேவிளியு
ஞ்சுட்டப்பட்டனவேயா மதனானிட்டாரென்பது. இவ்வாறுரையாதவ்வே
யெனச்சுட்டப்பட்டன விளிவேற்றுமையெனின் வருஞ்சூத்திரத்தி னவைதா
மெனப்பட்டனவும் விளிவேற்றுமையேயாய் மெய்ப்பொருள்சுட்டிய விளி
கொள்பெயரென்பதனொடியையாவாமென்பது. விளிகொள்ளும்பெயருங்கொ
ள்ளாப்பெயருமுயர்திணைவிரவுப்பெய ரஃறிணைப்பெயருள்ளு மடங்குத
லானுணர்வினார்க்கல்லதறிய லாகாமையி னேனோருமறிதற்கவை கிளக்
கப்படுமென்பா ரிவ்வெனவறிதற்கென்றார். (௨)

க௨0. அவைதாம், இ உ ஐ ஓ வென்னு மிறுதி, யப்பா னான்கே
யுயர்திணை மருங்கின், மெய்ப்பொருள் சுட்டிய விளிகொ
ள்பெயரே

கிளக்கப்படுவனவாகிய பெயர்தாம் இ, உ, ஐ, ஓ என்னு மிறுதியையு
டைய வக்கூற்று நான்குபெயரு முயர்திணைப்பெயருள் விளிகொள்ளும்பெய
ர். எ - று. அஃறிணைப்பெய ராகுபெயராயுயர்திணைக்கண்வந்தவழியும் விரவு
ப்பெய ருயர்திணைக்கண் வருங்காலு மவைவிளியேற்குமிடத் துயர்திணைப்பெ
யராமென்றற்குயர்திணைமருங்கின் மெய்ப்பொருள்சுட்டியவென்றார். சுட்டாத்
தொடீஇ கேளாய் - எ - ம், சாத்தீ - எ - ம் அவையுயர்திணைப்பெயராய விளி
யேற்றவாறுகண்டுகொள்க. மெய்ப்பொருள்சுட்டியவிளிகொள்பெய ரப்பானா
னகென்பனவெழுவாயும்பயனிலையுமாயியைந் தொருசொன்னீர்மையவா யவை
தாமென்னுமெழுவாய்க்குப்பயனிலையாயின. அஃதே லுயர்திணைவிரவுப்பெய
ரைப்பொருள்பற்றி யுயர்திணைப்பெயராகக்கண்டக்கினாரெனின் முன்னர்விள
ம்பியநெறியவிளிக்குஞ்சாலை யெனல்வேண்டாவாம் பிறவெனின், நன்றுசொ
ன்னாய் விளம்பியநெறியவிளிக்குங்காலையென்புழி விரவுப்பெயரென்னு முயர்
திணைவிரவுப்பெயரென வஃறிணைக்கண்வருவனவற்றை விதந்தோதுதலா னுய
ர்திணைக்கண்வருவன வுயர்திணைப்பெயருளடங்குமென்பதற்கு அச்சூத்திரமே
கரியாயிற்றென்பது. அல்லதூஉம்புள்ளியிற்றுயர்திணைப்பெயர்க்கண்வீற்றுயர்
திணைவிரவுப்பெயருமடங்கி விளிகோடலெய்துதலானன்றே தாநீயிரென்பன
விளிகொள்ளாவென்வெய்தியது விலக்குவாராயிற் றதனானுமடங்குதல் பெற்
றுமென்பது. அல்லதூஉ முயர்திணையதிகாரத்து முறைப்பெயர்விளியேற்குமா
று கூறினமையானும்பெறப்படும். விரவுப்பெயரை யுயர்திணைப்பெயரொடு மா
ட்டெறிபவாகலின் மாட்டேற்றுமுறைப்பெயராகாரமுமேகாரமும்பெற்று
விளியேற்றலெய்தாமையி னீண்டுக்கூறினானென்றா ருரையாசிரியரெனின்
அக்கருத்தினராயி னஃறிணையென்னுஞ்சொல்லொழித்துக் கிளந்தவிறுதிவிர

வுப்பெயர் விளம்பியதெறியவிளிக்குங்காலையெனவும், இதன்பின் முறைப்பெ யர்மருங்கினையெனிறுதி யாவொடுவருதற்குரியவுமுளவேயெனவும், இதன்பி ன்னகாரளகாரவீற்றிருவகை முறைப்பெயருமடங்கப் புள்ளியிறுதியேயொடு வரும்மெயெனவும ஓதுவார்மன் ஞசிரியர். என்னை? மயங்கக்கூறலென்னுங்குற் றமுநீங்கிச் சூத்திரமுஞ்சுருங்குமாகலா னவ்வாறோதாமையானு முறைப்பெ யரோயன்றிதாநீயிரென்பனவு மீண்டுக்கூறபபட்டமையானு முளையாசிரியர்க் கது கருத்தன்றென்க. (௩)

௧௨௧. அவற்றுள், இ ஈ யாகும் ஐயாயாகும்.

மேறகூறபபட்ட நானகிறும் விளியேறகுமாறுகூறுகின்றார். அவற்றுளெ ன்ற தகநான்கிறதிறுனொனறவாறு. நமபி - நமபீ-என இகரமீகாரமாயும், நங் கை-நஙகாய-என ஐகாரமாயாயு மீறுதிரிநது விளியேற்கும். எ - று. (௪)

௧௨௨. ஓவுமுவவு மேயொடுசிவணும்.

கோ-கோவே-எ-ம,வேநது-வேநதே-எ-ம்-ஓகாரமும் உகாரமும் ஏகாரம் பெறறு விளியேற்கும். எ - று. (௫)

௧௨௩. உகரந்தானே குற்றியலுகரம்.

மேற்கூறப்பட்ட உகரமாவது குற்றியலுகரம் - எ - று. திரு - திருவே யெனச் சிறுபான்மை முறறுகரவீறுமுளவேனு மோதியமுறைமையானே வி ளியேற்பன குற்றுகரவீறேயாகலிற குற்றியலுகரமென்றார். (௬)

௧௨௪. ஏனையுயிரோ யுயர்திணைமருங்கிற், றும்விளிகொள்ளா வென்மனார்புலவர்.

மேறகூறப்பட்ட நான்கீறுமல்லாவுயிரீ றுயர்திணைக்கண் விளிகொள்ளா வென்று சொலலுவர் புலவர் - எ - று. கொள்வனவிவையென வரையறுத்து ணாத்தவே யேனையகொள்ளாவென்பதுணரப்படும். வரையறைக்குப்பயனது வாகலான்] அதனானிச்சூத்திரம்வேண்டாவெனின் அஃதொக்கும். வரையறை யாற் பெறப்படுவதனையே யொருபயனோக்கிக்கூறினார். யாதோபயனெனின் ஏனையுயிர்விளிகொள்ளாவென மேற்கூறப்பட்ட வுயிர்கூறியவாறன்றிப்பிறவா றானும் விளிகொள்வனவுளவென்பதுணாத்துதற்கென்பது. கணி - கணியே, கரி - கரியே - எனவருவன. பிறவுமன்ன. தாமென்றதனானேனையுயிர்தம்மிய ல்பாற் கொள்ளாவாயினுஞ்சொல்லுவான் குறிப்புவகையாற் கொள்வனவு முளவென்பதாம். மகவெனபது விளிபெருதாயினுஞ்சொல்லுவான் குறிப்பா ன்மகவேயென விளிபெற்றவாறுகண்டுகொள்க. (௭)

௧௨௫. அளபெடைமிகூஉ மிகரவிறுபெய, ரியற்கையவாகுஞ் செயற்கையவென்ப.

அளபெடை தன்னியல்புமாத்திரையின்மிக்கு நான்குமைந்துமாத்திரை பெற்றுநிற்கு மிகரவீற்றுப்பெயா இ ஈ யாகாதியல்பாய் விளியேற்குஞ்செய

'ற்கையையுடையவாம் - எ - று. அளபெடைமிக்கியற்கையவாகுஞ் செயற்கை யுவென்னுது மிகூஉ மிகரவிறுபெயரென வனுவதித்தாரோனு மாத்திரைமிக்கியு ல்பாமென்பததனுற்பெறப்படும். தோழீஇஇஇ, தோழீஇஇஇஇ, எனவரும். இ ஈ யாகாமையி னியற்கையவாகுமென்றும், மாத்திரைமிகுதலாகிய செ யற்கையுடைமையாற செயற்கையவென்றுங்கூறினர். இகரவிறுபெயரென்ப திகாரததானிற்றபெயரெனவிரியும். (அ)

௧௨௬. முறைப்பெயர்மருங்கி னையெனிறுதி, யாவொடுவருதற் குரியவுமுளவே.

முறைப்பெயரிடத் தையென்னுமுடி பாயாகா தாவொடுவருதற்குமுரிய னவுள - எ - று.அன்னை - அன்னு - எ - ம், அத்தை - அத்தா - எ -ம் வரும். உம்மையான அன்னாய் - அத்தாய் எனவாயாதலுமுடையவென்பதாம். உம் மைபிரிந்துநின்றது. (௯)

௧௨எ. அண்மைசசொல்லே யியற்கையாகும்.

நான்கீற்றண்மைச்சொல்லுமியற்கையாய் விளியேற்கும். எ - று. அண் மைக்கண்விளிகொள்வதனையண்மைச்சொலென்றார். நமபிவாழி - வேந்துவா ழி-நங்கைவாழி - கோவாழி - எனவரும். (௧0)

௧௨அ. னரலளவென்னு மந்நான் கென்ப, புள்ளியிறுதி விளி கொள்பெயரே.

உயிரீற்றுயர்திணைப்பெயர் விளியேற்குமாறுணர்த்தி யினிப்புள்ளியீற்று யர்திணைப்பெயர் விளியேற்குமாறுணர்த்துகின்றார். புளளியீற்றுயர்திணைப்பெ யானரலளவென்னு மந்நான்கீற்றவெனறுசொலலுவராசிரியர். எ - று. னர லளவென்னுமொற்றையீருக்வுடையசொலலை னரலளவென்றார். (௧௧)

௧௨௯. ஏனைப்புள்ளி யீறுவிளிகொள்ளா.

அந்நான்குமலலாதபுள்ளியீற்றுப்பெயர் விளிகொள்ளா. எ - று. ஈண்டு மவிளிகொள்ளாவென்றதனுற்பயன் கூறப்பட்ட புள்ளியீறுபிறவாற்றான்விளி கொள்வனவுளவென்பதுணர்த்துதலாம். பெணடிர் - பெண்டிரோ - எ-ம், தம் முன் - தம்முனு - எம் வரும. பிறவுமன்ன. விளங்குமணிக் கொடும்பூணாஅ யெனவேனைப்புள்ளி சிறுபானமைவிளியேறறலுங்கொள்க. (௧௨)

௧௩0. அவற்றுள், அன்னெனிறுதியாவாகும்மே.

அவற்றுளனனென்னும்னகரவீறுவாய்விளியேற்கும். எ - று. சோழன்- சோழா - சேர்ப்பன் - சோப்பா - எனவரும். (௧௩)

௧௩௧. அண்மைசசொலலிற் ககரமாகும்.

அண்மைவிளிக்கணன்னீறகரமாய்விளியேற்கும். எ - று. துறைவன் - துறைவ, ஊரன் - ஊர - எனவரும். (௧௪)

௧௩௨. ஆனெனிறுதியியற்கையாகும்.

ஆனென்னும்னகரவீறியல்பாய்விளியேற்கும். எ-று. சேரமான் - மலைய மானென்பனகூவுதற்கண்ணு மவ்வாறுநிற்றல்கண்டுகொள்க. (௪௫)

௧௩௩. தொழிலிற்கூறுமானெனிறுதி, யாயாகும்மே விளிவயி
னான.

தொழிலா னொருபொருளைச்சொல்லு மானீற்றுப்பெயர் விளிக்கணாயா ம். எ- று. வந்தான் - வந்தாய், சென்றான் - சென்றாய் - எனவரும். விளியதி காரமாகலான் விளிவயினானவெனல்வேண்டாவெனிற் சொல்லில்வழியதுய்த் துணர்வதென்றமறுக்க. (௧௬)

௧௩௪. பண்புகொள்பெயரு மதனோரற்றே.

ஆனீற்றுப்பண்புக்கானபெயருமவ்வீற்றுத் தொழிறபெயர்போலவாயாய் விளியேற்கும். எ - று. கரியான்-கரியாய், செய்யான்-செய்யாய்-எனவரும்.

௧௩௫. அளபெடைப்பெயரே யளபெடையியல.

ஆனீற்றளபெடைப்பெயரிகரவீற்றளபெடைப்பெயரேபோல மூன்றுமாத் திரையினீண்டியல்பாய்விளியேற்கும். எ-று. உழாஅஅன், கிழாஅஅன்- எ-ம்- வரும். அளபெடை மூன்றுமாத்திரையினீண்டிசைத்தலாகிய விகாரமுண்டேனும யானுனென்னிறுதியியற்கையாகுமென்புழியடங்காமையறிக. (௧௭)

௧௩௬. முறைப்பெயர்க்கிளவி யேயொடுவருமே.

னகரவீற்றுமுறைப்பெய ரேகாரம்பெற்றுவிளியேற்கும். எ - று. மகன்- மகனே, மருமகன் - மருமகனே - எனவரும். (௧௮)

௧௩௭. தானென்பெயருஞ் சுட்டுமுதற்பெயரும், யானென்பெ
யரும் வினாவின்பெயரு, மன்றியனைத்தும் விளிகோ
ளிலவே.

தானென்னும்பெயரு மவனிவனுவனென்னுஞ் சுட்டுமுதற்பெயரும் யா னென்னும்பெயரும்யாவனென்னும்வினாப்பெயருமாகியவவ்வனைத்தும் னகர றேயாயினும் விளிகொள்ளா எ - று. (௨0)

௧௩௮. ஆருமருவு மீரொடுசிவணும்.

நிறுத்தமுறையானே ரகாரவீறுவிளியேற்குமாறுணர்த்துகின்றார். ரகார ற்றுள் ஆர், அர்- எனநின்றவிரண்டுமீராய்விளியேற்கும். எ - று. பார்ப்பார்- ார்ப்பீர், கூத்தர் - கூத்தீர்-எனவரும். (௨௧)

**கங௬. தொழிற்பெயராயி னேகாரம்வருதலும், வழுககின்றெ ன்மனார் வயங்கியோரே.**

மேற்கூறியவிரண்டீற்றுத்தொழிற்பெயர்க்குமீரோடேகாரம்வருதலுங்கு ற்றமின்று. எ - று. வநதார் - வநதீரோ, சென்றா - சென்றீரோ- எனவரும். அ ரீஈற்றுத்தொழிற்பெயர்வந்தவழிக்கண்டுகொள்க. ஏகாரம்வருதலும் வழுக்கி ன்றென்றதனு னேகாரம்பெறாதீரொடுசிவணலேபெரும்பானமையென்பதாம.

**கச0. பண்புகொள்பெயரு மதனோரற்றே.**

அவ்விரண்டீற்றுப் பண்புகொள்பெயரு மவ்வீற்றுத தொழிறபெயர்போ ல வீரொடுசிவணியுஞ் சிறுபான்மையீரொ டேகாரமபெறறும் விளியேற்கும் எ - று. கரியார் - கரியீர், இளையர் - இளையீர் - எ - ம், கரியீரோ - இளையீரோ - எ - ம்-வரும். (உ௩)

**கசக. அளபெடைப்பெயரே யளபெடையியல.**

ரகாரவீற்றளபெடைப்பெயர் முறகூறிய வளபெடைபபெயரோபோல மூன்றுமாத்திரையின்மிக் கியல்பாய் விளியேற்கும் - எ - று. சிரூஅஅர் - மகாஅஅர்-எனவரும். (உச)

**கசஉ. சுட்டுமுதற்பெயரே முற்கிளந்தன்ன.**

அவர், இவர், உவர் - எனவரும் ரகாரவீற்றுச் சுட்டுபபெயா ணகாரவீற றுச் சுட்டுப்பெயரோபோல விளிகொள்ளா - எ - று. (உரு)

**கச௩. நும்மின்றிரிபெயர் வினாவின்பெயரொன், றம்முறையிர ண்டு மவற்றியல்பியலும்.**

நும்மின்றிரிபாகியநீயிரும் வினாவினபெயராகியயாவரு மிரண்டு மேற கூறிய சுட்டுப்பெயரோபோல விளியேலா - எ - று. நீயிரென்பதனை நும்மென த்திரியாது நும்மென்பதனை நீயிரெனத்திரிபபினு மிழுக்காதென்னுங் கருத்தா னெழுத்தோத்தி னும்மெனநிறுத்தித்திரித்தாராகலா னதுபறறிநீயிரென்பதனை நும்மின்றிரிபெயரென்றார். (உசு)

**கசச. எஞ்சியவிரண்ட னிறுதிப்பெயரே, நின்றவீற்றய னீட டம்வேண்டும்.**

நிறுத்தமுறையானே லகாரளகார வீறறுப்பெயா விளியேற்குமாறுணா த்தியவெடுத்துக்கொண்டார். உணர்த்தாதுநின்ற லகாரளகாரமென்னு மிரண் டுபுள்ளியை யிறுதியாகவுடைய பெயரீற்றயலெழுத்து நீண்டு விளியேற்கும் - எ - று. உ - ம் - குரிசில் - குரிசீல், மக்கள் - மக்காள் - எனவரும். (உஎ)

**கச௫. அயனெடிதாயி னியற்கையாகும்.**

றறயலெழுத்து நெட்டெழுத்தாயி னியல்பாய்விளியேற்கும் - எ - று. பெண்பால், கோமாள். எனவரும். (உஅ)

கசசா. வினையினும்பண்பினும், நினையத்தோன்று மாளெனிறு தி, யாயாகும்மே விளிவயினான.

வினையின்கண்ணும் பண்பின்கண்ணும் வருமாளீற்றுப்பெயரியல்பாய் வி ரியாகா தாயாய்விளியேற்கும் - எ - று. நின்றாள் - நின்றாய் - எ - ம், கரியா ள் - கரியாய் - எ - ம் - வரும். விளிவயினானவென்பதனை முன்னும்பின்னுந் த குவனவற்றொடுகூட்டுக. (உகூ)

கசஎ. முறைப்பெயர்க்கிளவி முறைப்பெயரியல.

ளகாரவீற்றுமுறைபபெயர் னகாரவீற்றுமுறைப்பெயரேபோல வேகார மபெற்றுவிளியேற்கும் - எ - று. மகள - மகளே, மருமகள் - மருமகளே - எனவரும். (௩0)

கசஅ. சுட்டுமுதற்பெயருமு வினாவின்பெயரும், முற்கிளந்தன் ன வென்மனார்புலவர்.

அவளிவளுவளென்னும் ளகாரவீறறுச் சுட்டுமுதறபெயரும் யாவளென் னுமவினாப்பெயரு மேற்கூறிய சுட்டுப்பெயரும் வினாப்பெயரும்போல விளி கொள்ளா - எ - று. (௩க)

கசகூ. அளபெடைப்பெயரோ யளபெடையியல.

லகாரளகாரவீற் றளபெடைப்பெயர் மேற்கூறிய வளபெடைப்பெயரோ போல வளபுநீண் டியல்பாய்விளியேற்கும்- எ - று. மாஅஅல், கோஒஒள்-என வரும். இவையளபெடைப்பெயராயின்மால்கோளெனவளபெடையின்றி வரு வனசெய்யுளோக்கியளபுசுருங்கிவந்தனவாம். இவையளபெடைப்பெய ரல்லு வாயி னளபெடைபபெயர் வநதவழிக்கண்டுகொள்க. (௩உ)

கரு0. கிளந்தவிறுதி யஃறிணைவிரவுப்பெயர், விளம்பியநெறிய விளிக்குங்காலை.

உயர்திணைப்பெயருமுயர்திணைவிரவுப்பெயரும் விளிகொள்ளுமாறுணர்த் தியினியஃறிணைவிரவுப்பெயர் விளிகொள்ளுமாறுணர்த்துகின்றார். கிளந்தவி றுதியாவன உயிரீறுநான்கும் புள்ளியீறுநான்குமாகும். அவற்றையிறுதியாக வுடையவஃறிணைக்கண்வரும் விரவுப்பெயர் முற்கூறியநெறியான் விளியேற் கும். எ - று. சாத்தி - சாத்தீ, பூண்டு - பூண்டே, தந்தை - தந்தாய், எ-ம், சா த்தன் - சாத்தா, கூநதல் - கூந்தால், மக்கள் - மக்காள், எ-ம்-வரும். சாத்தி, பூண்டு, தந்தை, சாத்தனைவண்மைவிளியாய்வருவனவுங்கொள்க. ஓகாரவீறு மாகாரவீறுமாய்வருவனவிரவுப்பெயருளவேற்கொள்க. பிறவுமன்ன. (௩௩)

கரு௧. புள்ளியுயிரி றியாகிய, வஃறிணைமருங்கி னெல்லாப்பெயரும், விளிநிலைபெறூஉங் காலந்தோன்றிற்,றெளிநிலையுடைய வேகாரம்வரலே.

புள்ளியீறுமுயிரீறுமாகிய வஃறிணைப்பெயரெல்லாம் விளிகொள்ளுங்காலந்தோன்றி னேகாரம்பெறுதலைத்தெற்றெனவுடைய. எ-று. மரம்- மரமே, அணில் - அணிலே, நரி - நரியே, புலி - புலியே - எனவரும். அஃறிணைப்பெயருள்விளிகேட்குமொருசார்விலங்கின் பெயரும் விளிகொளாதனவற்றைக்கேட்பனவாகச்சொல்லுவார்கருதியவாற்றான்விளியேற்பனவுமல்லதொழிந்தபெயரெல்லாம் விளியேலாமையின் விளிநிலைபெறூஉங்காலந்தோன்றினென்றார். அதனானேசுட்டுப்பெயர்முதலாயினவிளியேலாமையுங்கொள்க. தெளிநிலையுடைய வேகாரம்வரலேயென வேகாரம்பெற்றுவிளியேற்றலையாப்புறுப்பவே யாப்புறவின்றிச் சிறுபான்மை பிறவாற்றான்விளியேற்பனவுமுளவென்பதாம். அவை வருந்தினை வாழியென்னெஞ்சம், கருங்கால்வெண்குருகொன்றுகேண்மதி, காட்டுச்சாரோடுங்குறுமுயால், ஒண்டுவிநாராய் - என்றாற்றொடக்கத்தன.(௩௪)

கரு௨. உளவெனப்பட்டவெல்லாப்பெயரு, மளபிறந்தனவே விளிக்குங்காலை, சேய்மையினிசைக்கும் வழக்கத்தான.

உயர்திணைக்கண்ணுமஃறிணைக்கண்ணும் விளியேற்பனவாகச் சொல்லப்பட்டவெல்லாப்பெயருமவிளிக்குமிடத்துத் தமாத்திரையி னிறந்திசைத்தனவாஞ்சேய்மைக்கணொலிக்கும்வழக்கின்கண். எ-று. நம்பீஇ, சாத்தாஅ-எனவரும். அளபெடைமிகூஉமென்றமையானளபெடைப்பெயரொழித்து நின்றபெயர்கொள்க. அளபிறந்தனவென்றதுநெட்டெழுத்தள பெடையாயுமளபெடைமூன்றுமாத்திரையினிறந்துசேய்மைக்குத் தக்கவாறுநீண்டிசைக்குமென்றவாறு. சேரமான், மலையமான்- என்னுமீற்றயலளபிறந்தவழி யியல்புவிளியெனுதீற்றயனீண்டதாகக்கொள்க. அளபிறப்பனவெழுத்தாதலி னொற்றுமைநயத்தாற்பெயரளபிறந்தனவென்றார். (௩௫)

கரு௩. அம்மவென்னு மசைச்சொனீட்ட, மம்முறைப்பெயரொடு சிவணாதாயினும், விளியொடுகொள்ப தெளியுமோரே.

அம்மவென்னு மசைச்சொல்லினதுநீட்டம் விளிகொள்ளும்பெயரொடு தோன்றா திடைச்சொல்லொடுதோன்றிற்றாயினும்விளியாகக்கொள்வர் தெளிவோர். எ-று. அம்மாசாத்தா. எனவரும். சாத்தாவென்பதேயெதிர்முகமாக்குமாயினு மம்மாவென்பதுமவ்வெதிர்முகமாக்குதலே குறித்துநிற்றலின்விளியாகக்கொள்ளப்படுமென்பார் விளியொடுகொள்பவென்றார். (௩௬)

கரு௪. தநநு எ என வவைமுதலாகித்,தன்மைகுறித்த னரளவெனிறுதியு, மன்னபிறவும் பெயர்நிலைவரினே, யின்மைவேண்டும விளியொடுகொளலே.

தநநு என்னுமுயிர்மெய்களையும், எ என்னுமுயிரையுமுதலாக வுடையவா யொருவனது கிழமைப்பொருண்மையைக்குறித்துநின்ற னரளவென்னுமூன் றுபுள்ளியையிறுதியாகவுடையசொல்லு மவைபோல்வனபிறவுமாகியபெயர் ச்சொல்வருமாயின் விளியொடுபொருந்துதலில. எ - று. தமன், தமர், தமள், நமன், நமர், நமள், நுமன், நுமர், நுமள், எமன், எமர், எமள்-எ-ம், தம்மான், தம்மார், தம்மாள். நம்மான், நம்மார், நம்மாள். நும்மான், நும்மார், நும்மா ள், எம்மான், எம்மார், எம்மாள்-எ-ம்வரும். அன்னபிறவுமென்றதனான்மற்றை யான், மற்றையார், மற்றையாள், பிறன். பிறர். பிறள்- எனவருவனகொள்க. அஃதேலிவற்றைத்தற்கிழமைக்கண்ணாத்தாதிணைக்கூறிய தென்னையெனினிவ ற்றையீற்றகத்துணர்த்தின் மூன்றுசூத்திரத்தானுணர்த்தல்வேண்டுதலிற் சூத் திரம்பல்குமதனானுணர்த்தாராயினர். அஃதேலுயர்திணை யதிகாரத்துப்பி ன்வைக்கவெனின் ஆண்டுவைப்பின விளமபியநெறியவிளிகருஞ்சாலேயென்னு மாட்டே றினிதுபெ ருள்கொள்ளாதா மதனாற்பிறிதிடமின்மையினீண்டுவை த்தாரொன்பது. (கஎ)

நான்காவது

விளிமரபு - முற்றிற்று.

ஐந்தாவது

# பெயரியல்.

கருரு. எல்லாச்சொல்லும் பொருள்குறித்தனவே.

நான்குசொல்லும்பொதுவகையானுணர்த்திபொதுவிலக்கணமாதலொ ப்புமையானும வேற்றுமை பெயரொடியைபுடைமையானும் பெயரிலக்கணத் திற்கும் பொதுவிலக்கணத்திற்கு மிடைவேற்றுமையிலக்கணமுணர்த்தி யினி ச்சிறப்புவகையா னான்குசொலலுமுணர்த்துவானெடுத்துக்கொண்டிவ்வோத் தானவற்றின்முதற்கண்ணதாகிய பெயரிலக்கணமுணர்த்துகின்ற ரதனானிது பெயரியலென் றும்பெயர்த்தாயிற்று. (எல்லா - னவேயென்றது) பெயர்ச்சொ ல்லும் வினைச்சொல்லு மிடைச்சொல்லு முரிச்சொலலுமாகியவெல்லாச்சொ ல்லும்பொருள்குறித்தனவே பொருளகுறியாதுநில்லா. எ - று. ஆயிருதிணை யினிசைக்குமென்றதனானிதுபெறபபடுதலி னிச்சூத்திரம்வேண்டாவெனின்அ ற்றன்றுசொல்லிசைக்கும் பொருளாவன விவ்விரண்டுதிணையுமே பிறிதில்லை யென்பதல்லது சொல்லெல்லாம்பொருளுணர்த்துதன்மாலையவேயுணர்த்தாத னவில்லையென்னும்யாப்புற வதனாற்பெறபபடாமையினசைநிலைமுதலாயினவு ம்பொருள்குறித்துநிற்குமென வையமறுத்தற் கிச்சூத்திரம்வேண்டுமென்ப து. அசைநிலைமுதலாயினபொருளுணர்த்துமாறு மேலேகூறிப்போந்தாம். மு யற்கோடு, யாமைமயிர்க்கம்பலம் என்பனபொருளுணர்த்தாவாலெனின்அவை தொடர்மொழியாகலானீண்டைக்கெய்தாவென்பது. அஃதேற்றொடர்மொழி

தாம்பொருள்குறியாதுவருமோவெனின்வாரா. அவைமெய்ப்பொருள் குறிப்பனவும் பொய்ப்பொருள்குறிப்பனவுமெனவிருவகைப்படும்; அவற்றுள்பொய்ப்பொருள் குறிப்பனவும் பொருளுணர்த்துவனவேயாம். அல்லாக்கால் இல்லோன்றலைவனாகவருந்தொடர்நிலைச்செய்யுள் பொருளுணர்த்தாமையி னவை புலவராற் கொள்ளப்படாவாமென்பது. அஃதேலிச்சூத்திரமுதலாக வைந்து சூத்திரத்தாற் கூறப்பட்டன பொதுவிலக்கணமாகலா னிவற்றை யீண்டுவையாதுகிளவியாக்கத்துளவைக்கவெனின இவை பொதுவிலக்கணமேயெனினு மாண்டுக்கூறப்பட்டனவழூஉக்காத்தலும்வழூஉக்காத்தற்குபகாரமுடையனவு மன்றேயெல்லாச்சொல்லும்பொருள்குறித்தனவென வையமகற்றலுஞ்சொற்பொருளினைத்துப்பாகுபடுமென்றலுஞ் சொல்லினைத்தென்றலுமெனவழூக்காத்தலும்வழூக்காத்தற்குபகாரமுடையனவுமன்மையா னுண்டுணர்த்தாது பொருள்வேறுபாடுபற்றிச்சிறப்புவகையா னன்குசொல்லுமுணர்த்துங்கா லவையுணர்த்தியல்லதுணர்த்தலாகாமையி னவற்றையீண்டுணர்த்தினாரென்பது. பொருள்வேறுபாடுபற்றிச்சொல்லுணர்த்துமாறுமுன்னர்க்காணப்படும். (க)

கருஉ. பொருண்மைதெரிதலுஞ் சொன்மைதெரிதலுஞ், சொல்லினாகு மென்மனார்புலவர்.

தன்னின்வேறாகியபொருளறியப்படுதலும் பொருளறியப்படாதச்சொற்றானேயறியப்படுதலுமிரண்டுஞ்சொல்லானாமென்றுசொல்லுவர்புலவர். எ-று. சாத்தன்வந்தான, பண்டுகாடுமன், உறுகால் - என்பனவற்றுள் பொருளுணரப்பட்டவாறும், நீயென்கிளவி, செய்தெனெச்சம், தஞ்சக்கிளவி, கடியென்கிளவி-என்பனவற்றுட் பொருளுணரப்படாதச்சொற்றாமேயுணரப்பட்டவாறுங்கண்டுகொள்க. ஆயிருதிணையி னிசைக்குமன்சொல்லே. எல்லாச் சொல்லும் பொருள்குறித்தனவே - ஈறுபெயர்க்காகுமியற்கையவென்ப - என்புழிச்சொல்லென்னுஞ்சொல்லும் பெயரொன்னும்பெயருமறியப்படுதற்கட்சொன்மைதெரிதலாமேனைச்சொல்லுமேனைப்பெயரு மறியப்படுதற்கட்பொருண்மைதெரிதலாமதனானுண்டுச்சொன்மைதெரிதலும் பொருண்மைதெரிதலு மொருங்குவநதனவெனப்படும். அல்லாக்காற்சொல்லென்னுஞ்சொற்பொருளுணர்த்துதலும் பெயரொன்னும்பெயரிறுதியுருபுவருதலும் பெறப்படாவாமென்பது. மேலைச்சூத்திரத்தாற்சொற்கள் பொருளுணர்த்துமென்பதுபெறப்பட்டமையாற்றானும் பிறிதுமெனப்பொருளிரண்டுவகைப்படுமெனவதனதுபாகுபா டுணர்த்தியவாறு. இதனாற்பயன்சொற்றன்னையுணரநின்றவழியுஞ்சொல்லேயாமெனவையமறுத்தலாம். (உ)

கருஎ. தெரிபுவேறுநிலையலுங் குறிப்பிற்றோன்றலு, மிருபாற்றென்ப பொருண்மைநிலையே.

மேற்கூறப்பட்டபொருண்மைதெரிதல்சொன்மாத்திரத்தான்விளங்கிவேறுநிற்றலுஞ்சொன்மாத்திரத்தாற்றோன்றாது சொல்லொடுகூடிய குறிப்பாற்றோன்றலுமென விரண்டுகூற்றையுடையதென் று கூறுவராசிரியர். எ - று.

உ-ம்-அவன் - இவன் - உவன் - வந்தான் - சென்றான் - என்றவழிப் பொருடெரிபுவேறுநின்றன. ஒருவர்வந்தாரென்றவழி யாண்பால்பெண்பாலென்பதூஉம், சோறுண்ணுநின்றான் சுற்கறித்துநன்கட்டாயென்றவழித் தீங்கட்டாயென்பதூஉங்குறிப்பிற்றோன்றின. கடித்தின்றான்-தெங்குதின்றான்-எனப்பிறிதின்பெயராற்பிறிதுபொருடோன்றலுங் குறிப்பிற்றோன்றலாம். தின்றானென்னுந் தொழிலொடு முதற்பொருளியையாமையினதனோடியையுஞ் சினைப்பொருடொடராற்றலாற் பெறப்பட்டமையாற் குறிப்பிற்றோன்றலாகாதெனின் அற்றன்று அவ்வியையாமை சொல்லுவான்குறிப்புணர்தற்கேதுவாவதல்லது முதற்பெயரைச் சினைப்பொருட்டாக்கு மாற்றலின்றாகலா னதுவுங்குறிப்பிற்றோன்றலேயாமென்க. பிறவுமன்ன. இளைதாகமுண்மரங்கொல்கசுளைஞர் கைகொல்லுங்காழ்த்தவிடத்து என்னுந்தொடர்மொழியா னிலைபெற்றபின்களையலுறிற் களையலுற்றாரை யவர்தாநகொலவ ரதனாற்றீயாரையவர்நிலைபெறாக் காலத்தே களைகவென்னும்பொருள்விளங்குசலுங்குறிப்பிற்றோன்றலாம்.அவ்வணியிலக்கணங்கூறுவா ரின்னோ ரன்னவற்றைப் பிறிதுமொழிதலென்பதோரணியென்ப. (ந)

கருஅ. சொல்லெனப்படுப பெயரேவினையென், றாயிரண்டென்ப வறிந்திசினோரே.

சொல்லாவனபெயர்சசொல்லும வினைச்சொல்லுமென விரண்டென்று சொல்லுவரறிந்தோர் - எ - று. பெயர்ச்சொற்கிலக்கணம் வேற்றுமையோத்தினுட்கூறினார். வினைச்சொற்கிலக்கணம் வினையியலுட்கூறுப. பிறசொல்லுமுளவாயினு மிவற்றதுசிறப்புநோக்கிப் பெயரேவினையென் றாயிரண்டென்பவென்றார். இவற்றுள்ளும் பொருளதுபுடைபெயர்ச்சியாகியதொழில்பற்றாதப் பொருள்பற்றிவருஞ் சிறப்புடைமையாற் பெயரைமுற்கூறினார். (ச)

கருகூ. இடைச்சொற்கிளவியு முரிச்சொற்கிளவியு, மவற்றுவழிமருங்கிற் றோன்றுமென்ப.

இடைச்சொல்லு முரிச்சொல்லும்பெயரையும் வினையையுஞ்சார்ந்துதோன்றும் - எ - று. அவற்றுவழிமருங்கிற்றோனறு மென்றாரேனும் பெயரையும் வினையையுஞ்சார்ந்து தோன்றுமிவ்விரண்டையு மவற்றொடுதலைபெய்யச் சொன்னனகாமென்பது கருத்தாகக்கொளக. சார்ந்துதோன்றுமெனவே யவற்றது சிறப்பின்மைபெறப்படும். வழக்குப்பயிற்சிநோக்கி யிடைச்சொன் முற்கூறினார். (டு)

ககூ0. அவற்றுள், பெயரெனப்படுபவை தெரியுங்காலை, யுயர்திணைக்குரிமையு மஃறிணைக்குரிமையு, மாயிருதிணைக்குமோரன்னவுரிமையு, மம்மூவுருபின தோன்றலாறே.

பொருள்வேறுபாடுபற்றிச் சிறப்புவகையா னான்குசொல்லுமுணர்த்தற குபகாரமுடைய பொதுவிலக்கணமுணர்த்தி நிறுத்தமுறையானே யினிப்

பெயர்ச்சொலுணர்த்துகின்றார். மேற்கூறப்பட்ட நால்களுட்பெயரொன்றுசொல்லப்படுவன வுயர்திணைகருரியவாய்வருவனவு மஃறிணைக்குரியவாய் வருவனவு மிரண்டுதிணைக்குமொத்த வுரிமையவாய்வருவனவு மூன்றுவேறுபாட்டனவாந் தோனறுநெறிக்கண் - எ - று. (சா)

கசாக. இருதிணைப்பிரிந்த வைம்பாற்கிளவிக்கு, முரியவையுரிய பெயர்வயினான.

இருதிணைப்பிரிந்த வைம்பாற்கிளவியாதற்குப் பெயருளுரியனவுரியவாம் - எ - று. அவன் - பெண்மகன் - சாத்தன்- எனனகரவீ றுடேஉவிற்குமகடூஉவிற்குமஃறிணை யாண்பாற்கு முரித்தாய்வருதலானும், அவள்-மக்கள் - மகள்-எனளகரவீறு மகடூஉவிற்கும் பல்லோர்க்கு மஃறிணைப்பெண்பாற்கு முரித்தாய்வருதலானும், பெண்டாட்டி - நம்பி - எ - ம், ஆடூஉ - மகடூஉ - எ - ம்-இகரவீறு முகாரவீறு மிருபாற்குமுரியவாய்வருதலானும் வினைச்சொற்போலவின்னவீ றின்னபாற்குரித்தெனப் பெயர்ச்சொலீறுபற்றி யுணர்த்தலாகையினுரியவையுரியவென்றார். பிறவுமன்ன. பல்குறமென்றஞ்சி யின்னபெயரின்னபாற்குரித்தெனக் கிளந்தோதாராயினார். அஃதேலிவற்றறுபாற்குரிமை யெற்றாற்பெறுதுமெனின் உரியவையென்றது வழக்கின்கட் பாலுணர்த்துதற்குரியவாய் வழங்கபபடுவனவென்றவாறன்றே யதனான்வழக்குநோக்கிக் கொள்ளப்படுமென்பது. மறறுநஞ்சுண்டான்சாமென்ப தொருபாற்குரிய சொல்லாயினு நஞ்சுண்டாள்சாம் - நஞ்சுண்டார்சாவர் - நஞ்சுண்டதுசாம் - நஞ்சுண்டனசாம் - என ஏனைப்பாற்குமுரித்தாமச்சொல்லென விப்பொருண்மையுணர்த்துகின்ற திச்சூத்திரமென்றாரா லுரையாசிரியரெனின் நஞ்சுண்டல் சாதறகுக்காரணமென்பான் ஒருபான்மேல்வைத்து நஞ்சுண்டான் சாமென்றதல்ல தாண்டுத்தோன்று மாண்மையுமொருமையுஞ் சாதற்குக்காரணமென்னுங் கருத்தினனல்லன் அதனாற் சொல்லுவான் கருத்தொடுகூடிய பொருளாற்றலாற் சாதலேனைப்பாற்குமொக்குமெனச் சொல்லிலக்கணத்திற் கூறப்படாமையா னாசிரியரொருபாறகிளவி யேனைப்பாற்கண்ணும் வருவனதாமே வழக்கெனமொழிபவென விப்பொருண்மைபொருளியலிற் கூறினாராகலி னிச்சூத்திரத்திற் கஃதுரையாத லுரையாசிரியர் கருத்தன்றென்க. அல்லதூஉம் பார்ப்பான் கள்ளுண்ணானென்றவழிக் கள்ளுண்ணாமைசாதிபற்றிச் சொல்லுவதொன்றாகலிற பார்ப்பனிக்கும் பார்ப்பாருக்குமல்லது பிறசாதியார்க்கு மஃறிணைக்குஞ்செல்லாமையி னைம்பாற்கிளவிக்கு முரியவென்றல் பொருந்தாமையானு மவர்க்கதுகருத்தன்மையறிக. (எ)

கசாஉ. அவ்வழி, அவனிவனுவனென வரூஉம்பெயரு, மவளிவளுவளென வரூஉம்பெயரு, மவரிவருவரென வரூஉம்பெயரும், யான்யாநாமென வரூஉம்பெயரும், யாவன் யாவள் யாவரென்னு, மாவயின்மூன்றோ டப்பதினைந்தும், பாலறிவந்த வுயர்திணைப்பெயரே.

மூவகையவாகமேற் சொல்லப்பட்டபெயருள்அவனென்பதுமுதலாகயாவ
ரென்ப தீறாகச்சொல்லப்பட்ட பதினைந்தும் பால்விளங்கிற்கு முயர்திணைப்
பெயர். எ-று. யான் - என்பது ஒருவனொருத்தியென்னும் பகுதிபுணர்த்தாதா
யினு மத்திணையொருமை புணர்த்தலிற பாலறிவந்தபெயராம் அல்லதூஉம்பாலறி
வந்த வெனப்பன்மை புறறிக்கூறினொன்றினுமமையும். (ரு)

கசுங. ஆண்மையடுத்த மகனென்கிளவியும், பெண்மையடுத்த
மகளென்கிளவியும், பெண்மையடுத்த விகரவிறுதியு,
நம்மூர்ந்துவரூஉ மிகரவைகாரமு, முறைமைசுட்டா மக
னுமகளு, மாந்தர்மக்க ளென்னும்பெயரு, மாடூஉமக
டூஉவாயிருபெயருஞ், சுட்டுமுதலாகியவன்னுமானு,மவை
முதலாகிய பெண்டென்கிளவியு, மொப்பொடுவரூஉங்
கிளவியொடு தொகைஇ, யப்பதினைந்து மவற்றோரன்ன.

இப்பெயர் பதினைந்துமேற கூறப்பட்டனபோலப்பாலறிவந்த வுயர்திணைப்
பெயராம். எ-று. ஆண்மையடுத்த மகனென்கிளவி ஆண்மகனென்பது. ஒற்
றுமைநயத்தானாண்மை யுணர்த்துஞ்சொல்லை யாண்மையென்றார். இதுபெண்
மையடுத்த வென்புழியுமொக்கும். பெண்மையடுத்தமகளென்கிளவியும் பெண்
மையடுத்த விகரவிறுதியுமாவன- பெண்மகள்- பெண்டாட்டி - என்பன. நம்
மூர்ந்துவரூஉமிகரமுமைகாரமுமாவன - நம்பி - நங்கை - என்பன. நமக்கின்
னாரென்னும் பொருள்படவருதலி னம்மூர்ந்துவருமென்றார். அவைநம்மென்ப
துமுதனிலையாக வப்பொருளுணர்த்தாவாயி னம்மூர்ந்துவருமிகரமு நம்மூர்ந்
துவருமைகாரமு மெனப்பிரித்துக்கூறல் வேண்டுமென்பது. இவையுயர்சொல்
முறைமைசுட்டாமகனுமகளுமாவன-முறைப்பெயரன்றி மகன்மகளெனவாடூஉ
மகடூஉவென்னுந் துணையாயவருவன. மாந்தர்மக்களென்பன பன்மைப்பெயர்.
ஆடூஉமகடூஉவென்பனமேற்சொல்லப்பட்டன. சுட்டுமுதலாகியவன்னுமானுமா
வன - அவ்வாளன் - இவ்வாளன் - உவ்வாளன் - அம்மாட்டான் - இம்மாட்டா
ன்- உம்மாட்டான் - என்பன. இவற்றுளாணீ றிக்காலத்துப் பயின்றுவாரா.
அவைமுதலாகிய பெண்டென்கிளவியிக்காலத்துவிழுந்தனபோலும். பெண்ட
ன்கிளவியென்று பாடமோதி அவையாவன - அவ்வாட்டி-இவ்வாட்டி - உவ்வா
ட்டி - என்பாருமுளர். ஒப்பொடுவரூஉங்கிளவியாவன - பொன்னன்னன் -
பொன்னன்னாள்- என்னுந்தொடக்கத்தன. இவைமேலனபோலப்பயின்றுவா
ராமையினவற்றொடொருங்குவையாது வேறுகூறினார். (க)

கசுச. எல்லாருமென்னும் பெயர்நிலைக்கிளவியு, மெல்லீருமெ
ன்னும் பெயர்நிலைக்கிளவியும், பெண்மையடுத்த மக
னென்கிளவியு, மன்னவியல வென்மனார்புலவர்.

எல்லாருமெனவு மெல்லீருமெனவும் பெண்மகனெனவும்வரு மூன்றுமேற்
கூறப்பட்டனபோலப்பாலறிவந்தவுயர்திணைப்பெயராம். எ-று. புறத்துப்போய்

வினையாடும் பேதைப்பருவத்துப் பெண்மகளை மாமேருகத்தா ரிக்காலத்தும்பெ ண்மகனென்று வழங்குப. எல்லாருமெல்லீருமென் புழிப் படர்க்கைப்பன்மை யுணர்த்துமாறும்முன்னிலைப்பன்மைபுணர்த்துமீருமும்மையடுத்துவருதலானும் பெண்மகனெனப்பாறிரிதலானுமிவற்றைவேறுகூறினார். (கo)

ககரு நிலப்பெயர் குடிப்பெயர் குழுவின்பெயரே, வினைப்பெ யருடைப்பெயர் பண்புகொள்பெயரே, பல்லோர்க்குறி த்த முறைநிலைப்பெயரே, பல்லோர்க்குறித்த சினைநிலை ப்பெயரே, பல்லோர்க்குறித்த திணைநிலைப்பெயரே, கூ டிவருவழக்கி னுடியற்பெயரே, யின்றிவவொன்னு மெ ண்ணியற்பெயரோ, டன்றியனைத்து மவற்றியல்பினவே.

நிலப்பெயர் முதலாகச்சொல்லப்பட்டனவு மேலனபோலப் பாலறிவந்த வுயர்திணைப்பெயராம். எ - று. நிலப்பெயர் - அருவாளன், சோழியன்—எ ன்பன. குடிப்பெயர்-மலையமான், சேரமான் - என்பன. குழுவின்பெயர் —அ வையத்தார், அத்திகோசத்தார்—என்பன. வினைப்பெயர் - வருவார், செல்வார்- என்பன. தச்சன், கொல்லன்-என்பனவுமவை. உடைப்பெயர் - அம்பர்கிழா ன், பேரூர்கிழான் - என்பன. வெற்பன், சேர்ப்பன்- என்பனவுமவை. பண்பு கொள்பெயர்-கரியான், செய்யான் - என்பன. பல்லோர்க்குறித்த முறைநிலை ப்பெயர்-தந்தையர் - தாயர் - என்பன. பல்லோாக்குறித்தசினை நிலைப்பெயர்- பெருங்காலர், பெருந்தோளர்-என்பன. பல்லோர்க்குறித்ததிணை நிலைப்பெயர்- பார்ப்பார், அரசர், வணிகர், வேளாளர், ஆயர், வேட்டுவர்-என்பன. பல்லோ ர்க்குறித்தவென்று விசேடித்தலா னிம்மூவகைப்பெயரு னொருமைப்பெயரி ரண்டுதிணைக்கு முரியவாம். கூடிவருவழக்கினுடியற்பெயர்-பட்டிபுத்திரர், கங் கைமாத்திரர்என்பன.இவையாடல்குறித்திளையார்பகுதிப்படக்கூடியவழியல்ல து வழங்கப்படாமையிற் குழுவின்பெயரின் வேறுகுழுவின. அக்குழுவின்பெ யரொருதுறைக்கணுரிமை பூண்டபல்லோர்மே லெக்காலத்துநிகழ்வன. இன்றி வவொன்னு மெண்ணியற்பெயராவன - ஒருவர், இருவர், முப்பத்துமூவர்-என்ப ன. இன்றிவவொன்பதித் துணையவொன்னும் பொருட்டுப்போலும். எண்ணுகிய வியல்புபற்றிப்பொருளுணர்த்துதலானெண்ணியற் பெயரென்றார். ஒருநிமித் தம் பற்றிச்சேறலிற் பல்பெயரொருபெயராக வடக்கப்பட்டமையானிலப்பெ யர் முதலாயினவற்றை வேறுகூறினார். அஃதேலொப்பொடு வருஉங்கிளவியும ன்னதாகலினிவற்றெடு வைக்கற்பாற்றெனின் அற்றேனும் வழக்குப்பயிற்சி யின்மையா னவற்றெடுவைத்தாரென்க. (கக)

கககூ. அன்னபிறவு முயர்திணைமருங்கிற், பன்மையுமொருமை யும் பாலறிவந்த, வென்னபெயரு மத்திணையவ்வே.

மேற்சொல்லப்பட்ட பெயர்போல்வனபிறவு முயர்திணைக்கட் பன்மையு மொருமையுமாகியபாலறிவந்த வெல்லாப்பெயரு முயர்திணைப்பெயராம் எ-று.

பாலறிவந்தனவென்று தொருமைப்பாலுணர்த்துவனவு மடங்குதற்குப்பன்மையு மொருமையும்பாலறிவநதவென்றார். அன்னபிறவுமாவன - ஏனாதி, காவிதி, எட்டி, வாயிலான், ஆயிலான், வண்ணத்தான், சுண்ணத்தான், பிறன், பிறள், பிறர், மற்றையான், மற்றையாள்,மறறையார்-என்னுந்தொடக்கத்தன.

கஎ. அதுவிதுவுதுவென வரூஉம்பெயரு, மவைமுதலாகிய வாய்தப்பெயரு, மவையிவையுவையென வரூஉம்பெயரு, மவைமுதலாகிய வகரப்பெயரும்,யாதுயாயாவையென்னும்பெயரு, மாவயின்மூன்றே டப்பதினைந்தும், பாலறிவந்த வஃறிணைப்பெயரே.

நிறுத்தமுறையானே யுயர்திணைப்பெயருணர்த்தி யினி யஃறிணைப்பெயருணர்த்துகின்றார். அதுவிதுவுதுவெனவரூஉம்பெயரும் அப்பெயர்க்குமுதலாகிய சுட்டேமுதலாகவாய்தத்தொடுகூடி அஃது, இஃது, உஃது- எனவரூஉம்பெயரும், அவையிவையுவையெனவரூஉம்பெயரும், அச்சுட்டேமுதலாக - அவ், இவ், உவ் - எனவரூஉம்வகரவீற்றுப்பெயரும், யாது, யா, யாவை- என்னும்வினாப்பெயருமென விப்பதினைந்துபெயரும்பால்விளங்கவரு மஃறிணைப்பெயராம். எ - று. சுட்டுமுதலாகியவாய்தப்பெயரு மவைமுதலாகிய வகரப்பெயருமவையல்லதின்மையினிவ்வாறுகூறினார். (கஎ)

கசஅ. பல்லபலசில வென்னும்பெயரு,முள்ளவில்ல வென்னும்பெயரும், வினைப்பெயர்க்கிளவியும் பண்புகொள்பெயரு, மினைத்தெனக்கிளக்கு மெண்ணுக்குறிப்பெயரு, மொப்பினாகிய பெயர்நிலையுளப்பட, வப்பாலொன்பது மவற்றோரன்ன.

பல்லவென்பது முதலாகக்கூறப்பட்ட வொன்பதுபெயரு மேற்கூறப்பட்ட வஃறிணைப்பெயர்போலப் பாலுணரநிற்கும். எ - று. பல்லபலசிலவுள்ளவில்லவென்னுமைந்துபெயருந்தம்மையுணர்த்திநின்றன. அல்லனபொருளுணர்த்திநின்றன. வினைப்பெயர்க்கிளவியாவன வருவது, செல்வது - என்பன. பண்புகொள்பெயர் கரியது,செய்யது-என்பன. இனைத்தெனக்கிளக்குமெண்ணுக்குறிப்பெயர் ஒன்று, பத்து, நூறு - எனவெண்பற்றியெண்ணப்படும் பொருண்மேனின்றன. ஒப்பினாகியபெயர்நிலையாவது பொன்னன்னது, பொன்னன்னவை - என்பன. முன்னையபோலப் பல்லமுதலாயினவழக்கின்கட்பயின்றுவாராமையின்வேறுகூறினார். பலசிலவென்பனபயின்றவாயினும் பல்லஇல்லஉள்ளவென்பனவற்றொடொப்புமை யுடையவாகலினிவற்றொடுகூறினார்.

கசகூ. கள்ளொடுசிவணு மவ்வியற்பெயரே, கொள்வழியுடைய பலவறிசொற்கே.

கள்ளெனனுமீற்றுெடுபொருநது மஃறிணையியற்பெயர்கள்ளீற்றுெடுபெ ருந்துதற்கட்பலவறிசொல்லாம். எ - று. அஃறிணையியற்பெயராவன-ஆ,நாய், குதிரை, கழுதை, தெங்கு, பலா, மலை, கடல் - என்றுநதொடக்கத்தனவாகிய சாதிப்பெயர். ஒருமைகரும்பன்மைக்கும்பொதுவாய்நிற்றலினியற்பெயரெ ன்ருர். இவைகள்ளென்னுமீறறவாய் ஆக்கள், குதிரைகள்- எனநின்றவழிப்பன் மைவிளக்கலிறபலவறிசொல்லாயினவாறுகண்டுகொள்க. அஃறிணை யியற்பெ யரெனவேபாலறிபெயரோயன்றி யஃறிணைப்பொதுப்பெயருமுளவென்பதுபெ ற்றும. பாறகுரிமைசுட்டாதஃறிணைக்குரிமைசுட்டிய அவ்வியற்பெயரென்ருர்.

களO. அன்னபிறவு மஃறிணைமருங்கிற், பன்மையுமொருமையு
ம் பாலறிவந்த, வென்னபெயரு மத்திணையவ்வே.

மேற்கூறப்பட்டபெயாபோல்வன பிறவுமஃறிணைக்கட்பன்மையு மொரு மையுமாகிய பால்விளங்கவந்தவெல்லாப்பெயருமத்திணைக்குரிய. எ - று.அன னபிறவுமென்றதனுற்கொள்ளபபடுவன - பிறிது, பிற, மற்றையது, மற்றை யன, பல்லவை, சில்லவை, உள்ளது, உள்ளன, இல்லது, இல்லன - என்னும் தொடக்கத்தன. (கசு)

களக. தெரிநிலையுடைய வஃறிணையியற்பெய, ரொருமையும் ப
ன்மையும் வினையொடுவரினே.

கள்ளொடுசிவணுத வஃறிணையியற்பெய ரொருமையும் பன்மையும் விள ங் தந்லையுடைய வதற்கேற்ற வினையொடுதொடர்நதவழி. எ - று. ஆவநதது, ஆவநதன, குதிரைவநதது, குதிரைவநதன - என வினையாற்பால் விளஙகிய வாறுகண்டுகொள்க. இஃதஃறிணைப்பெய ரிலக்கணமாயினும் பொதுப்பெயா வினையொடுவந்து பால்விளங்குத லொப்புமைநோக்கி ஈண்டுவைத்தாரென்ப து. அஃதேற் கள்ளொடுசிவணு மென்பதனையு மீண்டுவைக்கவெனின் இயற் பெயர்முன்ன ராரைக்கிளவிபோலக் கள்ளென்ப தஃறிணையியற்பெயாக் கீழு யொன்றுபட்டு நிற்றலின் வினையானன்றிப்பெயர்தாமே பனமையுணர்த்திய ா மதனுலதனைப் பாலறிவநதபெய ருணர்த்துமதிகாரத்துவைத்தார். (கள)

களஉ. இருதிணைச்சொற்கு மோரன்னவுரிமையிற், றிரிபுவேறு
படூஉ மெல்லாப்பெயரு, நினையுங்காலைத் தத்தமரபின்,
வினையொடல்லது பாறெரிபிலவே.

இருதிணைச்சொல்லாதற்கு மொத்தவுரிமையவாகலி னுயர்திணைக்கட்செ ன்றுழி யுயர்திணைப்பெயராயு மஃறிணைக்கட்சென்றுழி யஃறிணைப்பெயராயும் வேறுபடும் விரவுப்பெயரெல்லா மாராயுங்காற்றத்த மரபின்வினையொ டியை ந்தல்லது திணைவிளங்கநில்லா. எ - று. வினையொடல்லதெனவே திணைக்கே ற்றவாற்று னீறுவேறுபடா தோரீற்றவாய்நிற்றலிற் பெயர்தாமேநின்று தத் தமரபினெனறதனுற் பொதுவினையொடுவந்து திணைவிளக்காவென்பது பெற ப்படும். இனியவைதத்தமரபின் வினையொடு பால்விளக்குமாறு-சாத்தன்வந்

தான்- சாத்தன்வந்தது- முடவன்வந்தான்-முடவன்வந்தது - எனவந்தவாறு கண்டுகொள்க. தத்தமரபின் வினையாவன-உயர்திணைக்கு மஃறிணைக்குமுரிய பதினொ ரீற்றுப்படர்க்கைவினை. எல்லாப்பெயருமென்பதனை ஆறுபோயினா ரெல்லாருங் கூறைகோட்பட்டாரென்பது போலக்கொள்க. இருதிணைக்கும் பொதுவாகியசொல் வினையாற்பொதுமைநீங்கி யொருதிணைச்சொல்லாமென்பது கருத்தாகலின் ஈண்டுப்பாலெனப்பட்டது திணையேயாம். சிறப்புடைப் பொருளைத் தானினிதுகிளத்தலென்பதனாற் றத்தமரபின் வினையொடல்லது பாறெரிபிலவென்றோனுஞ் சாத்தனொருவன், சாத்தனொன்றெனத் தத்தமரபிற் பெயரொடுவந்து பால்விளக்குதலுங்கொள்க. (கஅ)

• கஎங. நிகழூஉநின்ற பலர்வரைகிளவியி, னுயர்திணையொருமை
தோன்றலுமுரித்தே, யன்னமரபின் வினைவயினான.

நிகழ்காலம்பற்றிவரும்பலர்வரைகிளவியா னுயர்திணையொருமைப்பா றோன்றுதலுமுரித் தவ்வொருமைப்பாறோன்றுதற் கேற்றவினையிடத்து. எ-று. பலர்வரைகிளவியென்றது செய்யுமென்னு முற்றுச்சொல்லை. சாத்தன்யாழெழூஉம்- சாத்திசாந்தரைக்கும் - என்றவழியாழெழுதலுஞ் சாந்தரைத்தலுமாகியவினை யஃறிணைக்கேலா தொருவற்கு மொருத்திக்குமேற்றலி னுயர்திணையொருமைப்பால் விளங்கியவாறுகண்டுகொள்க. நிகழூஉநின்றதொழிலையுணர்த்துஞ்சொல்லை வேற்றுமைநயத்தா னிகழூஉநின்ற பலர்வரைகிளவியென்றார். நிகழூஉநின்றவென்றது நிகழாநின்றவென்றவாறு. நடத்தல்,கிடத்தன்முதலாகிய பிறதொழில்பற்றிவரும் பலர்வரைகிளவியா னுயர்திணையொருமை தோன்றாமையி னன்னமரபின் வினைவயினானவென்றார். தோன்றலுமுரித்தென்னு மெதிர்மறையும்மையா னன்னமரபின்வினைக்கட்டோன்றாமையு முரித்தென்றது பலர்வரைகிளவியாற் றோன்றாமையுமுரித்தென்றுகொள்க. அஃதேல் யாழெழுதலுஞ் சாந்தரைத்தலு முதலாகிய தொழில்வேறுபாடுபற்றி வருமுன்னிலைவினையானும்,வியங்கோளானும்,இருவகையெச்சத்தானு மெல்லா முயர்திணைப்பாறோன்றுதலாற் பலர்வரைகிளவியெனவரைந்துகூறல் பொருந்தாதெனின் அற்றன்றுமுன்னஞ்சேர்த்திமுறையினுணர்தலென முன்னிலைப்பெயராற்பாலுணருமாறுமுன்னருணர்த்தப்படுதலானும், அன்னமரபின்வினைபற்றிவரும் வியங்கோ ளேவற்பெருண்மைத்தாகலின் ஏயதுணர்ந்துசெய்யு முயர்திணைசுட்டியல்லது பெரும்பான்மையும் வாராமையா னீண்டன்னமரபின் வினையாற்பாலுணர்தலொருதலையன்றாகலானும், பெயரெச்சத்திற்குமுடிபாகியபெயரும்வினையெச்சமுஞ் சிறுபான்மைபொதுவினைகொண்டவழியல்லது தத்தமரபின்வினைகொண்டவழி யவ்வினையேபால்விளக்கலா னெச்சம்பால்விளக்கல்வேண்டாமையானும் அவையொழித்துப் பலர்வரைகிளவியேவிதந்துகூறினார். இருவகையெச்சத்தானும்,வியங்கோளானுஞ் சிறுபான்மை யுயர்திணைப்பாறோன்ற லொன்றென்முடித்தலென்பதனாற்கொள்க. நிகழ்காலத்துப் பிறசொல்லைநீக்குதற்குப் பலர்வரைகிளவியென்றார். பன்மைவிரவுப்பெயரை நீக்குதற்குநிகழூஉநின்றவென்றார். மேல்விரவுப்பெயர் தத்தமரபின்வினையொ

டல்லது பாறெரிபிலவென்ருர். இனியவற்ருனன்றிப் பொதுவினையானும் பா றெரியநிற்குமென்பதுணர்த்தியவாறு. அஃதேற் சாத்தன்புற்றின்னும், சாத்தி கன்றீனுமெனச்செய்யுமென்னுஞ்சொல்லா னஃறிணைப்பாலுந் தோன்றுதலின் அதுகூருராயிற்றென்னையெனின் எழுதலுமரைத்தலு மஃறிணைக்கென்னுமியை பில்லாதவாறுபோலப் புற்றின்றலுயர்திணைக்கெவ்வாற்ருனு மியைபின்றென படாமையானும், கன்றீனுமென்புழி யீனுமென்றும்வினையானன்றிக் கன்றெனு னுஞ்சார்பானஃறிணைப்பாருேன்றுதலானும், ஒருமைவினையானொருவழி யஃ றிணைப்பாருேன்றினுமநுசிறுபான்மையாகலானுங் கூருராயினுரென்பது.

கஎச. இயற்பெயர்சினைப்பெயர் சினைமுதற்பெயரே, முறைப் பெயாகிளவிதாமேநானே, யெல்லாநீயிர நீயெனக்கிள ந்து, சொல்லியவல்ல பிறவுமா அங், கன்னவைதோன்றி னவற்ரெடுங்கொளலே.

விரவுப்பெயர்பாறெரியநிற்குமாறுணர்த்தியினியவைதமை யுணாத்துவா னெடுத்துக்கொண்டார். இயறபெயாமுதலாக நீயென்பதீருகவெடுத்தச்சொ லப்பட்டனவல்லாத வன்னபிறவுமாண்டுவருமாயிற சொல்லப்பட்டவற்ரெ ங்கூட்டுக-எ-று. இயற்பெயராவன சாத்தன்- கொற்றன்-எனவழங்குதற்பய தவாய்நிமித்தமின்றிப் பொருளைபற்றிவரு மிடுபெயா. இயற்பெயரொனினும் ரவுபபெயரொனிது மொக்கும். ஆயினவற்றி னொருசாரனவற்றிறகப்பெயர்கொ டுத்ததென்னையெனின் அவற்றது சிறப்புநோக்கிஅப்பெயாகொடுத்தார். பாணி யுர்தாளமுமொருபொருளவாயினு மிசைநூலாா தாளசதுளொருசாரனவற்றி ற்குபபாணியென்னும் பெயாகொடுத்தாற்போலவெனபது] சினைப்பெயராவன பெருங்காலன்-முடவன்- எனவச்சினையுடைமையாகிய நிமித்தமபற்றி முதன் மேல்வரும்பெயர். சினைமுதறபெயராவன சீத்தலைசசாததன - கொடும்புறமா ருதி- எனச்சினைப்பெயரொடுதொடர்ந்துவருமுதற்பெயா. சாத்தன் மருதிெ ன்னுமுதற்பெயா சினைப்பெயரொடுதொடர்நதல்லது பொருளுணர்த்தாமைய ற்சினைமுதற்பெயராயின. முறைப்பெயராவன தநதை- தாய-என முறைபற்றி முறையுடைப்பொருண்மேல் வருவன. முறையாவது பிறவியானொருவனெ ாருவற்குவருமியைபு. அல்லனவைநதுந் தம்மையுணாத்தி நின்றவாகலாறறு மென்பதுமுதலாகியசொலலேயாம். பிறவுமென்றதனான் - மக - குழவி- போ ல்வனகொள்க. இவற்றையுயாதிணைப்பெயரொன்ருராலுரையாசிரியரொனின்மா பியலுள் மகவும்பிள்ளையும்பறழும்பாாப்புமவையு மனனவப்பாலான எ - ம், நுஞ்சரம்பெறுமே குழவிப்பெயர்க்கொடை எ - ம், அவை யஃறிணைக்காகல ன்றிக் குழவியுமகவுமாயிரண்டலலவைகிழவவல்லமக்கட்கண்ணே எனவுயா திணைக்குமோதிவைத்தாராகலி னவைவிரவுப்பெயரேயாம்;அதனானதுபோலியு ரையென்க. ஒருநிமித்தத்தானிரண்டுதிணைப்பொருளுணர்த்தலின் விரவுப்பெ யர்பொருடொறுநிமித்தவேறுபாடுடையபலபொருளொருசொலலன்மையறிக.

௧௭௫. அவற்று, ளியற்பெயர் நான்கே சினைப்பெயர், நான்கெனமொழிமனார் சினைமுதற்பெயரே, முறைப்பெயர்க்கிளவியிரண்டாகும்மே, யேனைப்பெயரேதத்தமரபின.

மேற்கூறியவிரவுப்பெயருளியற்பெயருஞ்சினைப்பெயருஞ்சினைமுதற்பெயருமொரோவொன்று நந்நான்காம் முறைப்பெயரிரண்டாம் ஒழிந்தனவைந்துபெயருந்தத்தமிலக்கணத்தனவாம்-எ-று. தத்தமிலக்கணத்தவென்றது பொதுவிலக்கணத்தவல்லசிறப்பிலக்கணத்தவேயாமென்றவாறு.எனவேயவையொரோவொன்றாய்நிற்குமென்றவாறும். ஈண்டுத்தத்தமென்பது அந்நிகரனவெனப்பொதுமைசுட்டாதொரோவொன்றாய்நின்றபெயரைச்சுட்டிநின்றது.தனிப்பெயரைந்தும்விரிப்பெயர்பதினொன்குமாகப் பத்தொன்பதென்றவாறும். கூறப்பட்டபெயரதுபாகுபாடாகிய வொருபொருணுதலுதல்பற்றி யொருசூத்திரமாயிற்று. நான்காய்விரிதலுமிரண்டாய் விரிதலுந்தாமேயாகலுமாகிய பொருள்வேற்றுமையான் மூன்றுசூத்திரமெனினுமமையும். (௨௧)

௧௭௬. அவைதாம், பெண்மையியற்பெய ராண்மையியற்பெயர், பன்மையியற்பெய ரொருமையியற்பெயரொன், றந்நான்கென்ப வியற்பெயர்நிலையே, பெண்மைச்சினைப்பெய ராண்மைச்சினைப்பெயர், பன்மைசசினைப்பெய ரொருமைச்சினைப்பெயரொன், றந்நான்கென்ப சினைப்பெயர்நிலையே, பெண்மைசுட்டிய சினைமுதற்பெயரே, யாண்மைசுட்டிய சினைமுதற்பெயரே, பன்மைசுட்டிய சினைமுதற்பெயரே, யொருமைசுட்டிய சினைமுதற்பெயரொன், றந்நான்கென்ப சினைமுதற்பெயரே, பெண்மைமுறைப்பெய ராண்மைமுறைப்பெயரொன், றாயிரண்டென்ப முறைப்பெயர்நிலையே.

இயற்பெயர்முதலாகிய நான்கன்விரியாகியபதினொன்குமிவையெனவுணர்த்தியவாறு. இவற்றிற்குதாரணமுன்னர்க்காட்டுதும்.இயற்பெயர்முதன்மூன்றுமொரோவொன்றுநான்காய்விரிதலுமுறைப்பெயரிரண்டாகலுமேலைச்சூத்திரத்தாற்பெறப்பட்டமையானநான்குமிரண்டுமாவனவிவையென்பதிச்சூத்திரத்திற்குக்கருத்தாகக்கொள்க. இவ்வாறிடர்ப்படாது தொகைச்சொற்களைப்பயனிலையாகக்கொள்ளவே இச்சூத்திரங்களானவையின்னவென்றலுமித்துணையவென்றலும்பெறப்படுமாகலின் மேலைச்சூத்திரம்வேண்டாவெனின்அற்றன்று இவ்வாற்றான் விரவுப்பெயர்பத்தொன்பதென்னும் வரையறைபெறப்படாமையானும், வகுத்துக்கூறறந்திரவுத்தியாகலானும் அதுவேண்டுமென்பது. (௨௨)

௧௭௭. பெண்மைசுட்டிய வெல்லாப்பெயரு, மொன்றற்குமொருத்திக்கு மொன்றியநிலையே.

மேற்கூறிய பதினான்குபெயரு மிருதிணையும்பற்றிப்பாலுணர்த்திய வெடு த்துக்கொண்டார். அவைபெண்மைப்பெயர்நான்கும், ஆண்மைப்பெயர்நான்கு ம்,பன்மைப்பெயர்மூன்றும் ஒருமைப்பெயர்மூன்றுமாம். பெண்மைபற்றிவரு நான்குபெயரு மஃறிணைப்பெயரொன்றற்கு முயர்திணைப்பெயரொருத்திக்கு முரிய - எ - று. அந்நான்குமாவன பெண்மையியற்பெயரும், பெண்மைச் சினைப்பெயரும், பெண்மைச்சினைமுதற்பெயரும்,பெண்மைமுறைப்பெயருமே யாம். சாத்திவந்தது - சாத்திவந்தாள்-எ-ம், முடத்திவந்தது - முடத்திவந்தா ள்-எ-ம், முடக்கொற்றிவந்தது - முடக்கொற்றிவந்தாள் - எ-ம், தாய்வந்தது தாய்வந்தாள் - எ-ம் முறையானே யஃறிணைப்பெண்மைக்கு முயர்திணைப்பெ ண்மைக்கு முரியவாய்வந்தவாறு கண்டுகொள்க. முடமென்பது சினையது விகாரமாதலிற் சினையாயிற்று. ஒன்றற்குமெனப் பொதுப்படக் கூறினோே னும் பெண்மைசுட்டிய பெயரொன்றன்மையா னஃறிணைப்பெண்ணென்றேயாம் இஃதாண்மைசுட்டிய வெல்லாப்பெயருமென்புழியு மொக்கும். ஒன்றிய நிலை யுடையவற்றை யொன்றியநிலையென்றார். (௨௩.)

**௧௭௮.** ஆண்மைசுட்டிய வெல்லாப்பெயரு, மொன்றற்குமொரு வற்கு மொன்றியநிலையே.

ஆண்மைசுட்டிவருநான்குபெயரும் அஃறிணையாணொன்றற்கும் உயர்திணை யொருவனுக்கு முரிய - எ - று. அந்நான்குமாவன ஆண்மையியற்பெயரும், ஆண்மைச்சினைப்பெயரும்,ஆண்மைச்சினைமுதற்பெயரும்,ஆண்மைமுறைப்பெ யருமேயாம். சாத்தன்வந்தது- சாத்தன்வந்தான் - எ-ம், முடவன்வந்தது-மு டவன்வந்தான் - எ-ம், முடக்கொற்றன்வந்தது-முடக்கொற்றன்வந்தான்-எ-ம், தந்தைவந்தது- தந்தைவந்தான்- எ-ம்- அவைமுறையானே யஃறிணையாணொ ன்றற்கு முயர்திணையாண்பாற்கு முரியவாய் வந்தவாறுகண்டுகொள்க. பிறவு மன்ன. (௨௪)

**௧௭௯.** பன்மைசுட்டிய வெல்லாப்பெயரு, மொன்றேபலவே யொருவனென்னு, மென்றிப்பாற்கு மோரன்னவ்வே.

பன்மைசுட்டிவருமூன்றுபெயரும் அஃறிணையொருமையு மத்திணைப்பன் மையும் உயர்திணையொருமையுமெனச் சொல்லப்பட்ட மூன்றுபாற்குமுரி ய - எ - று. அம்மூன்றுமாவன பன்மையியற்பெயரும், பன்மைச்சினைப்பெ யரும், பன்மைச்சினைமுதற்பெயருமாம். யானைவந்தது- யானைவந்தன-யானை வந்தான் யானைவந்தாள், எ-ம், நெடுங்கழுத்தல்வந்தது, நெடுங்கழுத்தல்வந் தன- நெடுங்கழுத்தல்வந்தான்- நெடுங்கழுத்தல்வந்தாள்- எ-ம், பெருங்கால் யானைவந்தது- பெருங்கால்யானைவந்தன- பெருங்கால்யானைவந்தான், பெருங் கால்யானைவந்தாள்-எ-ம்- முறையானே யஃறிணையொருமைக்கு மத்திணைப் பன்மைக்கு முயர்திணையொருமைக்கு முரியவாய் வந்தவாறுகண்டுகொள்க. பன்மைக்கேயன்றி யொருமைக்கு முரியவாய்வருவனவற்றைப் பன்மைப்பெ யரொன்றதென்னையெனின் நன்றுசொன்னாய் பெண்மைப்பெயர்முதலாயின

வும் பிறபெயரானுணர்த்தப்படாத பெண்மைமுதலாயினவற்றையு முணர்த்த
லானன்றே யப்பெயரவாயின. என்னை? பெண்மைமுதலாயின பிறபெயரா
னுணர்த்தப்படுமாயினப்பெண்மை முதலாயினவற்று ளப்பெயரை வரைந்து
சுட்டலாகாமையிற் பன்மைப்பெய ரொருமைபுணர்த்துமாயினும் பிறவாற்று
னுணர்த்தப்படாத பன்மையை யொருகாலுணர்த்தலி னப்பன்மையானவை
வரைந்துசுட்டப்படுதலி னப்பெயரவாயின. அற்றேனும் பன்மைசுட்டியபெ
யரொன்றனையாதல் பன்மையையுணர்த்தல்வேண்டுமெனின் அற்றன்று இனயின்
மை நீக்கலும் பிறிதினியைபு நீக்கலுமென விசேடித்த லிருவகைத்து வெண்கு
டைப் பெருவிறலென்றவழிச் செங்குடைமுதலிய வற்றொடு டியைபுநீக்காது வெ
ண்குடையொடியையின்மை மாத்திரை நீக்கிவெண்குடையானென்பதுபடநிற்
றலி னஃதி யையின்மை நீக்கலாம். கருங்குவளையென்றவழிச் செம்மை முதலா
யினவற்றொடு டியைபுநீக்கலி னது பிறிதினியைபு நீக்கலாம். பன்மைசுட்டியபெ
யரென்பது வெண்குடைப் பெருவிறலென்பதுபோல வொருமையினியைபு நீக்கா
து பன்மைசுட்டுதலொ டியையின்மை மாத்திரைநீக்கிப் பன்மைசுட்டுமென்பது
படநின்றது; அதனான் விசேடிக்குங்கால் பிறிதினியைபு நீக்கலொருதலையன்
றெனக அஃறிணையொருமையு மஃறிணைப்பன்மையு முயர்திணையொருமையுமா
கிய பலவற்றையு முணர்த்தலாற் பன்மைசுட்டிய பெயரென்பாருமுளர். அஃது
ரையாசிரியர் கருத்தன்மை யவ்வுரையான் விளங்கும். என்றிப்பாற்குமென்
னுமும்மை யிம்மூன்றுபாற்குமென்பது படாமையின் முற்றும்மை.

கஅ0. ஒருமைசுட்டிய வெல்லாப்பெயரு மொன்றற்குமொருவ
ற்குமொன்றியநிலையே.

ஒருமை சுட்டிவருமூன்றுபெயரும் அஃறிணை யொருமைக்கும் உயர்திணை
யொருமைக்குமுரிய. எ-று. அவைமூன்றுமாவன ஒருமையியற்பெயரும், ஒரு
மைச்சினைப்பெயரும், ஒருமைச்சினைமுதற் பெயருமாம். கோதைவந்தது-கோ
தைவந்தான்-கோதைவந்தாள் -எ-ம். செவியிலிவந்தது-செவியிலிவந்தான்-செ
வியிலிவந்தாள்-எ-ம்; கொடும்புறமருதிவந்தது-கொடும்புறமருதிவந்தான்-கொ
டும்புறமருதிவந்தாள்-எ-ம், இவைமுறையானே அஃறிணையொருமைக்கும் உயர்
திணையொருமைக்கும் வந்தவாறு கண்டுகொள்க. பெண்மைப்பெயருமாண்மைப்
பெயருமொருமை யுணர்த்தி மேலும் இவைபெண்மையாண்மையென்னும் வே
றுபாடுணர்த்தா தொருமை யுணர்த்துதலாசிரியரா யொருமைப் பெயரெ
ன்றார். (உ௬)

கஅக. தாமென்கிளவி பன்மைக்குரித்தே.

இத்தமாயினவெனப்பட்டபெயர் பாற்குரியவாயவருமாறுணர்த்துகின்
றார். தாமென்னும்பெயரிருதிணைக்கண்ணும் பன்மைப்பாற்குரித்து. எ-று. தாம்
வந்தார்-தாம்வந்தன-எனவரும். (உஎ)

கஅஉ. தானென்கிளவியொருமைக்குரித்தே.

தானென்னும்பெய ரிருதிணைக்கண்ணு மொருமைப்பாற்குரித்து- எ - று
தான்வந்தான்—தான்வந்தாள்—தான்வந்தது-எனவரும். (உஅ)

**கஅங. எல்லாமென்னும் பெயர்நிலைக்கிளவி, பல்வழிநுதலிய நிலைத்தாகும்மே.**

எல்லா மென்னும்பெய ரிரண்டுதிணைக் கண்ணும் பன்மை குறித்துவரும் எ-று. வழியென்றதிடம். பொருள் சொன்னிகழ்தற்கிடமாகலிற் பல்பொருளைப் பல்வழியென்றார். எல்லாம்வந்தேம்—எல்லாம்வந்தீர்-எல்லாம்வந்தார்— எல்லாம்வந்தன-எனவரும். எல்லாமென்னும்பெய ரிருதிணைக்கண்ணும் பன்மைகுறித்துவருமென்னாது பல்வழியென்றதனா லெல்லாம்பசுவையாயிற்றெனவொருபொருளின் பலவிடங்குறித்துநிற்ற லுமுண்டென்பதூஉங் கோடற்குப்போலும். அஃதொருசொற்பொருட்டாக வருவதோருரிச்சொல்லென்பாருமுளர் (உக)

**கஅச. தன்னுளுறுத்த பன்மைக்கல்ல, துயர்திணைமருங்கினாக்க மில்லை.**

எல்லாமென்னுஞ்சொல் லுயர்திணைக்கண்ணாற் றன்மைப்பன்மைக்கல்ல துமுன்னிலைப்பன்மைக்கும் படர்க்கைப் பன்மைக்குமாகாது. எ—று. தெரிதாற்றுங் கூந்தனின்பெண்டிரெல்லாமெனப்படர்க்கைக்கண் ணும்வந்ததா லெனின், எழுத்ததிகாரத்து முயர்திணையாயி னம்மிடைவருமெனத் தன்மைக்கேற்ற சாரியை கூறினமையானும், ஈண்டுங்கயிற்றலானும் அஃறிணைவழுவமைதியாமென்பது. தன்மைச்சொலஃறிணைக் கின்மையி னெல்லாமென்பது பொதுமையிற்பிரிந்துதன்னுளுறுத்தபன்மைக்கண்வந்தவழியுயர் திணையீறாய்ப்பெயரெனப்படுமிருதிணைப்பன்மைபுணர்ந்துநிற்றற் போற்பிரியாது நின்றவழிவிரவுப்பெயராதற்கிழுக்கின்மையறிக. எல்லாப்பார்ப்பாரும்—எல்லாச்சான்றாருமெனப்படர்க்கைக்கண்ணும் வருதல்காட்டாகுத்தன்னுளுறுத்தபன்மைக்காங்காலுயர்திணைமருங்கினல்லதாகாதெனமொழிமாற்றியுரைத்தாராலெனி னாசிரியரொலின்படர்க்கைக்கண்வருதலிடைவழுவமைதியென்றவழிப்படுமிழுக்கின்மையானும் தன்மைச்சொல்லே யஃறிணைக்கிளவியெனவும், யான்யாமெனவரூஉம்பெயரெனவும் பிறவுந்தொடுத்தவாற்றாற்றன்மைச்சொலஃறிணைக்கின்மைபெறப்படுதலி னீண்டுக்கூறல் வேண்டாமையானும், எழுத்ததிகாரத் துயர்திணையாயினம்மிடைவருமெனத்தன்மைக்குரியசாரியையேகூறுதலானு மதுபோலியுரையென்க. ஈண்டாக்கம்பெருக்கம். பெருக்கமில்லையெனவே சிறுபான்மையேனையிடத்திற்கு முரித்தாமென்பாருமுளர். (ங0)

**கஅரு. நீயிர்நீயென வருஉங்கிளவி, பாறெரிபிலவேயுடன்மொழிப்பொருள.**

நீயிர் நீயென்னுமிரண்டுபெயர்ச்சொல்லுந்திணைப்பகுதிதெரியநில்லாவிருதிணையுமுடன்றோன்றும் பொருள. எ-று. உடன்மொழிப்பொருள வென்றதிருதிணைப்பொருளு மொருங்குவரத்தோன்று மென்றவாறு. பிரித்தொருதிணைவி

ளக்காவென்றவாறு. நீயிாவநதீா, நீவநதாயென விருதிணைககுமபொதுவாயநி
னறவாறுகணடுகொளக. இருதிணைக்குமுரியபெயரொல்லாநததமரபின் விணை
யொடுவநதுதிணைவிளககுமனறேஇவறறிறகனனவிணையினமையினொருவாறரு
னுநதிணைவிளககாமையிறபாறெரிபிலவேயுடனமொழிபபொருளவெனருா. ()

கஅசு. அவற்றுள், நீயென்கிளவி யொருமைககுரிததே.

மேறசொலலபபட்ட விரண்டுபெயருளநீயெனனுமபெயரொருமைக்குரி
சது-எ-று. ஒருமையாவதொருவனொருததியொனறெனப னவறறிறகெலலாம்
பொதுமையாகியவொருமை. நீவநதாயெனவநதவாறுகணடுகொளக. (௫உ)

கஅள. ஏனைககிளவி பனமைககுரிததே.

நீயிரொனனுமபெயா பனமைககுரிதது-எ-று. பனமையாவது பலலோாக்
கும்பலவறறிறகுமபொதுவாகியபனமை. நீயிாவநதீொன வநதவாறு கண்டு
கொளக. எலலாமநீயிாநீயெனவோதியவாறனறியொருமைபனமையெனனுமு
றைபறறியிணடுநீயெனபதனைமுறகூறினூா. அனறி முநதுமொழிநததன்றலைத
டுமாறெனனுநதநதிரவுசகியெனினுமமையும. நீயிாநீயெனவிருதிணை யைம்பா
லுளொனறனைவரைநதுணாததாவாயினு மொருமைபனமையென்னும் பொரு
ளவேறுபாடுடையவெனவரையறைபபடுவெழிவரையறுததவாறு. (௫௩)

கஅஅ. ஒருவரொன்றும பெயாநிலைககிளவி, யிருபாறகுமுரித்
தே தெரியுஙகாலை.

மேலினறிவரொனனு மெணணியறபெயரொ டோதப்பட்டவறறுள்ஒருவ
ரென்னுமபெயாசசொலுயாதிணைமுபபாலு ளொருபாலவிளககாதொருவனொ
ருத்தியெனனு மிருபாறகுமபொதுவாயநிறரும. எ - று. ஒருவாவநதாரொனப
பொதுவாயநினறவாறுகணடுகொளக. இருபாறகுமெனப் பொதுப்படக்கூறி
னூரேனு மொருவரெனனு மொருமைபபெயரா னுணாததபபடுதற்கேற்பன
ஒருவன் ஒருததியெனபனவேயாகலா னவையேகொள்ளபபடும. உயாதி
ணையொருமைபபா லிரணடெனறறியபபடாமையா னிருபாறகு முரிததென்
னுமமை முறறுமமை. உடாதிணைபபெயராயினு மப்பாலுணர்ததாமையு மு
னனத்தானுணாததலு மிதறகுமொககுமாகலி னீண்டுககூறினூரொனபது.(௫௪)

கஅகூ. தன்மைசுட்டிற பன்மைககேற்கும்.

ஒருவரொனனுமபெயரதியல்புகருதி னஃதொருமைபபெயராயினும் பல்
லோரறியுஞ் சொல்லொடுதொடாதறகேறகும். எ-று. ஒருவாவந்தார்- ஒருவ
ரவா-எனவரும. ஒருமைபபெயா பனமைகொள்ளாதாயினு மிதுவழுவமைதி
யிலக்கணமென்ப தறிவிததறகுத தனமைசுட்டினெனருா. (௫௫)

கக௦. இன்னபெயரே யிவையெனல்வேண்டின், முன்னஞ்சே
ர்த்தி முறையினுணாதல.

நீயிர் நீ ஒருவரொன்பனவற்றை யின்னபாற்பெயரொன்றறியலுறிற் சொல்லுவான் குறிப்பொடுகூட்டி முறையானுணர்க. எ - று. ஒருசாத்தன் ஒருவனும், ஒருத்தியானும், பலரானும், ஒன்றானும், பலவானும் தன்னுழைச்சென்றவழி நீவந்தாய், நீயிர்வந்தீரொன்றுமன்றே ஆண்டதுகேட்டா னிவனின்னபால் கருதிக்கூறினானெனபதுணரும். இனியொருவரொருவனைச் சாரந்தொழுகலாற்றி னென்றவழிச்சொல்லுவானொடு கேட்டா னிவனொருமைகுறித்தானெனவிளங்கும். பிறவுமன்ன. இனியிடமுங்காலமுமபற்றிப்பாலவிளக்குமவழியுமறிந்துகொள்க. ஏகாரம்-தேற்றேகாரம். முறையினுணர்தலெனபது பாதுகாவல். (௩௬)

கக௧. மகடூஉமருங்கிற் பாற்றிகிளவி,மகடூஉவியற்கை தொழில வயினான.

இனியொருசாருயர்திணைப்பெயர்க்கும் விரவுப்பெயர்க்கு மெஞ்சிநின்ற விலக்கணங்கூறுகின்றார். மகடூஉப்பொருண்மைக்கட் பாறிரிந்துவரும் பெண்மகனென்னும்பெயர் வினைகொள்ளுமிடத்து மகடூஉவிற்குரிய வினைகொள்ளும். எ - று. பெண்மகன்வந்தாள் எனவரும். பொருண்மைபற்றி மகடூஉவினைகொள்ளுமோ ஈறுபற்றி யாடூஉவினைகொள்ளுமோ வென்றையுறாற்க கையமகற்றியவாறு. சிறப்புடைப்பொருளைத் தானினிதுகிளத்தலெனபதனற் றொழிலவயினானவென்றாராகலிற் சிறப்பில்லாப்பெயர்வயினானும் பெண்மகனிவளென மகடூஉவியற்கையாமெனபதாம். (௩௭)

கக௨. ஆவோவாகும் பெயருமாருளவே, யாயிடனறிதல் செய்யுளுள்ளே.

ஆகாரமோகாரமாயத் திரியும்பெயர்களுமுள அத்திரியுமிடமறிக செய்யுளுள்-எ-று. வில்லோன்காலன்கழலே-தொடியோண்மெல்லடிமேலவும் சிலம்பே-நல்லோராயாரோகொல்லியாதாமே - வேயபயிலபழுவமுன்னியோரே-எ-ம, கழனிநல்லூர்மகிழ்நர்க்கென்னிழைநெகிழ்பருவரல் செப்பாதோயே - எ- ம- ஆகாரமோகாரமாயத் திரிந்தவாறு கண்டுகொள்க. ஆன, ஆள, ஆர, ஆய-என்னுமீற்றவாகிய பெயரல்லது சேரமான், மலையமான்-என்னுந் தொடக்கத்தன வவ்வாறுதிரியாமையி னயிடனறிதலென்றார். உழவன,கிழவன- எனபனவோவெனி னவையன்னீற்றுப்பெய ரொருமொழிப்புணர்ச்சியானவவாறுநின்றன வெனபது. ஆனீறுபவழியுழவோன் கிழவோனெனத்திரியுமாறறிக. (௩௮)

கக௩. இறைச்சிப்பொருள்வயிற் செய்யுளுட்கிளக்கு, மியற்பெயர்க்கிளவி யுயர்திணைசுட்டா, நிலத்துவழிமருங்கிற் றோன்றலான

செய்யுட்கருப்பொருண் மேற்கிளக்கப்படு மிருதிணைக்குமுரியபெயருயர்திணையுணர்த்தா வவ்வந்நிலத்துவழியஃறிணைப்பொருளாயநிலத்துவழிமருங்கினவழங்கப்பட்டுவருதலான-எ- று. கடுவன்முதுமகன்கல்லாமூலற்கு..

வைவந்தவன்புறழுககுமரி-என்புழிக் கடுவன் மூலன் குமரியென்பன அஃறிணைப்பொருளவாயல்லது நிலத்துவழிமருங்கிற்றோன்றுமையி னுயர்திணைசுட்டாதவாறுகண்டுகொள்க. நிலமாவது முல்லைகுறிஞ்சிமருதநெய்தலென்பன. அஃதேல் இவையுயர்திணையுணர்த்தாவாயினஃறிணைப்பெயரேயாம்; ஆகவேயிச்சூத்திரமவேண்டா பிறவெனின் அற்றன்று கடுவன் மூலனென்பன ஆணொருமையுணர்த்துமன்றே யஃறிணைப்பெயரவ்வீற்றானப்பொருளுணர்த்தாமையி னவை விரவுப்பெயரேயாமெனபது. அலவன்- கள்வனென்பனவோவெனி னவை சாதிப்பெயரேயாயல்லீ தாண்மைப்பெயரெனப்படாவென்க. குமரியென்பது வடமொழிச்சிதைவாய வடமொழிப்பொருளையுணர்த்துதலின் விரவுப்பெயரேயாம். (சகூ)

ககூச. திணையொடுபழகிய பெயரலங்கடையே.

கருப்பொருளுணர்த்துமவிரவுப்பெயருயர்திணைசுட்டா தஃறிணைசுட்டுவது அவ்வத்திணைக்குரியவாய வழங்கப்பட்டுவரும்பெயரல்லாதவிடத்து எ-று. எனவே திணைக்குரியவாய வழங்கப்பட்டுவரும்பெயரிருதிணையுஞ்சுட்டிவருமென்பதாம். திணையொடுபழகியவிரவுப்பெயராவன காளைவிடலையென்னுந் தொடக்கத்தன. செருமிகுமொய்ம்பிற்கூர்வேற்காளை-எ-ம். திருந்துவேல்விடலையொடுவருமெனதாயே-எ-ம் - உயர்திணை சுட்டிவந்தவாறு கண்டுகொள்க. இவையுயர்திணைப்பொருளன்றேவெனின் ஒருத்தையுங்காளை விடலையென்பவாகலின் விரவுப்பெயரெனவேபடுமென்பது. கடுவன் மூலன் குமரியென்பனவுங் கருப்பொருளுணர்த்தலிற்றிணையொடு பழகியபெயராம் பிறவெனின் அற்றன்று விலங்குமபுள்ளுமுதலாகியபொருள்வழியெல்லாமவற்றிற்குரியபெயர்செல்வதல்லது பொருளுண்டாயினு மிந்நிலத்திப்பொருளிப்பெயரான் வழங்கப்படாவென்னும் வரையறையில்லை. தலைமக்களெந்நிலத்து முளராயினும் பாலைநிலத்துக்காளை, மீளியென்னும்பெயர்செல்லாமருதநிலத்து; மருதநிலத்து மகிணனை ஊரனென்னும் பெயர்செல்லாபாலைநிலத்து. அதனாற்பொருள்வகையானன்றிப் பெயர்தந்திணைக் குரிமைபூண்டுநிற்றலி னவற்றைத்திணையொடுபழகியபெயரென்றானென்பது. (ரு0)

ஐந்தாவது

பெயரியல் முற்றிற்று.

ஆறாவது

## வினையியல்

---

கசூரு. வினையெனப்படுவது வேற்றுமைகொள்ளாது, நினையுங்காலைக் காலமொடுதோன்றும.

நிறுத்தமுறையானே வினைச்சொலாமாறுணர்த்திய வெடுத்துக்கொண்டார். அதனானிவ்வோத்து வினையியலென்னும்பெயர்த்தாயிற்று. வினையென்பது

சொல்லப்படுவது வேற்றுமையொடுபொருந்தாதாராயுங்காற்காலத்தொடுபுலப்படும். எ - று. ஈண்டுவேற்றுமையென்றதுருபை. உண்டான்-கரியன் - என வேற்றுமைகொள்ளாதுகாலமொடுதோன்றியவாறுகண்டுகொள்க. வேற்றுமைகொள்ளாதென்றது காலமொடுதோன்றுமெனிற் றொழினிலையொட்டுநதொழிற்பெயரும் வினைச்சொல்லாவான்செல்லுமாகலானும், காலமொடுதோன்றுமென்றது வேற்றுமைகொள்ளாதெனினிடைச்சொல்லு முரிச்சொல்லும் வினைச்சொலெனப்படுமாகலானு மவ்விருதிறனுநீக்குதற்கு வேற்றுமைகொள்ளாது காலமொடுதோன்றுமென்றார். வினைச்சொல்லுள் வெளிப்படக்காலம் விளக்காதனவுமுள வவையுமாராயுங்காற்காலமுடையவென்றற்கு நினையுங்காலைக்காலமென்றார். அவையிவையெனபதுமுன்னாச்சூத்திரத்தாற்பெறப்படும். உணர்த்தப்படும் வினைச்சொற்கெல்லாம் பொதுவிலக்கணமுணர்த்தியவாறு.

கரு௬. காலந்தாமே மூன்றெனமொழிப.

மேற்கூற்றுவாய் செய்யப்பட்டகால மூன்றென்றுசொல்லுவர் புலவர் எ - று. தாமென்பதுகட்டுரைச்சுவைபடநின்றது. (உ)

க௬எ. இறப்பினிகழ்வி னெதிர்வினென்று, வம்முக்காலமுங் குறிப்பொடு கொள்ளு, மெய்ந்நிலையுடைய தோன்றலாறே.

இறப்புநிகழ்வுமெதிர்வுமென்று சொல்லப்படுமம்மூன்றுகாலமுங் குறிப்ப வினையொடும்பொருந்து மெய்ந்நிலைமையையுடைய வினைச்சொல்லானவை தோன்றுநெறிக்கண் - எ - று. எனவேகாலமூன்றுவன இறப்புநிகழ்வுமெதிர்வுமென்பதூஉம், வெளிப்படக்காலம்விளக்காதன குறிப்புவினையென்பதூஉம்பெற்றாம். உ-ம். உண்டான் - உண்ணாநின்றான் - உண்பான்-எனவரும். இறப்பாவதுதொழிலதுகழிவு. நிகழ்வாவது தொழிறொடங்கப்பட்டுமுற்றுப்பெறாதநிலைமை. எதிர்வாவது தொழிலபிறவாமை. தொழிலாவதுபொருளினதுபுடைபெயர்ச்சியாகலி னஃதொருகணநிற்பதல்ல திரண்டுகணநிலையாமையினிகழ்ச்சியென்பதொன்றதற்கில்லையாயினும்உண்டல்தின்றலெனப் பஃறொழிற்றொகுதியையொருதொழிலாகக் கோடலின்உண்ணாநின்றான், வாராநின்றானெனநிகழ்ச்சியுமுடைத்தாயிற்றென்பது. வினைக்குறிப்புக் காலமொடுதோன்றுங்காற்பண்டுகரியன்-இதுபொழுதுகரியன - எனவிறந்தகாலமுநிகழ்காலமுமுறையானேபற்றிவருதலும், நாளைக்கரியனுமெனவெதிர்காலத்தாக்கமொடுவருதலுமறிக. மெய்ந்நிலையுடையவென்றது விளங்கித்தோன்றுவாயினுங்காலம்வினைக்குறிப்பொடு கோடன்மெய்ம்மையெனவலியுறுத்தவாறு. (௩)

க௬அ. குறிப்பினும்வினையினு நெறிப்படத்தோன்றிக், காலமொடுவரூஉம் வினைச்சொலெல்லா, முயர்திணைக்குரிமையு மஃறிணைக்குரிமையு, மாயிருதிணைக்கு மோரன்னவுரிமையு, மம்மூவுருபின தோன்றலாறே.

பொதுவகையாற்கூறிய வினைச்சொல்லைச் சிறப்புவகையா னுணர்த்திய வெடுத்துக்கொண்டார். குறிப்புப்பொருண்மைக்கண்ணுந் தொழிற்பொருண்மைக்கண்ணுந்தோன்றிக் காலத்தொடுவரு மெல்லாவினைச்சொல்லு முயர்திணைக்குரியனவு மஃறிணைக்குரியனவு மிரண்டுதிணைக்கு மொப்பவுரியனவு மென மூன்றுகூற்றனவாந்தோன்று நெறிக்கண் - எ - று. உ-ம். கரியன்-செய்யனென்புழித்தொழின்மைதெற்றெனவிளங்காது குறித்துக்கொள்ளப்படுதலிற்குறிப்பெனறார். உண்டான் - கரியன், சென்றது-செய்யது, வந்தனை-எளியை-எனவரும். குறிப்பொடுங்கொள்ளுமெனமேற்குறிப்பினையுபட்டு நிற்றலிற்குறிப்பினும்வினையினுமென்றார். முன்னர்க் கூறுபற்றியுணர்த்தப்படும் வினைச்சொற்களை இஃதிறந்தகாலத்திற்குரித்து. இஃதுநிகழ்காலத்திற்குரித்து. இஃதெதிர்காலத்திற்குரித்தென வழக்கு நோக்கியுணர்ந்துகொள்கவென்பது விளக்கியகாலமொடுவரூஉமென்றார். வினைச்சொல் காலமுணர்த்துங்காற்சிலநெறிப்பாடுடையவென்பது விளக்கிய நெறிப்படத்தோன்றியென்றார். நெறிப்பாடாவது அவ்வீற்றுமிசைநிற்குமெழுத்துவேறுபாடு. அவைமுற்ற வுணர்த்தலாகாவாயினுமவ்வீறுணர்த்தும்வழிச்சிறியசொல்லுதும். (௪)

௧௬௬. அவைதாம், அம்மாமெம்மேமென்னுங்கிளவியு, மும்
மொடுவரூஉங் கடதறவென்னு, மந்நாற்கிளவியோடா
யெண்கிளவியும்,பன்மையுரைக்குந்தன்மைச்சொல்லே.

நிறுத்தமுறையானே யுயர்திணைவினையாமா றுணர்த்துகின்றார். அவைதாமிருவகைய தன்மைவினையும்படர்க்கைவினையுமென. தன்மைவினையமிருவகைத்துப்பன்மைத்தன்மையு மொருமைத்தன்மையுமென. தனித்தன்மையு முளப்பாட்டுத்தன்மையுமெனினுமமையும். இச்சூத்திரத்தாற்பன்மைத்தன்மையுணர்த்துகின்றார். மேன்மூவகையவெனப்பட்டவினைச்சொற்றும அம்,ஆம்,எம்,ஏம்-என்னுமீற்றவாகியசொல்லும்,உம்மொடுவரூஉங்கடதறவாகிய கும்மும, டும்மும், தும்மும், றும்மும் என்னுமீற்றவாகிய சொல்லுமெனவவ்வெட்டும் பன்மையுணர்த்துந்தன்மைச்சொல்லாம் - எ - று. தனக்கொருமைபலவின்மையிற்றன்மைப்பன்மையாவது தன்னொடுபிறரையுளப்படுத்ததேயாம். அவ்வுளப்படுத்தன்மூவகைப்படும்முன்னின்றாரையுளப்படுத்தலும், படர்க்கையாரையுளப்படுத்தலும்,அவ்விருவரையுமொருங்குளப்படுத்தலுமென. அம்-ஆம்-என்பனமுன்னின்றாரையுளப்படுக்கும். தமராயவழிப்படர்க்கையாரையு முளப்படுக்கும். எம்-ஏம்-என்பனபடர்க்கையாரையுளப்படுக்கும். உம்மொடுவரூஉங் கடதறஅவ்விருவரையுமொருங்குளப்படுத்தலுந் தனித்தனியுளப்படுத்தலுமுடைய. ஈண்டுமவைதாமென்பதற்குமுடிபு அவைதாம்-இ உ ஐ ஓ என்புழியுரைத்தாங்குரைக்க. அம்மாமெம்மேம்என்பனமூன்றுகாலமும்பற்றிவரும். உம்மொடுவரூஉங்கடதறவெதிர்காலம்பற்றிவரும். முன்னின்றநான்கிறுமிறந்தகாலம்பற்றிவருங்கால்அம்மும்எம்முங்கடதறவென்னு நான்கன்முன்அன்பெற்றுவரும். ஏம் அன்பெற்றும்பெறாதும்வரும். ஆம் அன்பெறாதுவரும். நக்கனம்-நக்கனெம்-உண்டனம்-உண்டனெம்- உரைத்தனம்- உரைத்தனெம்-தின்றனம்- தின்றனெம்-

எ-ம், நக்கனெம்- நக்கேம்- உண்டனெம்-உண்டேம்- உரைத்தனெம்- உரைத்தேம்-தின்றனெம்-தின்றேம- எ-ம், நக்காம்-உண்டாம்-உரைத்தாம்-தின்றும்-எம்வரும்-அந்நான்கிறுமேனையெழுத்தின்முன்னகாரமும் றகாரமுமொழித்தின் பெற்றுவரும். அஞ்சினம்- அஞ்சினும்- அஞ்சினெம- அஞ்சினேம்-உரிஞினம்-உரிஞினும் - உரிஞினெம் - உரிஞினேம் - எனவரும். பிறவெழுத்தொடு மொட்டிக்கொள்க. கலக்கினம்-தெருட்டினமென்னுந்தொடக்கத்தன குற்றுகரவீறுகலானதுவுமேனையெழுத்தேயாம். இனியவை நிகழ்காலம்பற்றி வருங்கால் நில கின்றென்பனவற்றொடுவரும். நில்லென்பதுலகாரம் னகாரமாய் றகாரம பெற்றுநிற்கும். உண்ணாநின்றனம்-உண்கின்றனம்-உண்ணாநின்றும்-உண்கின்றும் - உண்ணாநின்றனெம் - உண்கின்றனெம் - உண்ணாநின்றனேம், உண்ணாநின்றேம்-உண்கின்றனேம் உண்கின்றேம் - எனவரும், ஈண்டன்பெற்ற விகற்பமிறந்தகாலத்திற்கூறியவாறேகொள்க. உண்ணாகிடந்தனம்-உண்ணாவிருந்தனம்-எனக்கிடவிருவென்பனவுஞ்சிறுபான்மை நிகழ்காலத்துவரும். நிகழ்காலத்துக் குறித்தெனவா நில்லென்பது உண்ணாநிற்றும்-உண்ணாநிற்பல்-எனவெதிர்காலத்துவந்ததாலெனின் அற்றன்று பண்டொருநாளிச்சோலைகண் விளையாடாநின்றேனாக நேரத்தொருதோகைவந்தான் என்றவழி அஃதிறந்தகாலத்து நிகழ்வுபற்றிவந்தாற்போல ஆண்டெதிர்காலத்து நிகழ்வுபற்றிவருதலி னீண்டுமது நிகழ்காலத்திற்றிரிந்ததின்றென்க. அவையெதிர்காலம்பற்றிவருங்காற் பகரமும் வகரமும்பெற்றுவரும். வகரமேற்புழிக் குகரமு முகரமுமடுத்துநிற்கும். உண்குவம்-உரிஞுவம்-செல்லுவம்-உரைப்பம்-எனவரும். ஒழிந்தவீற்றொடுமொட்டிக்கொள்க. பாடுசம்-செல்சம்-என வேற்புழிச்சிறுபான்மை ககரவொற்றுப்பெறுதலுங்கொள்க. உம்மொடுவருஉங்கடதற உண்கும்-உண்டும்-வந்தும்-சேறும்-எனவரும். உரிஞுதும்-திருமுதும்-எனவேற்றவழி யுகரம்பெற்றுவரும். குமமீறுவினைகொண்டுமுடிதலின் ஒழிந்த வும்மீற்றின் வேறெனவேபடும். டதற வென்பன வெதிர்காலத்துக்குரிய வெழுத்தன்மையாற் பாலுணர்த்து மிடைச்சொற குறுபபாய்வந்தனவெனவேபடும். படவேயவற்றை யுறுப்பாகவுடையகிறுமூன்றும்; அதனானும்மெனவேவாரீறுக வடக்கலாகாமையி னந்நாற்கிளவியொடென்றார். (ரு)

உ00. கடதறவென்று, மந்நான்கூர்ந்த குன்றியலுகரமொ, டென்னேனல்லென வருஉமேழுந்,தன்வினையுரைக்குந் தன்மைசொல்லே.

கடதறவென்னுநான்கு மெய்யையூர்ந்துவருங் குற்றியலுகரத்தை யீறுகவுடையசொல்லும், என் ஏன் அல்லென்னு மீற்றவாகிய சொல்லுமென வவ்வேழுமொருமையுணர்த்துந் தன்மைச்சொல்லாம் - எ-று. குற்றுகரநான்கும், அல்லுமெதிர்காலம்பற்றிவரும். குன்றுகரங்காலவெழுத்துப்பெறுங்காலும்மீற்றொடொக்கும். அல்லீறுபகரமும் வகரமும்பெற்றுவரும்,என் ஏன் என்பனமூன்றுகாலமும்பற்றிவரும். உண்கு-உண்டு - வருது-சேறு - எ-ம், உரிஞுது-திருமுகு-எ-ம், உண்டனென்-உண்ணாநின்றனென்-உண்குவென்-எ-ம், உண்டேன்.

உண்ணாநின்றேன்-உண்பேன்-எ-ம், உண்பல்-வருவல்-எ-ம் வரும். காலவெழுத்தடுத்தற்கணெம்மீற்றுடெனனீறும்,ஏமீற்றுடேனீறுமொக்கும்.ஆண்டுக்கூறியவிகற்பமெல்லாமறிந் தொட்டிக்கொள்க. குற்றுகரமென வொன்றாகாது நான்காதற்கு முன்னுரைத்தாங்குரைக்க. எதிர்காலம்பற்றி வழக்குப்பயிற்சியுமில்லாக் குற்றுகரத்தை யங்ஙனம்வரும்அல்லொடு பின்வையாது மூன்றுகாலமும்பற்றிப் பயின்றுவரும் என் ஏனென்பனவற்றின் முன்னுமீற்றுடியையவைத்ததுசெய்கென்பதுபோலச் செய்குமென்பதூஉங் காண்கும்வந்தேமென வினைகொண்டு முடியுமென்பதறிவித்தற்கெனக்கொள்க. (சு)

உ0க. அவற்றுட், செய்கென்கிளவி வினையொடுமுடியினு, மவ்வியற்றிரியா தென்மனார்புலவர்.

மேற்கூறப்பட்ட வொருமைத்தன்மைவினையேழனுட் செய்கென்னுஞ்சொல் வினையொடுமுடியுமாயினு முற்றுச்சொல்லாதலிற் றிரியாது - எ - று. காண்குவந்தேன்-எனவரும். செய்கென்கிளவி யவ்வியற்றிரியாதெனவே பெயர்த்தனென் முயங்கயான்-எ-ம், தங்கினைசென்மோ - எ-ம், மோயினளுயிர்த்தகாலை-எ-ம்- ஏனைமுற்றுச்சொல் வினைகொளுங்கா லவ்வியற்றிரியுமென்பதாம். அவைதிரிந்தவழி வினையெச்சமாதல் வினையெஞ்சுகிளவியும் வேறுபலகுறிய வென்புழிப்பெறப்படும். இருசாரனவும்பெயர்கொள்ளாதுவினைகொண்டவழிச்செய்கென்கிளவி திரியாதென்று மேனைபதிரியுமென்றுங் கூறியகருத்தென்னையெனின் நன்றுசொன்னாய் காண்குவந்தேனென்றவழிச் செய்கென்கிளவி வினையெச்சமாய்த்திரிந்ததாயிற் செய்தெனெச்சமாதற்கேலாமையிற்செயவெனெச்சமாய்த்திரிந்ததெனல்வேண்டும். வேண்டவேசெயவெனெச்சத்திற்குரிய வினைமுதல்வினையும் பிறவினையு மதுகொள்வான்செல்லும்.வினைமுதல்வினையல்லதுகொள்ளாமையிற் செயவெனெச்சமாய்த் திரிந்ததென்றல்பொருந்தாது. பிறிதாறின்மையின் முற்றுச்சொல்லாய்நின்றதெனவேபடும். அதனானவ்வியற்றிரியாதென்றாரென்பது. அல்லதூஉஞ்செய்கென்கிளவி சிறுபான்மையல்லது பெயர்கொள்ளாமையிற் பெரும்பான்மையாகிய வினைகோடலதற்கியல்பேயாம். ஆகவேஅதுதிரிந்து வினைகொள்ளுமென்றல் வேண்டாவாம். அதனானுமுற்றாய்நின்று வினைகொண்டதென்றலே முறைமையென்றுணர்க. முற்றுச்சொற்கும் வினையொடுமுடியினு முற்றுச்சொலலென்னு முறைமையினிறவாவென்றார் பிறருமெனக்கொள்க. பெயர்த்தனென்முயங்கவென்னுந் தொடக்கத்தன விறந்தகாலமுணர்த்தலிற் செயதெனெச்சமாதற் கேற்புடைமையானவற்றைத்திரிபென்றார். முன்னரொத்திறத்தானும் பெயர்முடிபினவேயென்பதனாற் பெயரொடுமுடிதலெய்துவதனை விலக்கியவாறு. (எ)

உ0உ. அன்னனள்ளா ளென்னுநான்கு, மொருவர்மருங்கிற் படர்க்கைச்சொல்லே.

தன்மைவினையுணர்த்தி யினி யுயர்திணைப்படர்க்கைவினையுணர்த்துகின்றார். அன், ஆன், அள், ஆள்-என்னுமீற்றையுடைய நான்குசொல்லு முயர்திணை

யொருமையுணர்த்தும் படர்க்கைச்சொல்லாம் - எ-று. இவைநான்கிறு மூன்றுகாலமும்பற்றிவரும். உ-ம். உண்டனன் - உண்ணாநின்றனன்-உண்பன்-எ-ம், உண்டான்-உண்ணாநின்றான்-உண்பான்-எ-ம், உண்டனள்-உண்ணாநின்றனள்-உண்பள்-எ-ம், உண்டாள்-உண்ணாநின்றாள்-உண்பாள்-எ-ம் வரும். காலத்துக்கேற்ற வெழுத்துப்பெறுங்கால் அன்னும் அள்ளும் அம்மீற்றெடும், ஆனும் ஆளும் ஆமீற்றெடு மொக்கும். அவ்வேறுபாடெல்லா மறிந்தொட்டிக்கொள்க. (அ)

உ0கூ. அர் ஆர்பவென வரூஉமூன்றும், பல்லோர்மருங்கிற் படர்க்கைச் சொல்லே.

அர், ஆர், ப-என்றுமீறறைபுடையவாயவருமூன்றுசொல்லும் பல்லோரையுணர்த்தும படர்க்கைச்சொல்லாம். எ-று. ரகாரவீறிரண்டுமூன்றுகாலமும்பற்றிவரும். பகாரமெதிர்காலம்பற்றிவரும். உண்டனர், உண்ணாநின்றனர்-உண்பர். எ-ம், உண்டார் - உண்ணாநின்றார் - உண்பார். எ-ம், உண்ப - எ-ம்வரும். அன்னீற்றிற்குரியகாலவெழுத்து ஆர் ஈற்றிற்கும், ஆனீற்றிற்குரிய காலவெழுத்து ஆரீற்றிற்குமுரிய. பகரமுகரம்பெறறும் பெறாதும் உரினுப, உண்ப-என வரும். வருகுபவெனச்சிறுபான்மை குகரமும்பெறும். இவ்வேறுபாடேறபுழியறிந்தொட்டிக்கொள்க. (கூ)

உ0ச. மாரைக்கிளவியும்பல்லோர்படர்க்கை, காலக்கிளவியொடு முடியுமென்ப.

முன்னையனவேயன்றி மாரீறறுச்சொல்லும்பல்லோரபடர்க்கையையுணர்த்தும்; அஃதுஅவைபோலப்பெயர்கொள்ளாது வினைகொண்டுமுடியும். எ-று. பகரத்திற்குரியகாலவெழுத்து மாரைக்கிளவிக்குமொக்கும். எள்ளுமார்வந்தார் - கொண்மார்வந்தார் - எனவரும். குகரம்வாரதவழிக்கண்டுகொள்க. மாரைக்கிளவிவினையொடல்லதுபெயரொடுமுடியாமையினெச்சமாய்த்திரிந்து வினைகொண்டதெனப்படாமையறிக. அஃதேறபீடினறுபெருகியதிருவிற்பாடின் மன்னைப்பாடன்மாரெமரோ - எ-ம், காமப்பட்ட வருந்தியநோய்மலி வருத்தங் காணன்மாரெமரோ-எ-ம்- மாரீற்றுச்சொல் பெயர்கொண்டுவந்தனவாலெனின் அவைபாடுவார்காண்பாரென்னும் ஆரீற்றுமுற்றுச்சொல்லினெதிர்மறையா யொருமொழிப்புணர்ச்சியான் மகரம்பெற்றுநின்றன. மாரீறுயினவைபாடாதொழிவார், காணாதொழிவாரென வேவற்பொருண்மையுணர்த்துமா றில்லையென்க. (க0)

உ0ரு. பன்மையுமொருமையும் பாலறிவந்த, வந்நாலைந்துமூன்றுதலையிட்ட, முன்னுறக்கிளந்த வுயர்திணையவ்வே.

பன்மையுமொருமையுமாகிய பாலுணரவந்த விருபத்துமூன்றீற்று வினைச்சொல்லுமுன்னுறக்கிளக்கப்பட்ட வுயர்திணையுடையன எ-று. ஈண்டுக்கூறியபடர்க்கைவினையேகிளவியாக்கத்துட்கூறப்பட்டன அவைவேறல்லவென்பார்முன்னுறக்கிளந்தவென்றார். அதனறபயன் அன்னனள்ளாளென்பனவான்

பால்பெண்பாலுணர்த்துதலீண்டுப்பெறுதலும், னஃகானொற்று முதலாயினப
டர்க்கைவினைக்கீறாய்நின்றுபாலுணர்த்துத லாண்டுப்பெறுதலுமாம். அஃதே
ன்மூற்றுப்பெறவோரிடத்துக்கூறவமையு மீரிடத்திற்கூறிப்பயந்ததென்னெனி
ன் பாலுணர்த்துமிடைச்சொற்பற்றி யுயர்திணைப்படர்க்கைவினையுணர்த்துதலீ
ண்டுக்கூறியதனாற்பயன். ஆண்டுகூறியதனாற்பயன் வழக்காத்தற்கிவற்றைத்
தொகுத்திலக்கணவழக்குணர்த்துதலாமென்க. பெயரியலுள்ளாக்கிப்பெயரிற்றோ
ன்றும் பாலறிகிளவியுமென்றாற்போலவினையியலுளாக்கிவினையிற் றோன்றும்பா
லறிகிளவியுமயங்கல் கூடாவெனவமையும்; ஆண்டுக்கூறல்வேண்டாவெனின்
அற்றன்று இருதிணையைம்பாற்சொலுணர்த்தாக்காற்றிணைபால்பற்றிவழுவற்க
வெனவும், வழீஇயமைகவெனவும்வழக்காத்தசூத்திரங்க ளெல்லாவற்றானும்
பொருளினிதுவிளங்காமையானும், வினையுள்ளுந்திரிபின்றிப் பால்விளக்குதற்
சிறப்புடையன படர்க்கைவினையேயாகலானு மவற்றைப்பிரித் தாண்டுக்கூறி
னாரென்பது. படர்க்கைபலவற்றானும்பெயரீறுந்திரிபின்றிப்பாலுணர்த் தாமை
யி னிலக்கணவெழுத்தொடுகூறு தெதிரதுநோக்கிக்கொள்ள வைத்தாரென்க.
மூன்றுதலையிட்டவாநாலைந்துமாவன இவையென விளிதுவிளங்கப் பன்மையு
மொருமையும்பாலறிவந்தவென்றார். இதனாற்பயனுயர்திணைவினைமூன்றுதலையி
ட்டநாலைந்தென்னும்வரையறை. (௧௧)

உ௦௫. அவற்றுட், பன்மையுரைக்குந் தன்மைக்கிளவி, யெண்
ணியன்மருங்கிற் றிரிபவையுளவே.

கூறப்பட்டவிருபத்துமூன்றுசொற்களுட் பன்மையுணர்த்துந் தன்மைச்
சொலெண்ணியலும்வழி அஃறிணையையுளப்படுத்துத்திரிவனவுள. [illegible]-று. யா
னுமென்னெஃகமுஞ்சாறும் - எனவரும். தன்மைப்பன்மைச்சொ லுயர்திணை
வினையாகலினுயா் திணையையுளப்படுத்தற்பாலன வஃறிணையை யுளப்படுத்தல்
வழுவாயினுமமைகவென்பார் திரிபவையுளவென்றார். அதனானிச்சூத்திரத்தை
மூன்றுறக்கிளந்தவுயர்திணையவ்வேயென்னுஞ் சூத்திரத்தின்பின்வைத்தார். தி
ரியுமென்னாதுதிரிபவையுளவென்றதனா னெல்லாந்திரியாசிலவேதிரிவன வெ
ன்பதாம். (௧௨)

உ௦௭. யாஅரென்னும் வினாவின்கிளவி, யத்திணைமருங்கின் மு
ப்பாற்குமுரித்தே.

யாரென்னும்வினாப்பொருளையுணர்த்துஞ்சொல் உயர்திணைமருங்கின் மு
ப்பாற்குமுரித்து. எ-று. உ-ம்-அவன்யார் - அவள்யார் - அவர்யார்-எனவரும்.
வதைகூட்டுண்ணுமுருகுபனியாமழ்தெங், கோதைகூட்டுண்ணியதான் யார்மன்,
போதெலாந், தாதொடுதாழுந்தார்க்கச்சிவளநாடன், றூதொடுவாராதவண்டு.
வண்டென்புழிவண்டுதான்யாரென யாரென்பதஃறிணைக்கண்ணும்வந்தகாலெ
னின் அதுதிணைவழுவமைதியெனப்படும். இதுவினாக்குறிப்பாயினும் பல்லோ
ர்படர்க்கையுணர்த்தும் ரகாரவீற்றான்மூன்றுபாலுணர்த்தும் வேறுபாடுடை
மையினவற்றொடுவையாதீண்டுவைத்தார். செய்யுளின்பநோக்கியளபெழுந்து
நின்றது. வினாவின்கிளவியெனவதன்பொருளுணர்த்தியவாறு. (௧௩)

உ0அ. பாலறிமரபி னம்மூவீற்று, மாவோவாகுஞ் செய்யுளு ள்ளே.

பால்விளங்கவரு மியல்பையுடைய வம்மூன்றீற்றின்கண்ணு மாகாரமோ காரமாகுஞ்செய்யுளுள - எ - று. பாலறிமாபினென்றதனுற் பாலுணர்த்துதற் சட்டிரிபுடைய ஆமீறுவிலக்குண்ணும்; மார்சிறுவழக்கிற்றுகலானும், ஆகாரம் ஓகாரமாதற் கேலாமையானும் அம்மூவீறுவன-ஆன்-ஆள்-ஆர்-என்பனவே யாம். வினவிநிற்றநதோனே-நல்லமனனெனநகூஉப்பெயர்நதோளே, பாசிலைவா டாவள்ளியங்காடிறநதோரே-என வாகார மோகாரமாய்த் திரிநதவாறு கண்டு கொள்க. வந்தோம், சென்றேமென வழக்கினுள் வருவனவோவெனின் அ வை ஏமீற்றின்சிதைவெனமறுக்க. (கசு)

உ0கூ. ஆயென்கிளவியு மவற்றொடுகொள்ளும்.

முன்னிலையீற்றுளாயென்னுமீறு மேற்கூறப்பட்டனபோல ஆகார மோ காரமாஞ்செய்யுளுள் - எ - று. வாநோய்மன்றதெண்கடற்சேர்பப-எனவரு ம். கூறப்பட்ட நான்கீறறுத் தொழிறபெயரு மாகார மோகாரமாதல் பெய ரியலுட்கொள்ளப்படும். ஆயென்கிளவியாவோவாவது பெரும்பானமையு மு யாதிணைக்கண்வந்தவழியென்ப தறிவித்தற்கு முன்னிலையதிகாரத்துக் கூறு நீண்டுக்கூறினுர். அவற்றொடுகொளளுமெனற தவற்றொடொகருமென்றவாறு.

உக0. அதுசசொலவேறறுமை யுடைமையானுங், கண்ணென் வேறறுமை நிலத்தினனு, மொப்பினனும் பண்பினனு மென், றப்பாற்காலங் குறிப்பொடுதோன்றும்.

ஆறும்வேற்றுமையதுடைமைபபொருட்கண்ணு மேழாம்வேற்றுமையது நிலப்பொருட்கண்ணுமொப்பின்கண்ணும்பண்பின்கண்ணு மெனவப்பகுதிக்கா லங்குறிப்பாற்றோன்றும். எ-று. அபபகுதிக்காலமாவதுஅப்பொருட்பகுதிபற்றி வருஞ்சொல்லகத்துக்காலமாம். அப்பகுதிக்காலங்குறிப்பாற்றோன்று மென வே அப்பொருள்பற்றிவினைக்குறிபபுவருமென்றவாறும். உடையானதுடைமை த்தன்மையேயன்றியுடைப்பொருளுமுடைமையெனப்படுதலி னுடைமையானு மெனபதற்குடைப்பொருட்கண்ணுமெனவுமுரைக்க. உரைக்கவேயுடைப்பொ ருட்கண்வருங்காலுடைப்பொருட்சொல்லாகிய முதனிலைபறறிவருதலும்பெற ப்படும். கருமையனென்பதுடைமைபபொருளாயடங்கலிற்பண்பினனு மென் புழிக்கரியனெனவின்னனென்பதுபடவருதலேகொள்க. வாளாதுடைமையா னுமென்றவழியன்மையினென்பதுபோல அவ்வொருவாய்பாடேபற்றிநிற்கும். இதனையஃதுடைத்தென்பது படவருமெல்லாவாய்பாடுநதழுவுதற்குஅதுச்சொ ல்வேற்றுமையுடைமையானுமென்றார். கண்ணென்வேற்றுமைநிலத்தினுமெ ன்பதற்குமீதொக்கும். ஆயின் இஃதிரண்டாம்வேற்றுமைப்பொருளாமேனின் ஆண்டுடைமையுருபுநோக்கியசொல்லாய்வருவதல்ல திரண்டாம் வேற்றுமை ப்பொருளெனப்படாது. என்னை? அதுசெயப்படுபொருண்மைத்தாகலின்] இ

தனானுடைமையாருவதன்பொருளெனவேபடுமென்பது. கச்சினன் - கழலினன்-எ-ம், இல்லத்தன்-புறத்தன்-எ-ம், பொன்னன்னன் - புலிபோல்வன்-எ-ம், கரியன்- செய்யன்- எ-ம் வரும். கச்சினன்-இல்லத்தான்-எனப்பெயருங்குறிப் பாற்காலம்விளக்குதலி னப்பாற்காலங்குறிப்பொடுதோன்று மென்றதனன் வினைக்குறிப்பென்பதுபெறுமாறென்னையெனின் தொழினிலையொட்டுமொன்றல ங்கடையெனத் தொழிற்பெயரல்லனகாலந்தோன்றுவென்றமையாற் கச்சின ன், இல்லத்தானென்பன காலம்விளக்காமையிற்குறிப்பாற்காலம்விளக்குவன வினைக்குறிப்பாதல்பெறுதும். அல்லதூஉம்வினைக்குறிப்புங்காலந்தோன்றுதலை யிலக்கணமாகவுடைய வினைச்சொல்லேயாகலிற் றெற்றெனவிளக்கா வாயினு ங்காலமுடையவெனவேபடும். பெயர்க்கண்ணதோரிலக்கணமின்மையிற்காலந் தெற்றெனவிளக்குவனவுளவேற்கொள்வதல்லது காலம்விளக்காதபெயருங்கா லமுடையவெனவேயுய்த்துணருமாறில்லை; அதனானுங்குறிப்பாற் காலமுணர்த் துவனவினைக்குறிப்பேயென்பது பெறப்படுமெனக. தன்வினைமுடித்த லென்ப தனன் ஐ பாட்டையன், துணங்கையன்-எனச்சிறுபான்மைகாலமும் வினைசெ யிடமும்பற்றி வருவனவுங்கொள்க. (௧௬)

௨௧௧. அன்மையி னின்மையி னுண்மையின் வன்மையி, னன்ன பிறவுங் குறிப்பொடுகொள்ளு, மென்னகிளவியுங் குறி ப்பேகாலம்.

அன்மையின்மையுண்மைவன்மையென்னும்பொருள்பற்றிவருவனவும் அ வைபோல்வனபிறவுங் குறிப்புப்பொருண்மையொடுபொருந்துமெல்லாச்சொ ல்லுங்காலங்குறிப்பானுணரப்படும். எ-று. காலங்குறிப்பானுணரப்படு மென வே யிவையும்வினைக்குறிப்பாமென்றவாறும். அல்லன்-அல்லள்-அல்லர்-எ-ம்,இ லன்-இலள்-இலர்-எ-ம்,உளன்-உளள்-உளர்-எ-ம், வல்லன்-வல்லள்-வல்லர்-எ-ம் வரும். பொதுப்படக்கூறியவதனாற் பொருளிலன்-பொருளிலள்- பொருளில ர்-எ-ம்- உடைமைக்குமறுதலையாகியவின்மையுங்கொள்ளப்படும். இவையொ ருவாய்பாடேபற்றிப்பிறத்தலின்வேறுகூறினார். பண்பொடிவற்றிடை வேற்று மையென்னையெனின் இன்மை பொருட்குமறுதலையாகலிற்பொருளின்கட் கிட க்கும்பண்பெனப்படாது. அன்மையுமுண்மையும் பண்பிற்கு மொத்தலிற்பண் பெனப்படா. என்னை? குணத்திற்குக் குண்மின்மையின்.]வன்மைஆற்றல். அது வுங் குணத்திற்கு முண்டாகலிற் குணமெனப்படாது; உளதெனினது பண் பாயடங்கும். அதனாற்பொருட்கட்கிடந்து தனக்கோர்குணமின்றித் தொழி லின்வேறாய குணத்தினன்மைமுதலாயின வேறெனப்படும். பண்பெனினுங் குணமெனினுமொக்கும். இக்கருத்தேபற்றியன்றே யாசிரிய ரின்மையுமுண் மையுமுணர்த்துஞ்சொற்களை முடிப்பாராயிற்றென்பது. என்னகிளவியுமென் றது அன்னபிறவுமெனப்பட்டவற்றையேயாகக்கொள்க. குறிப்பேகாலமென்ற வழிக் குறிப்பென்பது குறிக்கப்படுவதனை. அன்னபிறவுமென்றதனான் நல்ல ன்-நல்லள்-நல்லர், தீயன்-தீயள்-தீயர், உடையன்-உடையள்-உடையர் - என வித் தொடக்கத்தனவெல்லாங்கொள்க. (௧௭)

௨௧௨. பன்மையுமொருமையும் பாலறிவந்த, வன்னமரபிற்குறி
ப்பொடுவரூஉங், காலக்கிளவி யுயர்திணைமருங்கின், மே
லைக்கிளவியொடு வேறுபாடிலவே.

பன்மையுமொருமையுமாகிய பால்விளக்கிக் குறிப்புப்பொருண்மையையு
டையவாய்வரும் வினைச்சொன் மேல்வருமுயர்திணைக்கட்கூறிய தெரிநிலைவி
னையொடொக்கும்-எ - று. தெரிநிலைவினையொடொத்தலாவது உயர்திணைத்தெ
ரிநிலைவினைக்கோதியவீற்றுட் டமக்கேற்பனவற்றொடு வினைக்குறிப்புவந்தவழி
யவ்வவ்வீற்று னவ்வப்பாலு மிடமும்விளக்கலாம். மேல்வினைக்குறிப்பின்ன
பொருள்பற்றிவருமென்றதல்லதின்னவீற்றானின்னபால் விளக்குமென்றிலரா
தலானஃதீண்டுக்கூறினார். கூறப்பட்ட பொருட்கண்வருதனவாயினும் இல்லை,
இல், இன்றி-என்பன பாலவிளக்காமையி னவற்றைநீக்குதற்குப் பன்மை
யுமொருமையும் பாலறிவந்தவெனறார். ஒருபொருட்கட் பலவாய்பாடுமொரு
பொருட்க ணொருவாய்பாடும்பற்றிவரு மிருதிறமுமெஞ்சாமற்றழுவுதற் கன்
னமரபினென்றார். தனமையும் படர்க்கையுமுணர்த்துந் தெரிநிலைவினையீற்றுட்
குறிப்புவினைக்கேற்பன அம், ஆம், எம், ஏம், என், ஏன-என்னுந் தன்மையீரு
றும், அன், ஆன், அள், ஆள், அர், ஆர்-என்னும் படர்க்கையீராறுமெனப் பன்னி
ரண்டாம். கரியம்-கரியாம்-கரியெம்-கரியேம்-கரியென்-கரியேன்-எ-ம், கரிய
ன்-கரியான்-கரியள்-கரியாள்-கரியர்-கரியார்-எ-ம்- அவ்வவ்வீறவ்வவ்விடமும்
பாலும் விளக்கியவாறு கண்டுகொள்க. ஒழிந்தபொருட்கண்ணு மொட்டிக
கொள்க. ஆன், ஆள், ஆர்-என்பன நிலப்பொருண்மைக்கணல்லது பிறபொரு
ட்கட்பயின்றுவரா. இன்னுமேலைக்கிளவியொடு வேறுபாடில என்றதனான் வந
தனனெனத் தெரிநிலைவினைத்தொழின்மைமேற்படத் தொழிலுடைப்பொரு
ள்கீழ்ப்பட முற்றாய்நின் றுணர்த்தியவாறுபோல உடையனெனக் குறிப்புவி
னையும் உடைமைமேற்பட உடையான் கீழ்ப்படமுற்றாய்நின் றுணர்த்துதலுங்
கொள்க. வந்தான், உடையான-எனப் பெயராயவழித் தொழிலுடைப்பொரு
ளுமுடைமையானு மேற்பட்டுத்தோன்றுமாறறிக. இஃதஃறிணைமருங்கின் மே
லைக்கிளவியொடு வேறுபாடிலவே யெனபதற்குமொக்கும். (௧௮)

௨௧௩. அ ஆ வ எனவரூஉமிறுதி யப்பான்மூன்றே பலவற்றுப்
படர்க்கை.

உயர்திணைவினையுணர்த்தி யினி யஃறிணைவினை யுணர்த்துகின்றார். அக
ரமுமாகாரமும் வகரவுயிர் மெய்யுமாகிய வீற்றையுடையவக்கூறுமூன்று மஃ
றிணைப் பன்மைப் படர்க்கையாம் - எ - று. அகர மூன்றுகாலமும்பற்றிவ
ரும். ஆகாரமெதிர்மறைவினையாய் மூன்றுகாலத்திற்கு முரித்தாயினு மெதிர்
காலத்துப்பயின்றுவரும். அகரமிறந்த காலம்பற்றிவருங்கால் கடதறவென்னு
நான்கன்முன் அன்பெற்றும் பெறாதும்வரும். ஏனையெழுத்தின்முன் ஙகார
ழகாரமொழித் தின்பெற்றுவரும். யகரத்தின்முன் சிறுபான்மையின்னே
யன்றி யன்பெற்றும்பெறாதும்வரும். நிகழ்காலத்தின்க ணில்கின்றென்பன

வற்றொடன்பெற்றும் பெறுதும்வரும். எதிர்காலத்தின்கண் பகரவகரத்தொடன் பெற்றும் பெறுதும் வரும். தொக்கன-தொக்க-உண்டன - உண்ட- வந்தன- வந்த-சென்றன-சென்ற-எ-ம், அஞ்சின-போயின-போயன-போய-எ-ம், உண் ணுநின்றன-உண்ணுநின்ற-உண்கின்றன-உண்கின்ற-எ-ம், உண்பன - உண்ப- வருவன-வருவ-எ-ம் வரும். உரிஞுவன-உரிஞுவ-என வுகரத்தொடேனையெழு த்துப்பேறு மேற்றவழிக்கொள்க. வருவ - செல்வ- என்னுந் தொடக்கத்தன அகரவீறுதலும், வகரவீறுதலுமுடையவென்பது கிளவியாக்கத்துட்கூறினும். ஆகாரம் காலவெழுத்துப்பெறுஅ உண்ணு-தின்னு-எனவரும். வகரம் உண்குவ- தின்குவ-எனவெதிர்காலத்திற் குரித்தாய்க்குக மடுத்துநிற்கும். ஓடுவ-பாடுவ- எனக்குகரமடாதும்வரும். உரிஞுவ-திருமுவ-எனவுகரம் பெறுதலுமேற்றவழிக் கொள்க. ஒழிந்தவெழுத்தொடு மொட்டிக்கொள்க. (கக)

உகச. ஒன்றன்படர்க்கை தறடவூர்ந்த, குன்றியலுகரத் திறுதி யாகும்.

ஒன்றனையுணர்த்தும் படர்க்கைவினையாவது தறடவென்பனவற்றையூர் ந்துநின்ற குற்றியலுகரத்தை யீறாகவுடையசொல்லாம் - எ - று. தகரவுகர மூன்றுகாலத்திற்குமுரித்து. றகரவுகரமிறந்தகாலத்திற்குரித்து. டகரவுகர மூ ன்றுகாலத்திற்கு முரியவினைக்குறிப்பிற்கல்லது வாராது. அஃதேல் வினைக்கு றிப்புக்கூறும்வழிக்கூறு நீண்டுக்கூறியதென்னெனின் அஃறிணை மருங்கின் மேலைக்கிளவியொடு வேறுபாடிலவெண வினைக்குறிப்புப்பா லுணர்த்துமாறு தெரிநிலைவினையொடு மாட்டெறியப்படுமாகலின் டகரமூர்ந்த குற்றியலுக ரந் தெரிநிலைவினைக்கீறுகாமையின் மாட்டேற்றுவகையாற் பாலுணர்த்துதல் பெறப்படாதா மதனுணீண்டுவைத்தார். தகரவுகரமிறந்த காலத்து வருங்கா ற்புக்கது-உண்டது-வந்தது-சென்றது-போயது- உரிஞியது - எனக்கடதறவும் யகரமுமாகிய வுயிர்மெய்ப்பின்வரும். போனதென னகரவுயிர்மெய்ப்பின் வருவதோவெனின் அதுசான்றோர் செய்யுளுள்வாராமைமி னதுசிதை வென ப்படும். நிகழ்காலத்தின்கண் நடவாநின்றது-நடக்கின்றது - உண்ணுநின்றது- உண்கின்றதுஎனநில்கின்றென்பனவற்றொ டகரம்பெற்றுவரும். எதிர்காலத்தி ன்கண் உண்பது-செல்வது-எனப்பகரவகரம்பெற்றுவரும். றகரவுகரம்புக்கன் று - உண்டன்று - வந்தன்று - சென்றன்று எனக் கடதறவென்பனவற்றின் முன் அன்பெற்றுவரும். கூயின்று-கூயிற்று - போயின்று - போயிற்று - என வேனையெழுத்தின்முன் இன்பெற்றுவரும். ஆண்டின்னி னகரந்திரிந்துந் திரி யாதும் வருதல்கொள்க. வந்தின்றென்பதோவெனின் அஃதெதிர்மறுத்தலை யுணர்த்துதற்குவந்த இல்லினது லகரம் னகரமாய்த்திரிந்த வெதிர்மறைவினை யெனமறுக்க. அஃதெதிர்மறையாதல் வந்தில-வந்திலன் - வந்திலள் - வந்திலர்- எனவரு மேனைப்பாற்சொல்லானறிக. டகரவுகரம் குண்டுகட்டு - குறுந்தாட் டெனவரும். (உ0)

உகரு. பன்மையுமொருமையும் பாலறிவந்த, வம்மூவிரண்டு மஃறிணையவ்வே.

பன்மையுமொருமைபமாகிய பாலறியவந்த வவ்வாறிறுச்சொல்லு மஃறிணையனவாம் - எ - று. பன்மையுமொருமையும் பாலறிவந்த வென்பதற்கு முன்னுரைத்தாங்குரைக்க. இதனாற்பயன் அஃறிணைச்சொல்லாறே பிறிதில்லை யென வரையறுத்தலெனக்கொள்க. (உக)

உகசு. அத்திணைமருங்கி னிருபாற்கிளவிக்கு, மொக்குமென்ப வெவனென்வினாவே.

எவனென்னும் வினாச்சொல் மேறகூறப்பட்ட வஃறிணையிரண்டு பாற்கு முரித்தென்றுசொல்லுவ ராசிரியர் - எ-று. அஃதெவன்-அவையெவன் என வரும். னகரவீற்று யிரண்டுபாற்கும் பொதுவாய்வருதலி னிதனைவேறுகூறினார் அஃதேல் நுமக்கிவன் எவனாமென வுயர்திணைக்கண்ணும் வருமாலெனின் ஆண்டுஅதுமுறைபற்றிநிற்றலி னஃறிணைக்கண்வந்ததெனவே படுமென்பது. அஃதேல் நுமக்கிவனென்னமுறையனாமென்பதல்ல தென்ன முறையாமென்பது பொருந்தாதெனின் என்னமுறை யென்ப தாண்டுமுறைமேனில்லாதொறறுமை நயத்தான் முறையுடையான் மேனிற்றலினமையுமென்க. எவனென்பதோர்பெயருமுண் டஃதிக்காலத்தென்னென்று மென்னையென்றுநிற்கும். ஈண்டுக்கூறப்பட்டது வினைக்குறிப்பு முற்றென்க. (உஉ)

உசஎ. இன்றிலவுடைய வென்னுங்கிளவியு, மன் றுடைத்தல்ல வென்னுங்கிளவியும், பண்புகொள்கிளவியு முளவென் கிளவியும், பண்பினாகிய சினைமுதற்கிளவியு, மொப்பொ டுவரூஉங் கிளவியொடு தொகைஇ,யப்பாற்பத்துங் குறிப் பொடுகொள்ளும்.

இன்று இல என்பன முதலாகியபத்தும் வினைக்குறிப்புச்சொல்லாம் - எ-று, அவற்றுள் இன்று-இல-உடைய-அன்று- உடைத்து-அல்ல - உள - என் பனதம்மையுணர்த்திநின்றன. அல்லனபொருளுணர்த்திநின்றன, இன்று-இல-கோடுடைத்து-கோடுடைய-அதுவன்று-அவையல்ல - உள-எனவரும். ஈண்டுங் கோடின்று-கோடில எனவுடைமைக்கு மறுதலையாய வின்மைபற்றி வருவன வுங்கொள்க, உடையவென்பது முதலாயவற்றைச் செய்யுளின்பநோக்கி மய ங்கக்கூறினார், அவ்வேழனையும் பொருள்பற்றி யோதாராயினார் கிளந்தோதி யவழிச் சூத்திரஞ் சுருங்கா வாகலானென்பது. உளதென்பது பெருவழக்க திற்றன்மையி னுளவென்பதேகூறினார், அதுவன்மினமுடித்த லென்பதனாற் கொள்ளப்படும், பண்புகொள்கிளவி-கரிது-கரிய-செய்யது-செய்ய-எனவரும். பண்பினாகிய சினைமுதற்கிளவி - நெடுஞ்செவித்து - நெடுஞ்செவிய -எனவரும். பண்படுத்த சினைபற்றியல்ல தவ்வினைக்குறிப்பு நில்லாமையிற் பண்பினாகிய வெனப் பண்பை முதனிலையாகக்கூறினார். பெருந்தோளனென உயர்திணைக் கண்ணும் பண்படுத்துவருதலொன்றெனமுடித்தலென்பதனாற்கொள்க. வேற் றுமைப்பொருள் பற்றிவருங்காற் பிறிதின்கிழமையும் உறுப்பின்கிழமையல்லா த்தற்கிழமையும், ஏழாம்வேற்றுமைப் பொருண்மையும்பற்றி யஃறிணைவினைக்

குறிப்புப் பயின்றுவாராமையிற் சிலக்கிழமையேகூறினர். அப்பொருள்பற்றிப் பயிலாதுவருவன வுரையிற்கொள்ளப்படும். சிறப்புடைப்பொருளைத் தானினிதுகிளத்தலென்பதனாற் கொள்ளினுமமையும். அறிந்தமார்க்கட்டாருகதில்ல-மெல்விரன்மந்தி குறைகூறுஞ்செம்மற்றே - எ-ம், அணித்தோ சேய்த்தோ கூறுமினெமக்கே - எ-ம் வரும். வடாது-தெனாது-என்பனவு மேழாம்வேற்றுமைப்பொருண்மைக்கண்வந்த வினைக்குறிப்புப்பெயருமாம். ஒப்பொடுவருங்கிளவி-பொன்னன்னது-பொன்னன்ன-எனவரும். ஒப்பொடுவருதலாவது பொருள்பற்றிவருதல். வழக்குப்பயிற்சிநோக்கிப் பத்தெனவரையறுத்தவாறு. ()

உகஅ. பன்மையுமொருமையும் பாலறிவந்த, வன்னமரபிற்குறிப்பொடுவரூஉங், காலக்கிளவி யஃறிணைமருங்கின்,மேலைக்கிளவியொடு வேறுபாடிலவே.

பன்மையுமொருமையுமாகிய பால்விளக்கிக் குறிப்புப்பொருள்பற்றிவரும்வினைச்சொன் மேற்கூறப்பட்ட வஃறிணைவினையொடொக்கும் - எ-று. வாய்பாடுபற்றியும் பொருள்பற்றியும்வரும் கூறியவிருவகையு மெஞ்சாமற்றழுவுதற் கன்னமரபினென்றார். ஒத்தலாவ தஃறிணைவினைக்கோதிய வீற்றுட்பொருந்துவன வினைக்குறிப்பின்கண்வருங்காலு மவ்வீற்றானவ்விடமுங் காலமும் விளக்குதல். பொருந்துவனவாவன ஆகாரமும் வகாரமுமொழித்துக் குற்றுகரமூன்று மகாரமுமாம். அவற்றுட் டகரமூர்ந்த குற்றுகரமொன்றன் படர்க்கையென்புழிக் கூறுதலானொழிந்த மூன்றுமீண்டுக்கொள்ளப்படும். இவ்வியப்பால்விளக்குதன் மேற்காட்டப்பட்டனவற்றுட் கண்டுகொள்க. (உசு)

உகக. முன்னிலைவியங்கோள் வினையெஞ்சுகிளவி, யின்மைசெப்பல்வேறென்கிளவி, செய்ம்மனசெய்யுஞ் செய்தவென்னு, மம்முறைநின்ற வாயெண்கிளவியும், பிரிபுவேறுபடூஉஞ் செய்தியவாகி, யிருதிணைச்சொற்கு மோரன்னவுரிமைய.

முன்னிலைமுதலாகச் செய்தவென்பதீறாகக்கூறிய முறையானின்ற வெட்டுச்சொல்லும் பொதுமையிற்பிரிந் தொருகாலுயர்திணையுணர்த்தியு மொருகாலஃறிணையுணர்த்தியும் வேறுபடுந்தொழிலையுடையவா யிருதிணைச்சொல்லாதற்கு மொத்தவுரிமைய - எ - று. முன்னிலைவினைச்சொல்லாவது எதிர்முகமாய்நின்றான் றொழிலுணர்த்துவது. வியங்கோளேவற்பொருட்டாய் வருவது; வாழ்த்துதன்முதலாகிய பிறபொருளுமுடைத்தாகலி னிச்குறிபிகுதிநோக்கிச்சென்ற குறியெனவுணர்க. வினையெஞ்சுகிளவி வினையையொழிபாக வுடையவினை. இன்மைசெப்பல் இல்லை-இல்-என்பன. வேறென்பது தன்னையுணர்த்திநின்றது. செய்ம்மனவென்பது மனவீற்றுமுற்று யெதிர்காலமுணர்த்தும். செய்யுமென்பது முற்றுமெச்சமுமாகிய விருநிலைமையுமுடைத்தா யும்மீற்றானிகழ்காலமுணர்த்தும். செய்தவென்பது அகரவீற்றெச்சமா யிறந்தகாலமுணர்த்

தும். செய்ம்மனமுதலாகிய மூன்றுவாய்பாட்டானு மவ்வவ்வீற்றவாய்க்கால மூணர்த்தும் உண்மன, உண்ணும், உண்ட-என்னுந் தொடக்கத்தனவெல்லாந் தழுவப்பட்டன. அவற்று னவைதழுவப்பட்டவாறென்னையெனின் - எல்லாத் தொழிலுஞ் செய்தல்வேறுபாடாகலிற் பொதுவாகியசெய்த லெல்லாத்தொ ழிலையுமகப்படுத்துநிற்குமதனு னவற்றுனவை தழுவப்படுமென்க. அவைபொ துவுஞ்சிறப்புமல்லவேல் என்செய்யாநின்றுனென்று வினவழி உண்ணுநின் றுனெனச் செப்புதலியையாதாமென்க. இதுசெய்து செய்பென்பனவற்றிற்கு மொக்கும். அஃதேற்சிலவற்றை யீற்றுனுணர்த்திச் சிலவற்றை வாய்பாட்டா னுணர்த்தியதென்னையெனின் அம்மீறு மன்னீறு மையீறு முதலாகிய சொற் கள் காலப்பன்மையான்வரும் வாய்பாட்டுப்பன்மையாற் சூத்திரம்பெருகு மென்றஞ்சி அவற்றையீற்றுனுணர்த்திக் காலவேறுபா டிலேசாற்கொள்ளவை த்தார். அக்காலப்பன்மையில்லனவற்றை வாய்பாட்டானு முணர்த்துமவ்வீற் றுனுமுணர்த்துப. முற்றுதலும் பலவாய்பாட்டாற் பயின்றுவருதலு முடை மையான் முன்னிலைவினையைமுன்வைத்தார். ஏவற்பொருண்மை முன்னிலைக் கண்ணுமுண்மையிற் பொருளியை புடைத்தாகலானும், இடங்குறித்து முற்று ய்வருதலொப்புமையானும் அதன்பின்வியங்கோள்வைத்தார். அதனபின் முற் றுதலொப்புமையா னின்மைசெப்பல், வேறென்கிளவி, செய்ம்மன என்பன வற்றை வைத்தன்முறைமையானும், முற்றின்கண் வினையெச்சமுண்மையானு ம், ஈற்றுப்பன்மையொடு பயின்றுவருதலானும் வினையெச்சம்வைத்தார். இன் மைபற்றிவரும் வினையெச்சமுமுண்மையா னதனொடியையவின்மைசெப்பல் வைத்தார். வினைக்குறிப்பாத லொப்புமையானும், செய்ம்மனவிற் பயிற்சியு டைமையானு மதன்பின் வேறென்கிளவிவைத்தார். முற்றுதலொப்புமையா னதன்பின் செய்ம்மனவைத்தார். முற்றுநிலைமையு முடைத்தாகலி னதன்பின் செய்யுமென்பதுவைத்தார். பெயரொச்சமாதலொப்புமையா னதன்பின்செய் தவென்பதுவைத்தார். இவ்வாறியையபுபற்றிவைத்தமையா னமமுறைநின்றவெ ன்றுர். பிரிபுவேறுபடூஉஞ் செய்தியவாகியெனவே வேறுவேறுணாத்தினல்ல தொருசொல்சொல்லுதற்க ணிருதிணையு முணர்த்தாமைபெறுதும். (உரு)

உஉo. அவற்றுண், முன்னிலைக்கிளவி, இ ஐ ஆயென வரூஉ மூன்று,மொப்பத்தோன்றுமொருவர்க்குமொன்றற்கும்.

கூறப்பட்டவிரவுவினைகளுண் முன்னிலைச்சொலிகரவீறு மையீறுமா யீறுமாகியமூன்று மொருவற்கு மொருத்திக்கு மொன்றற்குமொப்பச்செல் லும். எ-று. முன்னிலைக்கிளவியென்பதற்குமுடிபு அவைதாமம்மா மெம்மே மென்புழியவைதாமெனபதற்குரைத்தாங்குரைக்க. இகரந்தடறவூர்ந்தெதிர்கா லம்பற்றிவரும். ஐகாரமம்மீறறிற்குரியவெழுத்துப்பெற்றும், ஆயீறுமீற்றிற்கு ரியவெழுத்துப்பெற்றுமூன்றுகாலமும்பற்றிவரும். உ-ம்.உரைத்தி-உண்டி-தின் றி-எ-ம், உண்டனை-உண்ணுநின்றனை-உண்பை-எ-ம். உண்டாய்- உண்ணுநின்று ய்-உண்பாய்-எ-ம்வரும். ஒழிந்தவெழுத்தொடுமொட்டிக்கொள்க. ஐயசிறிதெ ன்னையூக்கியெனஇகரஞ்சிறுபான்மை ககரம்பெற்றுவரும். உண்- தின்-இட-கி

ட-என்னுந்தொடக்கத்து முன்னிலையொருமைபெறுமா றென்னையெனின் அவை ஆயீருதலெச்சவியலுட்பெறப்படுமென்க. (௨௬)

௨௨௧. இர் ஈர் மின்னென வரூஉ மூன்றும், பல்லோர் மருங்கினும் பலவற்று மருங்கினுஞ், சொல்லோ ரனைய வென்மனார் புலவர்.

இர்-ஈர்-மின்னென்றுமீற்றையுடைய மூன்றுசொல்லும்பல்லோர்கண்ணும் பலவற்றின்கண்ணுஞ்சொல்லுதற்கொத்தவுரிமைய- எ-று. இர்ஈறு அர் ஈற்றிற்குரிய வெழுத்துப்பெற்றும் ஈரீறுஆரீற்றிற்குரிய வெழுத்துப்பெற்று மூன்றுகாலமும்பற்றிவரும். மின்னீறுபிறவெழுத்துப்பெறாதேற்றவழியுகரம் பெற்றெதிர்காலம் பற்றிவரும். உ-ம். உண்டனிர்-உண்ணாநின்றனிர்-உண்குவிர்-எ-ம், உண்டீர்-உண்ணாநின்றீர்-உண்குவீர்-எ-ம், உண்மின் - தின்மின்-உரிஞுமின்-எ-ம் வரும். ஒழிந்தவெழுத்தொடு மொட்டிக்கொள்க. முன்னிலை வினைக்குறிப் புயர்திணை வினைக்குறிப்பிற்கோதிய பொருள்பற்றி ஐகாரமுமாயுமிருவுமீ ருமென்னு நான்கீற்றவாய்க் கழலினை-நாட்டை-பொன்னன்னை - கரியை-எ-ம் கழலினாய்-நாட்டாய்-பொன்னன்னாய் - கரியாய்-எ-ம், கழலினிர் - நாட்டினிர் பொன்னன்னிர்-கரியிர்-எம், கழலினீர்-நாட்டினீர்-பொன்னன்னீர்-கரியீர்-எம் வரும். ஒழிந்தபொருளொடு மொட்டிக்கொள்க. போறியெனவிகாரவீற்று வினைக்குறிப்புமுண்டாலெனின் போன்றனை-போன்றனை-என்பனபோலவந்து தெரிநிலைவினையாய்நின்றதெனமறுக்க. அஃறிணைவினைக்குறிப்பு முயர்திணைவினைக் குறிப்பிற்கோதியபொருள்பற்றிவருதலினவற்றை யெடுத்தோதிற்றென்னை யெனின்-அன்மைமுதலாயின-பொருள்பற்றிவந்தனவெனக்கிளந்தோதலாற் சுருக்கத்தவகையானும், சினைமுதற்கிளவிபண்புமடுத்துவருதலுயர்திணை யதிகாரத்துப்பெறப்படாமையானு மவற்றையோதுவாரேனைப்பொருளுமுடனோதினார் முன்னிலைவினைக்குறிப்புப் பலவாதலானும், எடுத்தோதா வழிப்படுவதோர்குறைபாடின்மையானுமவற்றையத்துணரவைத்தாரென்பது. அல்லதெடுத்தோத்தில்வழியுய்த்துணர்வதெனினுமமையும் முன்னிலைவினையீற்று னெதிர்காலம் பற்றிவருமிகரத்தையுமின்னையுமுதலு மிறுதியும்வைத்து மூன்றுகாலமும்பற்றி வருநான்கீற்றையுந் தம்முளியையயிடைவைத்தார். அல்லது பொருண்மை கருதாது சூத்திரயாப்பிறகேற்பவைத்தாரெனினுமமையும். (௨௭)

௨௨௨. எஞ்சியகிளவி யிடத்தொடுசிவணி, யைம்பாற்குமுரிய தோன்றலாறே.

முன்னிலைவினையொழித்தொழிந்தவேழுவினைச்சொல்லு மூன்றிடத்துக்குமைந்துபாற்குமுரிய தத்தம்பொருட்கட்டோன்றுமிடத்து. எ - று. இவ்வாறு பொதுவகையானெல்லாவிடத்தொடு மெல்லாப்பாற்குமுரியவாதலெய்தினவெனினு முன்னர்விலக்கப்படுவனவொழித் தொழிந்தவிடமும் பாலும்பற்றிவருமாறீண்டுக்காட்டப்படும். உ-ம்-அவன்செல்க - அவள்செல்க - அவர்செல்க-அது செல்க-அவைசெல்க-எ-ம், உழுதுவந்தேன்-உழுதுவந்தேம் - உழுதுவந்தாய்-உழுதுவந்தீர் - உழுதுவந்தான் - உழுதுவந்தாள் - உழுதுவந்தார் - உழுதுவந்த

து - உழுதுவந்தன -எ-ம், யானில்லை-யாமில்லை-நீயில்லை-நீயிரில்லை- அவனில்லை- அவளில்லை - அவரில்லை - அதுவில்லை - அவையில்லை - எ-ம், யான்வேறு - யாம் வேறு - நீவேறு - நீயிர்வேறு - அவன்வேறு - அவள்வேறு - அவர்வேறு அதுவேறு- அவைவேறு - எ-ம், யானுண்மன - யாமுண்மன - நீயுண்மன - நீயிருண்மன - அவனுண்மன - அவளுண்மன - அவருண்மன - அதுவுண்மன- அவையுண்மன - எம், யானுண்ணுமூண் - யாமுண்ணுமூண் - நீயுண்ணுமூண்- நீயிருண்ணுமூண் - அவனுண்ணுமூண் - அவளுண்ணுமூண் - அவருண்ணுமூண்- அதுவுண்ணுமூண் - அவையுண்ணுமூண் - எ - ம், அவன்வரும் - அவள்வரும்- அதுவரும் - அவைவரும் - எ-ம். யானுண்டவூண் - யாமுண்டவூண் - நீயுண்டவூண் - நீயிருண்டவூண் - அவனுண்டவூண் - அவளுண்டவூண் - அவருண்டவூண்-அதுவுண்டவூண் - அவையுண்டவூண்-எமவரும். (உஅ)

உஉகூ. அவற்றுள், முன்னிலைதன்மை யாயீரிடத்தொடு, மன்
றாகும் வியங்கோடகிளவி.

மேலெஞ்சிய கிளவியென்னப்பட்ட வேழனுள்வியங்கோட்கிளவி முன்னிலையுந்தன்மையுமாகிய விரண்டிடத்தொடு நிலைபெறுதாம் - எ - று. ஆயீரிடத்தொடு கொள்ளாதென்னது மன்றாகுமென்றதனு னவ்விடத்தொடு சிறுபான்மை வருதல்கொள்க. மன்றுதல் பெரும்பான்மையுநிகழ்தல். சிறுபான்மைவருவன நீவாழகவென்னும் வாழத்துதற்பொருண்மைக்கண்ணும், யானுநின்னொடுடனுறைக வென்னும் வேண்டிக்கோடற் பொருண்மைக்கண்ணும் வருவனவாம். கடாவுகபாக நின்கால்வன்னெடுந்தேரோ யென்பதும் - வேண்டிக்கோடற் பொருண்மைக் கண்வநததாம். தன்மைக்கணேவலில்லை முன்னிலைக்கண்வருவதுண்டேற் கண்டுகொள்க. அஃதேல்வியஙகோளீறுகூறுராயிற றென்னையெனின் எழுத்தோத்தினுள் ஏவல்கண்ணிய வியங்கோட்கிளவியுமென அகரவீற்றுளெடுத்தலாற பொருந்தியமெய்யூர்நதகரவீருய்வருதலும், செப்பும்வினவும்வழாஅலோம்பல் - எ-ம், சொல்வரைந்தறியப்பிரித்தனர் காட்டல்- எ-ம், மறைகரும்சாலைமரீஇயதொராஅல்-எ-ம், உடம்பொடு புணர்த்தலானல்லீருய் வருதலும், ஆலீருய்வருதலும் பெறுதலின் வியங்கோளீறுங்கூறிருறொனவேபடும்-பிறவுமுளவேறகொள்க. (உக)

உஉச. பல்லோர்படர்க்கை முன்னிலைதன்மை, யவ்வயின் மூ
ன்று நிகழுங்காலத்துச், செய்யுமென்னுங் கிளவியொடு
கொள்ளா.

பல்லோர்படர்க்கையுமுன்னிலையுந்தன்மையுமாகிய வவவயின் மூன்றுநிகழுங்காலத்து வருஞ்செய்யுமென்னுஞ் சொல்லொடுபொருநதா எ - று. அவ்வயினென்றதிடமும் பாலுமாகிய வெஞ்சியகிளவிக்குரியபொருட்க ணென்றவாறு நிகழுங்காலத்துச் செய்யுமென்னுங் கிளவியொடென் றதனுற்றேன்றுங்காலமுணர்த்தியவாறு. இவையிரண்டுசூத்திரமும் பொதுவகையானெய்தியனவற்றை விலக்கின்றன. (௩0)

௨௨௫. செய்துசெய்யூச் செய்புசெய்தெனச், செய்யியர்செய்யி
ய செயின்செயச்செயற்கென, வவ்வகையொன்பதும்
வினையெஞ்சுகிளவி.

பொதுவகையானெய்தியவற்றுள்வியங்கோட்கிளவிக்குஞ்செய்யுமென்னு
ங்கிளவிக்குமெய்தாதனவிலக்கி இனிநிறுத்தமுறையானே வினையெச்சத்தின
துபாகுபாடுணர்த்துகின்றார். செய்தென்பதுமுதலாகச்சொல்லப்பட்டவொன்
பதும் வினையெச்சமாம். எ-று. அவ்வகையொன்பதுமென்றது இறுதிநின்றவி
டைச்சொல்லான் வேறுபட்டவொன்பதுமென்றவாறு. அவ்விடைச்சொலாவ
னஉகரமுமூகாரமும் புகரமுமெனவுமியருமியவுமின்னுமகரமுங்குகரமுமாம்.
செய்கென்கிளவிவினையொடுமுடியினும்-எ-ம், செய்யாவென்னுமுன்னிலைவினை
ச்சொல்-எ-ம்-இறுதியிடைச்சொலேற்றவாற்றாற்பிரித்துணரவாய்பாடோதினா
ற்போல ஏற்றவாற்றா னிறுதியிடைச்சொற்பிரித்துணர்ந்துகொள்ள வேண்டும்
வாய்பாடுபற்றியோதினார். உகரங்கடதறவூர்ந்தியல்பாயும்,ஏனையெழுத்தூர்ந்தி
கரமாய்த்திரிந்தும்,நெடிலீற்றுமுதனிலைமுன்னர்யகரம்வரத் தான்கெட்டும்இற
ந்தகாலம்பற்றிவரும்.இவ்வுகரவீறிகரமாதலும்,யகரம்வரக்கெடுதலும்வினையெ
ஞ்சுகிளவியும்வேறுபலகுறிய என்பதனாற்பெறப்படும். நக்கு-உண்டு-வந்து-செ
ன்று - எ-ம்,எஞ்சி - உரிஞி-ஓடி-எ-ம், ஆய்-போய்-எ-ம்வரும். சினைஇ-உரைஇ-
இரீஇ-உடீஇ - பராய்-தாய்-தூயென்பனவோவெனின் அவைசெய்யுண்முடிபெ
ன்க. ஆகி-போகி-ஓடி-மலர்த்தி-ஆற்றி-எஞ்சி-என்புழிமுதனிலை குற்றுகரவீறுத
லினேனையெழுத்தாதலறிக. கடதறஎன்பனகுற்றுகரத்தொடுவரு மிடமுந்தனி
மெய்யாய்வருமிடமுந்தெரிந்துணர்க. அஃதேல்-ஆய்-என்பதனை யகரவீறென்
றும, ஓடி-என்பதனை இகரவீறென்றுங்கொள்ளா துகரவீறென்றதென்னையெ
னின் நன்றுசொன்னாய்-இகரவிறுதியிடைச்சொலாயினிறுதியிடைச்சொலெல்
லாத்தொழிலும்பற்றிவருதலிற் செலவுவரவென்பனவற்றொடும்வரவேண்டும்.
இனிச்செய்தெனெச்சத்துகரமுமிறுதியிடைச்சொலாகலின்ஆகுத லோடுதலெ
ன்னுந்தொழில்பற்றியும்வரவேண்டும். செலவுவரவுபற்றியிகரம் வாராமையா
னும்,ஆகுதலோடுதலபற்றியுகரம்வாராமையானும் இறுதியிடைச்சொலிகரமே
யாகவுகரமேயாகவொன்றாவதல்லதிரண்டெனப்படாதாம். உகரமொன்றாய்நி
ன்றுகடதறவூர்ந்தவிதிவினைக்கட்பயின்றுவருதலானும், எதிர்மறையெச்சமெல்
லாம்பெரும்பான்மையுமுகரவீறாயல்லதுவாராமையானும் உகரமியல்பாகவிக
ரந்தன்றிரிபென்றலே முறைமையென்க. யகரவீற்றிற்குமிஃதொக்கும். ஊகா
ரம் உண்ணூவந்தான்-தின்னூவந்தான்-எனப் பின்வருந்தொழிற் கிடையின்றி
முன்வருந்தொழிலின்மே லிறந்தகாலம்பற்றிவரும்; அஃதுண்ணூவென வாகா
ரமாயும்வரும். பகரவுகரம் நகுபுவந்தானென நிகழகாலம்பற்றிவரும்; நகா
நின்றுவந்தானென்றவாறு. ஈண்டுநிகழ்காலமென்றது முடிக்குஞ்சொல்லா
னுணரப்படுந்தொழிலொ டுடனிகழ்தல். உரிஞுபு என வுகரமும்,கற்குபு எனக்
குகரமுமேற்றவழிப்பெறுதல்கொள்க. எனவென்பது கடதறவூர்ந் திறந்தகால
ம்பற்றிமுடிக்குஞ்சொ லுணர்த்தப்படுந் தொழிற்குத் தன்முதனிலைத்தொழில்
காரணமென்பது படவரும்; சோலைபுக்கென வெப்பநீங்கிற்று-உண்டெனப்

பசிகெட்டது-உரைத்தெனவுணர்ந்தான்- மருந்துதின்றெனப் பிணிநீங்கிற்று-எனவரும். எஞ்சியென-எ-ம், உரிஞியென - எ -ம்- ஏனையெழுத்தொடுவருமாறறிந்தொட்டிக்கொள்க. இயர்-இய-என்பன வெதிர்காலம்பற்றி உண்ணியார்-தின்னியர், உண்ணிய-தின்னிய-எனவரும். போகியர்-போகிய - எனவேற்றவழிக் ககரம்பெற்றுவருதலுங்கொள்க. இன் எதிர்காலம்பற்றிக் காரணப்பொருட்டாய்வரும்; மழைபெய்யிற் குளநிறையும் - மெய்யுணரின் வீடெளிதாம்-எனவரும். நடப்பின்-உரைப்பின்-என வேற்றவழிப் பகரமபெற்று வருதலுங்கொள்க. அகரம்-மழைபெய்யக் குளநிறைந்தது - ஞாயிறுபடவந்தான்-உண்ணவந்தான்- என மூன்றுகாலமும்பற்றிவரும். உரைப்ப-உரைக்க-என வேற்றவழிப் பகரமுங் ககரமும் பெறுதல்கொள்க. குகரம்-உணற்குவந்தான் தினற்குவந்தான்-என வெதிர்காலம்பற்றிவரும். புகரமுங் குகரமு முகரத்தின்கண்ணும், எனவுமியவ மகரத்தின்கண்ணு மடங்குமெனின்ஆரீற்றின் மாரீறடங்காமைக் குறைத்தாங்குறைக்க. மாரீறு ஆரீற்றின்கண்ணு மடங்குமென்றுரைக்க. செயற்கென்னும் வினையெச்சம் நான்கனுருபேற்றுநின்ற தொழிற்பெயரின் வேறுதல் கிளவியாக்கத்துட்கூறினும். திரியாதுநிற்கும் ஊகாரமும், புகாரமும், எனவும், இயரும், இயவுமென்று மைந்தீற்றுவினையெச்சமும் வழக்கினுளிக்காலத்து வாராவாயினுஞ் சான்றோர்செய்யுளு ளவற்றது வாய்பாட்டு வேற்றுமையெல்லாங் கண்டுகொள்க. (௬௯)

௨௨௯. பின்முன்கால்கடை வழியிடத்தென்னு, மன்னமரபிற்
காலங்கண்ணிய, வென்னகிளவியு மவற்றியல்பினவே.

பின்றுமுன்றுங்காலுங்கடையும்வழியுமிடத்துமென்னு மீற்றவாய்வருவனவு மவைபோலக் காலங்கண்ணிவருவன பிறவும் வினையெச்சமாம்-எ-று. நீயிர்பொய்கூறியபின் மெய்கூறுவாராயார்-எ-ம், நீயிவ்வாறுகூறுகின்றபினுரைப்பதுண்டோ - எ-ம்-பின்னிறப்பு நிகழ்வும்பற்றியும்,மருந்துதின்று முன்னோய்தீர்ந்ததெனை முன்னிறந்தகாலம்பற்றியும், வலனுகவினையென்றுவணங்கி நாம்விடுத்தக்கால்-எ-ம், அகன்றவர் திறத்தினிநாடுங்கால்-எ-ம்- காலீறு மூன்றுகாலமும்பற்றியும், தொடர்கூரத்துவாமைவர்தக்கடை எனக் கடையீறிறந்தகாலம்பற்றியும், உரைத்தவழி-உரைக்கும்வழி, உரைத்தவிடத்து- உரைக்குமிடத்து-என வழியென்னுமீறு மிடத்தென்னுமீறு மூன்றுகாலமும்பற்றியும்வரும், கால்வழியிடத்தென்பனவற்றி . னிகழ்காலத்துவாய்பா டெதிர்காலத்துக்குமேற்றலறிக. கூதிர்போயபின்வந்தார் - எ - ம், நின்றவிடத்துநின்றார் - எ-ம் பின்முதலாயின பெயரொச்சத்தொடும்வந்தவழியிறப்புமுதலாகிய காலங்கண்ணுமையி னவற்றைநீக்குதற்குக் காலங்கண்ணியவென்றார். காலவேறுபாட்டான்வரும் வாய்பாட்டுப்பன்மையெல்லா மொருவாய்பாட்டாற் றழுவலாசாமையி னிவறறையீறுபற்றியோதினார். அன்னமரபிற் காலங்கண்ணியவென்ன கிளவியுமென்றதனான்-உண்பாக்கு-வேபாக்கு எனவரும் பாக்கீறும்,உண்பான் வருவானென்னுமானீறும், கனவிற்புணர்ச்சிநடக்கலுமாங்கேயென்றுமும்மீறும், அற்றுலளவறிந்துண்கவென்னு மாலீறும், எதிர்மறைபற்றிக் கூறு

மறகுறித்ததன்மேற்செல்லுமெனவரு மல்லீறும், கூறுமைநோக்கிக் குறிப்பறிவானென்னு மகரவைகாரவீறுங்கொள்க. என்னகிளவியுமென்றதனுன் இன்றி-அன்றி-அல்லது - அல்லால் - எனவருங் குறிப்புவினையெச்சமுங்கொள்க. பிறவுமன்ன. (௬௨)

௨௨௭. அவற்றுண், முதனிலைமூன்றும் வினைமுதன்முடிபின.

மேற்சொல்லப்பட்ட பதினைந்துவினையெச்சத்துள் முதற்கணின்றசெய்து செய்யூச்செய்பு என்னுமூன்றுந் தம்வினைமுதல்வினையான் முடியும்-எ-று. உண்டுவந்தான்-உண்ணூவந்தான்- உண்குபுவந்தான்-எ-ம், கற்றுவல்லனாயினுன்-கல்லூவல்லனாயினுன்-கற்குடுவல்லனாயினுன்-எ-ம் வரும். உரற்கால்யானையொடித்துண்டெஞ்சியயாஅவிளை நீழற்றுஞ்சுமெனச்செய்தெனெச்சம் வினைமுதல்வினையல்லா வினையான்முடிந்ததாலெனின் அது வினையெஞ்சுகிளவியும் வேறுபலகுறிய வென்புழிப்பெறப்படும். இதுமுன்னர் வினையெஞ்சுகிளவிக்கு வினையுங்குறிப்பு நினையத்தோன்றிய முடிபாகும்மேயெனப்பொதுவகையான் முடிவனவற்றை யெதிரதுநோக்கி யிவைமூன்றும் வினைமுதன்முடிபினவென நியமித்தவாறு. அஃதேல்தனையு மாண்டேகூறுகவெனின் ஆண்டுச்செய்து செய்யூச்செய்பென்னுமூன்றுமெனக் கிளந்தோதுவதல்லது முதனிலை மூன்றுமெனத் தொகுத்தோதலாகாமையாலும், ஈண்டியைபுடைத்தாகலானு மாண்டுக்கூறு தீண்டுக்கூறினுனென்பது. (௬௩)

௨௨௮. அம்முக்கிளவியுஞ் சினைவினைதோன்றிற், சினையொடு முடியா முதலொடுமுடியினும், வினையோரனைய வென்மனார்புலவர்.

வினைமுதன் முடிபினவாய வம்மூன்றுசொல்லுஞ் சினைவினைநின்று சினைவினையொடுமுடியாது முதல்வினையொடுமுடியினும் வினையானொருதன்மைய- எ - று. வினையானொருதன்மையவென்றது முதல்வினையொடுமுடியினு முதலொடு சினைக்கொற்றுமை யுண்மையாற் பிறவினைகொண்டனவாகா; வினைமுதல் கொண்டனவேயாமென்றவாறு. கையிற்றுவீழ்ந்தான்-கையிறூவீழ்ந்தான்-கையிறுபுவீழ்ந்தான்-எனவரும். உரற்கால்யானை யொடித்துண்டெஞ்சிய வென்புழிப்போலக் கையிற்றென்னுஞ் செய்தெனெச்சங் கையிறவெனச் செயவெனெச்சப் பொருட்டாய்நின்றதெனவமையும். இச்சூத்திரம் வேண்டாவெனின் அற்றன்று வினைமுதல் வினைகொள்ளாதவழியன்றே அது பிறபொருட்டாயது வினைமுதல்வினைகொண்டு தன்பொருளை யுணர்த்துவதனையே பிறபொருண்மேனின்றதென்றல் பொருந்தாமையானதுகடாவன்றென்க. (௬௪)

௨௨௯. ஏனையெச்சம் வினைமுதலானு, மானவந்தியையும் வினைநிலையானுந், தாமியன்மருங்கின் முடிபுமென்ப.

முதனிலை மூன்றுமல்லாத பிறவினையெச்சம் வினைமுதல்வினையானுமான் வெத்துபொருந்தும் பிறவினையானும் வரையறையின்றித் தாமியலுமாற்றான்

முடியும்-எ-று. மழைபெய்தெனப புகழ்பெற்றது-மழைபெய்தெனமரங்குழை த்தது-எ-ம், மழைபெய்யியரெழுந்தது-மழைபெய்யியர் பலிகொடுத்தார-எ-ம், மழைபெய்யிய முழங்கும் மழைபெய்யியவான பழிச்சுதும்-எ-ம, மழைபெய் யிற் புகழ்பெறும்-மழைபெய்யிற் குளநிறையும் - எ - ம், மழைபெய்யப் புகழ் பெற்றது-மழைபெய்ய மரங்குழைத்தது - எ-ம், மழைபெயற்கு முழங்கும்- மழைபெயற்குக் கடவுள்வாழ்த்துதும்-எ-ம், இறநதபின்னிளமைவாராது-கண வனினிதுண்டபின் காதலிமுகமலாநதது-எ-ம், ஆவைவினைமுதல் வினையும்பிற வினையுங்கொண்டவாறு கணடுகொளக. வரையறையின்றி யல்லனவு மிருவ கைவினையுங் கோடலவழக்கினுட் கண்டுகொள்க. வரையறைபின்றியிருவகை வினையுங்கோடலின் வினையுங்குறிபபுநினையத்தோன்றிய முடிபாகும்மேயென் னும் பொதுவிதியான்முடிவனவற்றை யீண்டுக்கூறல்வேண்டாவெனின் வினை யெச்சங்களு ளொருசாரன வினைமுதல்வினைகொள்ளுமென்றசஞன் ஏனையெ ச்சம் பிறவினையேகொள்ளுமோ விருவகைவினையுங்கொளளுமோ வென்றைய மா மதனையகீங்க விவ்வாறுகூறல்வேண்டுமென்பது. அஃதேல் வினையொடு முடித லீண்டுககூறப்பட்டமையி னெச்சவியலுட் குறிபபு முடியாகுமெனவ மையும் வினையுமெனல வேண்டாவெனின குறிப்புமென்னு மும்மையாற்றழு ப்படுவது செய்ததாகலிற் றெற்றெனவிளக்காமையானும், வினைமுதலெனபது பெயாக்கும் வினைக்கும் பொதுவாகலானும் வினையுமெனல்வேண்டுமென்பது.

௨௯௦. பன்முறையானும் வினையெஞ்சுகிளவி, சொன்முறைமு
டியா தடுக்குநவரினு, முன்னதுமுடிய முடியுமன்பொ
ருளே.

ஒருவாய்பாட்டானு மறறைபபலவாயபாட்டானும் வினையெஞ்சுகிளவி யசொற்கண் முறையானமுடியா தடுககிவரினு முன்னின்றவெச்சமுடியவே னையவும் பொருண்முடிந்தனவாம். எ-று. உ - ம. உண்டுதின்றோடிப்பாடிவந தான்-எ-ம், உண்டுபருகூத்தின்குபுவநதான்-எ-ம வரும். முன்னதுமுடிய முடி யுமென்றாராயினும் உண்டுதின்றுமழைபெய்யக்குளநிறையுமென்றவழி முன் னதன்றொழிலா னேனையமுடியாமையிற் பன்முறையானடுக்குங்கான முன் னதன்றொழிலான் முடிதற்கேற்பனவேகொள்க. சொன்முறையான் முடியா மையாவது தம்மொடுதாமும் பிறசொல்லுமுடியாமை. உண்டுவந்தான்-தின் றுவந்தான் எனச்சொற்றொறும் வினையியைதன்மரபு; அங்ஙனமில்லாது தம் முளியையில்லனவடுக்கிவந் திறுதிவினையெச்சத்திற்கு முடிபாகிய சொல்லா னெல்லாமுடியினு மிழுக்காதெனவமைத்தவாறு. வினையெச்சம் பன்முறை யானுமடுக்கி யொருசொல்லான் முடியுமெனவே பெயரெச்சமொருமுறையா னடுக்கி யொருசொல்லான் முடியுமென்பதாம். நெல்லரியுமிருநதொழுவரொ ன்னும் புறத்தொகைப்பாட்டினுள் தெண்கடற்றிரைமிசைப்பாயுந்து-எ-ம், த ண்குரவைச்சீர்தூங்குந்து-எ-ம், எல்வளைமகளிர் தலைக்கைதரூஉந்து-எ-ம், மூந் நீர்ப்பாயும்-எ-ம், செய்யுமென்னும் பெயரெச்சமடுக்கி ஓம்பாவீகைமாவேறோ வவிபுனலம்புதவின் மிழலையென்னு மொருபொருள்கொண்டு முடிந்தவாறு

கண்டுகொள்க. ஆங்குத்தாங்காவுறையுணல்லூர் கெழீஇயவென்னும் பெயரெச்சமிடைநிலையாய்வந்தது. பிறவுமன்ன. (௩௬)

உ௩௧. நிலனும்பொருளுங் காலமுங்கருவியும், வினைமுதற்கிளவியும் வினையுமுளப்பட, வவ்வறுபொருட்குமோரன்ன வுரிமைய, செய்யுஞ்செய்த வென்னுஞ்சொல்லே.

வினையெச்சமுணாத்தி யினிப்பெயரெச்சமுணர்த்துகின்றார். செய்யுஞ்செய்தவென்னுஞ் சொற்க டொழின்முதனிலையெட்டனு ளின்னதற்கிதுபயனாக வென்னு மிரண்டொழித்தேனையாறுபொருட்கு மொத்தவுரிமைய. எ-று. இவ ற்றிற்கொத்த வுரிமையவெனவேயொழிந்த விரண்டற்கு மிவற்றொடொப்பவு ரியவாகா சிறுபான்மையுரிமையவென்றவாறும். வாழுமில்-கற்குநூல்-துயிலுங்காலம்-வனையுங்கோல்-ஓதும்பார்ப்பான் - உண்ணுமூண்-எனச் செய்யுமென் னும் பெயரெச்சத்து உம்மீறுசாலவெழுத்துப்பெறு தாறுபொருட்கு முரித்தாய்வந்தவாறு. புக்கவில்-உண்டசோறு-வந்தநாள்-வென்றவேல்-ஆடியகூத்தன்-போயினபோக்கு-எனச்செய்தவென்னும் பெயரெச்சத்திறுதியகரம் - கடதற வும்-யகரனகரமும்-ஊர்ந்தப்பொருட்குரித்தாய் வந்தவாறு. நோய்தீருமருந்து-நோய்தீர்ந்தமருந்து-என்னு மேதுபபொருண்மை கருவிக்கணடங்கும். அரசன் ஆகொடுக்குமபார்ப்பான்-ஆகொடுத்தபார்ப்பான்-எ-ம், ஆடையொலிக்குங்கூலி-ஆடையொலித்தகூலி-எ-ம்- ஏனையிரண்டற்குஞ் சிறுபான்மையுரியவாய்வந்தவாறு. எல்லைப்பொருள் பஃறொழில்பற்றிவருஞ் சிறப்பின்றாகலிற் றொழின்முதலொடுகூறு தின்மையுடைமை நாற்றந்தீர்தலென்னும் பொருண்மையாற்றழீஇக்கொண்டாராகலாற் பழமுதிருங்கோடு-பழமுதிர்ந்தகோடு- எனச் சிறுபான்மை யெல்லைப்பொருட்குரியவாதலுங்கொள்க. நின்முகங்காணுமருந்தினேனென்னுமாலென்புழிக்காட்சியை மருந்தென்றாகலிற் காணுமருந்தென்பது வினைப்பெயர்கொண்டதாம். பொச்சாவாக்கருவியாற்போற்றிச்செயினென்புழிப் பொச்சாவாக்கருவியென்பதுமது. ஆறுசென்றவிய ரென்புழி விய ராறுசேறலான் வந்தகாரியமாகலிற் செயப்படுபொருட்கணடங்கும். நூற்றநூலானியன்ற கலிங்கமும் ஒற்றுமைநயத்தான் நூற்றகலிங்கமெனப்படும். நூலாக்கலிங்கம் வாலரைக்கொளீஇ- எனப்பெயரெச்சத்தி னெதிர்மறைபொருட் பெயர்கொண்டுநின்றதூஉம் பிறவுங்கூறப்பட்ட பொருட்கணடங்குமாற றிந் தடக்கிக்கொள்க. உண்டான்சாத்தன்-மெழுகிற்றுத்திண்ணை என்புழிஉண்டான் மெழுகிற்று என்னுமுற்றுச்சொல்வினைமுதலுஞ் செயப்படுபொருளு மாகிய பொருட்குரியவாமாறுபோல இவ்விருவகைப்பெயரெச்சமு நிலமுதலாகிய பொருட்குரியவாமென வவற்றதுறுபொருட்குமுரிமை யுணர்த்திய வாறு. முடிபெச்சவியலுட்பெறப்படும். பொருளைக்கிளவியென்றார். நிலமுதலாயினவற்றைப் பெயரெச்சப் பொருளென்றது முடிக்குஞ்சொல்லெனின் அவ்வறுபொருட்குமென்னா தவ்வாறுபெயர்க்குமென்றோதுவர். ஓதவே பெயரெஞ்சுகிளவி பெயரொடுமுடிமேயென்னுஞ் சூத்திரம்வேண்டாவாம் அதனானிவைபொருளென்றலேயுரை. அம்மாமென்பனமுதலாக வகரமீறாகக்கிடந்த

விறுதியிடைச்சொற்குக் கூறப்பட்டகாலவெழுத்துச் சிறியசிதைந்துவரினுஞ் சிறுபான்மை பிறவெழுத்துப்பெறினு நுண்ணுணர்வுடையோர்வழக்குநோக்கி யுணர்ந்துகொள்க. (௩௭)

உ௩உ. அவற்றொடுவருவழிச் செய்யுமென்கிளவி, முதற்கண் வரைந்த மூவீற்றுமுரித்தே.

நிலமுதலாகிய பொருளொடுவருஞ்சாற் செய்யுமென்னுஞ்சொல் விலக்கப்பட்ட பல்லோர்படர்க்கை முன்னிலைதன்மையென்னு மூவகைக்குமுரித்தாம். எ-று. உரித்தாய்வருமாறெஞ்சியகிளவியென்னுஞ் சூத்திரத்துக்காட்டினும். அவற்றொடுவருவழியெனச் செய்யுமென்னுஞ்சொல் அப்பொருண்மைக்குரித்தாயு முரித்தன்றியும் வருமிருநிலைமையுடைத்தென்பது பெறுதும். அவற்றொடுவருநிலைமை பெயரெஞ்சுகிளவியாம். அவற்றொடு வாராநிலைமை முற்றுச்சொல்லாம். அஃதேல நுமுற்றுச்சொலாதற்கண்ணும், பெயரெஞ்சுகிளவியாதற்கண்ணும் வேறுமைபண்ணையெனின் வினைமுற்றிற்கு மேனையெச்சத்திற்கும் வேற்றுமையாவதே யீண்டும்வேற்றுமையாமெனக. முற்றுச்சொல்லிற்கு மெச்சத்திற்கும் வேற்றுமையாதெனின் பிறிதொருசொல்லொடியையாது தாமேதொடர்தற்சேற்கும்வினைச்சொன் முற்றும். பிறிதோர்சொற்பற்றியல்லது நிறறலாற்றுவினைச்சொலெச்சமாம். இதந்முள் வேற்றுமையென்க. அஃதேல் உண்டானென்பது சாத்தனென்னும்பெயரவாவியன்றேநிற்பதுதாமேதொடரமென்றதென்னையெனின் அற்றன்று உண்டான்சாத்தனென்றவழியெற்றையென்னுமவாய்நிலைக்கட்சோற்றையென்பது வந்தியைந்தாறபோல உண்டானென்றவழியாரென்னு மவாய்நிலைக்கட் சாத்தனென்பது வந்தியைவதல்ல தப்பெயர்பற்றியல்லது நிற்றலாற்று நிலைமைத்தன் றச்சொலென்பது. இவ்வேற்றுமைவிளங்க வாசிரியர் முற்றுச்சொலென்று மெச்சமென்றுமவற்றிற்குப் பெயர்கொடுத்தார். (௩௮)

உ௩௩. பெயரெஞ்சுகிளவியும் வினையெஞ்சுகிளவியு, மெதிர்மறுத்துமொழியினும் பொருணிலைதிரியா.

பெயரெச்சமும் வினையெச்சமுஞ் செய்தறபொருளவன்றி யச்செய்தற்பொருண்மை யெதிர்மறுத்துச்சொல்லினு மிவ்வெச்சப்பொருண்மையிற் றிரியா எ-று. பொருணிலையாவது தம்மெச்சமாகிய பெயரையும் வினையையுங்கொண்டல்ல தமையாதநிலைமை. என்சொல்லியவாறோவெனின் செய்யும்-செய்த-எ-ம், செய்து-செய்பூ-செய்பு-எ-ம்- பெயரெச்சமும், வினையெச்சமும் விவாய்பாட்டானோதப்பட்டமையானுண்டுச்செய்யா, செய்யாதென்னு மெதிர்மறைவாய்பாடடங்காமையி னவையெச்சமாதல்பெறப்பட்டின்றதனு னவையுமவ்வெச்சப்பொருண்மையிற்றிரியாதுபெயரும்வினையுங்கொள்ளுமெனா எய்தாததெய்துவித்தவாறு. உண்ணுவில்லம்- உண்ணுச்சோறு-உண்ணுக்காலம்-வனையாக்கோல்-ஓதாப்பார்ப்பான்-உண்ணுவூண்-எ-ம், உண்ணுதுவந்தான்-உண்ணுமேடாயினுன்-எ-ம் வரும். உண்ணுஎன்பதுண்ணும், உண்டவென்னு மிர

ண்டற்கெதிர்மறையாம். உண்ணாதவென்பதுமது. உண்ணுதென்பது - உண்டு, உண்ணூ, உண்குபு-என்பனவற்றிற்கெதிர்மறை. உண்ணுமைக்கென்பது உண்ணியர், உண்ணிய, உணற்கெனபனவற்றிற்கும், உண்ணவெனச்செயற்கென்பது படவருஞ்செயவெனெச்சத்திற்கும் எதிர்மறையாம். உண்ணுமை, உண்ணுமலென்பனவுமதற்கெதிர்மறையாம். பிறவுமெதிர்மறைவாய்பாடுளவேற்கொள்க. உண்டிலன்-உண்ணுகின்றிலன்-உண்ணலன்-உண்ணுனென முற்றுச்சொல்லு மெதிர்மறுத்துநிற்குமாகலிற் பொருணிலைதிரியாதென வதற்கோதாராயிற்றென்னையெனின் விதிவினைக்குமெதிர்மறைவினைக்கும் பொதுவாகவீறுபற்றியோதியதல்லது விதிப்பொருளவாகிய .வாய்பாடுபற்றியோதாமையி னுண்டுக்கட்டுரையில்லையென்க. (௩௯)

௨௩௪. தத்தமெச்சமொடுசிவணுங்குறிப்பி, னெச்சொலாயினு மிடைநிலைவரையார்.

தத்தமெச்சமாகிய வினையொடுபெயரொடுமியையுங் குறிப்பையுடைய வெச்சொலாயினு மிவ்வெச்சத்திற்கு மவற்முன்முடிவனவாகிய தமக்குமிடைநிற்றலவரையார். எ-று. உழுதுசாத்தன்வந்தான்-உழுதேரொடுவந்தான்-எ-ம் கொல்லுங்காட்டுளயானை-கொன்றகாட்டுளயானை-எ-ம் வரும். சிவணுங்குறிப்பின்வரையாரெனவே சிவணக்குறிப்பின்வரைபவென்பதாம். சிவணக்குறிப்பினவாவன ஒருதலையாகவெச்சத்தொ டியைந்துநில்லாது நின்றசொல்லொடுந்தாமேயியைந்து கவர்பொருட்படுவனவென்க. உண்டுவிருந்தொடுவந்தான், வல்லமெறிந்த நல்லிளங்கோசர்தந்தைமல்லல்யானைப்பெருவழுதியென்றவழி விருந்தொடுண்டென வினையெச்சத்தொடுமியைதலிற்பொருள்கவர்க்கும். வல்லமெறிதனல்லிளங்கோசர்க்கு மேற்குமாகலி னுண்டும்பொருள்கவர்க்கும். அன்னசிவணுக்குறிப்பினவாம். எச்சொலாயினு மென்றதனன் உழுதோடிவந்தான், கவளங்கொள்ளாக்களித்தயானையென வெச்சமுமிடைநிலையாதல்கொள்க. சாத்தனுண்டுவந்தான், அறத்தையரசன்விரும்பினுன்-உண்டான்வந்தசாத்தனென வேனைத்தொடர்க்கண்ணும் பிறசொல்லிடைநிற்றலொக்குமாயினுமெச்சத்தொடர்க்கிடைநிற்பனவற்றின்க ணாராய்ச்சியுடைமையாற்கூறினர்.(௪0)

௨௩௫. அவற்றுள், செய்யுமென்னும் பெயரொஞ்சுகிளவிக்கு, மெய்யொடுங்கெடுமே யீற்றுமிசையுகர,மவ்விடனறிதலென்மனர்புலவர்.

மேற்சொல்லப்பட்ட வெச்சங்களுட்செய்யுமென்னும் பெயரொச்சத்திற்கீற்றுமிசைநின்றவுகரந் தன்னூரப்பட்டமெய்யொடுங்கெடுமிடமறிக.எ-று. கெடுமிடமறிகவென்றதவ்வீற்றுமிசையுகரம்யாண்டுங்கெடாது வரையறுக்கவும்படாது சான்றோர் வழக்கினுள்ளுஞ் செய்யுளுள்ளும் வந்தவழிக்கண்டுகொள்கவென்றவாறு. வாவும்புரவி-போகும்புழையென்பன ஈற்றுமிசையுகர மெய்யொடுங்கெட வாம்புரவி-போம்புழையெனநின்றன. பிறவும்வந்தவழிக்கண்

டுகொள்க. செய்யுமென்னும் பெயரெஞ்சுகிளவிக்கு ஈற்றுமிசையுகரம் மெய் யொடுங்கெடுமெனவே செய்யுமென்னு முற்றுச்சொற்கு ஈற்றுமிசையுகர மெ ய்யொடுங்கெடும் மெய்யொழித்துங்கெடுமென்பதாம். அம்பலூரு மவனொடு மொழிமே-சாரனுடவென்றேழியுங் கலுழ்மே எனவரும். பிறவுமன்ன. (சுக)

உ௩௬. செய்தெனெச்சத் திறந்தகால, மெய்திடனுடைத்தே வாராக்காலம்.

செய்தென்னும் வினையெச்சத்தின திறந்தகாலம் வாராக்காலத்தையெய் துமிடமுடைத்து. எ - று. ஈண்டுச்செய்தெனெச்சத் திறந்தகாலமென்பதுமுடி பாய்வரும் வினைச்சொல்லானுணர்த்தப்படுந்தொழிற் கவ்வெச்சத்தா னுணர் த்தப்படுந்தொழின்முன் னிகழ்தலே. அதுவாராக்காலமெய்தலாவது அம்முன் னிகழ்வுசிதையாம லவ்வெச்சமெதிர்காலத்துவருதல். நீயுண்டுவருவாய்-உழு துவருவாய்-எனச்செய்தெனெச்சம் பொருள்சிதையாம லெதிர்காலத்துவந்த வாறுகண்டுகொள்க. எய்திடனுடைத்தே வாராக்காலமென்றதனு னுண்டுவந் தா னுழுதுவந்தானென வவ்வெச்சமிறந்தகாலத்துவருத லிலக்கணமென்பதா ம். இறநதகாலத்துச்சொல் எதிர்காலத்துவந்ததாயினு மமைகவெனக் கால வழுவமைத்தவாறு. (சஉ)

உ௩எ. மூன்றிலைக்காலமுந் தோன்றுமியற்கை, யெம்முறைச் சொல்லு நிகழுங்காலத்து, மெய்ந்நிலைப்பொதுச்சொற் கிளத்தல்வேண்டும்.

மூன்றுகாலத்து முளதாமியல்பையுடைய வெல்லாப்பொருண்மையு நி கழ்காலத்துப் பொருணிலைமையுடைய செய்யுமென்னுஞ்சொல்லாற் கிளக்க. எ-று. மூன்றிலைக்காலமுந் தோன்றுமியற்கை யெம்முறைப் பொருளுமாவன மலையதுநிலையும், ஞாயிறுதிங்களதியக்கமு முதலாயின. அவற்றை யிறந்தகா லத்துச்சொல்லானு மெதிர்காலத்துச்சொல்லானு மேனைநிகழ்காலத்துச்சொ ல்லானுஞ் சொல்லாதிறந்தகாலத்தையு மெதிர்காலத்தையு மகப்படுத்து மூன் றுகாலத்திற்கும் பொதுவாய்நிற்குஞ்செய்யுமென்னுஞ் சொல்லாற்சொல்லுக வென்றவாறு. பொதுச்சொற்கிளத்தல்வேண்டுமெனவே முற்றானும் பெயரெ ச்சத்தானுங்கிளக்கவென்பதாம். மலைநிற்கும்-ஞாயிறியங்கும்-திங்களியங்கும்- எ-ம், வெங்கதிர்க்கனலியொடு மதிவலந்திரிதருந் தண்கடல்வையத்து - எ-ம் வரும். நிகழ்காலத்துச்சொல்லாயினு மொருகாற்பொதுவாகலுடைமையாற் பொதுச்சொலென்றார். நிகழ்காலச்சொல் இறந்தகாலமு மெதிர்காலமுமுண ர்த்துதல் வழுவாயினு மமைகவெனவமைத்தவாறு. (சங)

உ௩அ. வாராக்காலத்து நிகழுங்காலத்து, மோராங்குவருஉம் வினைச்சொற்கிளவி, யிறந்தகாலத்துக் குறிப்பொடுகிள த்தல், விரைந்தபொருள வென்மனார்புலவர்.

எதிர்காலத்து நிகழ்காலத்து மொருபடியாகவரும் வினைச்சொற்பொரு ண்மையை யிறந்தகாலத்தாற்சொல்லுதல் விரைவுபபொருளையுடைய. எ-று. சோறுபாணித்தவழி யுண்ணுதிருந்தானைப் போகல்வேண்டுங் குறைவுடையா னொருவ னின்னுமுண்டிலையோவென்றவழி உண்டேன் போந்தேனென்னும் ண்ணுகின்றானு மவனதுசொலலும். ஆண்டெதிர்காலத்திற்கு நிகழ்காலத்தி ற்கு முரியபொருளை விரைவுபற்றி யிறந்தகாலத்தாற கூறியவாறு கண்டுகொ ள்க. தொழிலிறந்தனவன்றேனுஞ் சொல்லுவான்கருத்துவகையா னிறந்தன வாகச் சொல்லப்படுதலிற் குறிபபொருட்கிளத்தலென்றார். எதிர்காலத்துப்பொ ருண்மையைக்கிளத்தலும், நிகழ்காலத்துபபொருண்மையைக்கிளத்தலுமென விரண்டாகலான் விரைந்தபொருளவெனறார். இதுவுங்காலவழுவமைதி.(சச)

*உ௩௬. மிக்கதன்மருங்கின் வினைசசொற்சுட்டியப், பண்புகுறி த்த வினைமுதற்கிளவி, செய்வதில்வழி நிகழுங்காலத்து, மெய்பெறத்தோன்றும் பொருட்டாகும்மே.

மிக்கதன்கணிகழும் வினைச்சொலலைநோககித திரிவின்றிப்பயக்கும் அம் மிக்கதனதுபண்பைககுறித்துவரும் வினைமுதற்சொற சுட்டிச்சொல்லப்படு ஞ்சொல்வினைமுதலில்லாதவிடத்து நிகழகாலத்தான யாப்புறுத்த பொருளை யுடைத்தாம். எ-று. முயற்சியுநதெய்வமுமாகிய காரணஙகளுட் டெய்வஞ்சி றநதமையா னதற்குக்காரணமாகிய தவஞ்செய்தல தாயைககோறன்முதலா கிய தொழிலைமிக்கதெனறார். தெய்வமாயவிருவினைமிக்கதன்கண் வினைச்சொ ல்லாவன தவஞ்செய்தான்-தாயைக்கொனறான்-என்னுந தொடக்கத்தன. அப் பண்புகுறித்தவினைமுதறகிளவியாவன-சுவாக்கமபுகும்-நிரயம்புகும்-என்பன. யாவன்றவஞ்செய்தா னவன்சுவாக்கம்புகும, யாவனறாயைக்கொனறா னவனி ரயம்புகும-எ-ம், ஒருவன்றவஞ்செய்யிற் சுவர்ககம்புகும், தாயைக்கொல்லி னிரயம்புகும் - எ - ம், மிக்கதன்வினைச்சொனோக்கி யம்மிக்கதன்றிரிபில் பண் புகுறித்த வினைமுதற்கிளவி நிகழ்காலத்தான் வநதவாறுகண்டுகொள்க. அப் பண்புகுறித்தவென்பதற்கு மிக்கதாகிய விருவினைபபயனுறுத லவ்வினைமுத ற்கியல்பெனபது குறித்தவென்றுரைபபினுமமையும். பொதுவகையாற் கூறு தொருவற்சுட்டியவழி அவன்றவஞ்செய்து சுவர்க்கம்புக்கான்- புகுவன்-என வினைககாலத்தாறசொல்லப்படுதல் னிவ்வாறொருவற சுட்டுதலைநீக்குதறகு வி னைமுதற்கிளவியாயினுஞ் செய்வதில்வழியென்றார். செய்வதென்பது செய் கையையென்பாருமுளர். வினைச்சொலென்றதேனுந தவஞ்செய்தான் சுவர்க் கம்புகும், தாயைச்கொன்றானிரயம்புகும் - எனவினைப்பெயராய் வருதலுங் கொள்க. தவஞ்செய்யிற சுவர்க்கமபுகுவனென வெதிர்காலத்தாற் சொல்லப் படுவதனை நிகழ்காலத்தாற்சொல்லுதல் வழுவாயினுமமைகவெனவமைத்தவா று. அஃதேலியற்கையுந தெளிவுங்கிளக்குங்காலையென்புழி இதுதெளிவாயட ங்குமெனின் அற்றன்றுஇயற்கையுநதெளிவுஞ் சிறநதகாரணமாகிய தெய்வத் தானுகப் பிறிதொன்றனைகத் திரிதலுடைய.; இதுதிரிபின்றகலானும், இறநத காலத்தாற் சொல்லப்பட்டமையானு மாண்டடங்காதென்பது. இதன்றிரிபின் மையு மவற்றதுதிரிபுடைமையும் விளங்குதற்கன்றே யாசிரியர்மிக்கதன் மரு

ங்கினென்றும், இயற்கையுந் தெளிவுங் கிளக்குங்காலையென்று மோதுவாரா யிற்றென்பது. (௪௫)

௨௪௰. இதுசெயல்வேண்டு மென்னுங்கிளவி, யிருவயினிலையும் பொருட்டாகும்மே, தன்பாலானும் பிறன்பாலானும்.

இதுசெயல்வேண்டுமென்பது படவருஞ்சொல் தன்பாலானும் பிறன்பாலானுமென விரிடத்துநிலைபெறும்பொருண்மையை யுடைத்தாம். எ-று. தானென்றது செயலதுவினைமுதலை. ஓதல்வேண்டுமென்றவழி வேண்டுமென்பதோதற்கு வினைமுதலாயினுற்கும், அவனோதலைவிரும்புந் நந்தைக்குமேற்றவாறுகண்டுகொள்க. இதனு னொருசார்வினைச்சொற்பொருள்படும் வேறுபாடுணர்த்தினர். உணர்த்தாக்காற்றெற்றென விளங்காமையினென்பது. (௪௬)

௨௪௪. வன்புறவரூஉம் வினாவுடைவினைச்சொ, லெதிர்மறுத்துணர்த்துதற் குரிமையுமுடைத்தே.

துணிந்து திட்பமெய்துதற்குவரும்வினாவையுடைய வினைச்சொல் வினைநிகழ்வுணர்த்தா தெதிர்மறுத்துணர்த்துதற் குரித்தாதலுமுடைத்து. எ-று. வினாவாவன ஆ ஏ ஓ என்பன.கதத்தானுகக்களியானுக-ஒருவன்றெருளா தொருவனைவைதான் அவன்றெருண்டக்கால் வையப்பட்டான் நீயென்னைவைதாயென்றவழித்தான்வைததைபுணராமையான வைதேனேயென்னும் - ஆண்டவ்வினாவொடுவந்தவினைச்சொல் வைதிலேனென்று மெதிர்மறைப்பொருள் படவந்தவாறு கண்டுகொள்க. வினாவொடுவந்தவழி யெதிர்மறைப்பொருள் படுமாறென்னையெனின் சொல்லுநர்குறிப்புவகையா னெதிர்மறைப்பொருளுணர்த்திற்றென்க. எதிர்மறைப்பொருளுணர்த்திற்றுண்டேகாரமாகலின் வினைச்சொலெதிர்மறுத்துணர்த்துதற்குரிமையு முடைத்தென்ற னிரம்பாதெனின் எதிர்மறையாயின் பயன்றருவது வினாவுடைவினைச்சொலென்றாராகலி னஃதெதிர்மறுத்தலை யாண்டையதெனமறுக்க. வினைநிகழ்வுணர்த்தற்பாலதுவினையதுநிகழாமையுணர்த்துதல் வழுவாயினுமமைகவென வினைச்சொற்பற்றி மரபுவழுவமைத்தவாறு. (௪௭)

௨௪௨. வாராக்காலத்து வினைச்சொற்கிளவி, யிறப்பினுநிகழ்வினுஞ் சிறப்பத்தோன்று, மியற்கையுந்தெளிவுங் கிளக்குங்காலை.

எதிர்காலத்துக்குரிய வினைச்சொற்பொருண்மை யியற்கையாதலுந் தெளியப்படுஞ்சொல்லுமிடத்து இறந்தகாலச்சொல்லானு நிகழ்காலச்சொல்லானும் விளங்கத்தோன்றும்.எ-று. இயற்கையென்பது பெறறிமுதலாயினவற்றுனுணரப்படுவது. றெளிவு நூற்றெளிவான்வருவது. ஒருகாட்டின்கட்போவார் கூறைகோட்படுத லொருதலையாகக்கண் டஃதியற்கையென்று துணிந்தான் கூறைகோட்படாமுன்னு மிக்காட்டுட்போகிற் கூறைகோட்பட்டான் கூறைகோட்படும்-என்னும். எறும்புமுட்டைகொண்டுதிட்டையேறின் மழைபெய்தல்நூலாற்றெளிந்தான் அவைமுட்டைகொண்டு தெற்றியேறியவழி மழைபெய்யு

முன்னுமழைபெய்தது-மழைபெய்யும்-என்னும். என எதிர்காலத்திற்குரியபொருளிறந்தகாலத்தானு நிகழ்காலத்தானுந் தோன்றியவாறுகண்டுகொள்க. இது காலவழுவமைத்தவாறு. (சஅ)

உசக. செயப்படுபொருளைச் செய்ததுபோலந், தொழிற்படக்கிளத்தலும் வழக்கியன்மரபே.

செயப்படுபொருளைச் செய்தவினைமுதல்போலத் தொழிற்படக்கிளத்தலும் வழக்கின்கணியலுமரபு. எ-று. வழக்கியன்மரபெனவே இலக்கணமன்றென்றவாறும். உ-ம். திண்ணைமெழுகிற்று-கலங்கழீஇயிற்று-எனவரும். திண்ணைமெழுகப்பட்டது, கலங்கழுவப்பட்டது-என்றுமன்னுகற்பாலது அவ்வாய்பாடன்றி வினைமுதல் வாய்பாட்டான்வருதலும் வழக்கினுளுண்மையானமைகவெனவினைச்சொற்பற்றி மரபுவழுவமைத்தவாறு. செயப்படுபொருளைவினைமுதல்வாய்பாட்டாற்கிளததலேயன்றி வெளிதினடபபடுதனேக்கியரிசிதானேயட்டதெனச்செயப்படுபொருளைவினைமுதலின் றொழிற்படக்கிளத்தலும் வழக்கியன்மரபென்றற்குத்தொழிற்படக்கிளத்தலுமென்றார். இதனைக்கருமககருத்தனென்ப. (சக)

உசச. இறப்பேயெதிரவே யாயிருகாலமுஞ், சிறப்பத்தோன்று மயங்குமொழிக்கிளவி.

இறப்புமெதிர்வுமாகிய விரண்டுகாலமுமயங்குமொழிப்பொருளாய் விளங்கத்தோன்றும். எ-று. இவர்பண்டிப்பொழிலகத்துவிளையாடுவர்-நாளையுவன் வாளொடுவெகுண்டுவநதான் பின்னியென்செய்குவை-எனவரும். அவ்விரண்டு காலமுமயங்குமொழிபபொருளாய்த்தோனறுமெனவே அவற்றை யுணர்த்துஞ்சொன்மயங்குமென்றவாறும். அவைபெயரும்வினையுமாய்மயங்குதலின் மயங்குவினைச்சொற்கிளவியென்னுதுபொதுப்படமயங்குமொழிக்கிளவி யென்றார். தோன்றுமென்பதுபெயரெச்சமெனினுமிழுக்காது. பண்டு விளையாடினுரென்றும், நாளைவருவனென்றுங்கூறற்பாலதவ்வாறன்றித்தம்முண்மயங்கக்கூறினுமமைகவெனக்காலவழுவமைத்தவாறு. (௫0)

உசரு. ஏனைக்காலமு மயஙகுதல்வரையார்.

இறப்புமெதிர்வுமேயன்றிநிகழ்காலமுமவற்றொடுமயங்கும். எ-று. இவள் பண்டிப்பொழிலகத்துவிளையாடும்-எ-ம், நாளைவரும் - எ-ம்வரும். சிறபபத்தோன்றுமெனவும், மயங்குதல்வரையாரெனவுங்கூறினுர் இறப்புமெதிர்வுமயஙகுதல்பயின்றுவருதலானும், அத்துணைநிகழ்காலமயக்கம் பயின்றுவாராமையானுமென்க. மூன்றுகாலமுந்தம்முண்மயங்குமென்முரோறுமேற்புழியல்லது மயங்காமைகொள்க. ஏற்புழிக்கொள்ளவேவநதானைவருமென்றலும், வருவானைவநதானென்றலு மெனவிவை முதலாயின வெல்லாம் வழுவென்பதாம். பிறவுமன்ன. (௫க)

ஆறுவது

வினையியல் முற்றிற்று.

ஏழாவது

# இடைச்சொலியல்.

உ௪௬. இடையெனப்படுப பெயரொடும்வினையொடும், நடை
பெற்றியலுந் தமக்கியல்பிலவே.

நிறுத்தமுறையானேயிடைச்சொலுணர்த்திய வெடுத்துக்கொண்டார்; அ
தனானிவ்வோத்திடைச்சொலோத்தென்னும்பெயர்த்தாயிற்று. மொழிக்குமுன்
னும்பின்னும்வருமாயினும்பெரும்பான்மையுமிடைவருதலி னிடைச்சொலென்
னும்பெயர்த்தாயிற்று. இடைச்சொலென்றுசொல்லப்படுவனபெயரொடும் வி
னையொடும்வழக்குப்பெற்றியலுந்தாமாகநடக்குமியல்பில. எ-று. இடைச்சொ
ற்கிளவியுமுரிச்சொற்கிளவியுமவற்று வழிமருங்கிற்றோன்றுமென்றதனானிடை
ச்சொல்பெயரும்வினையுஞ்சார்ந்துவருதல்பெறப்பட்டமையாற்பெயரொடும்வி
னையொடு நடைபெற்றியலுநதமக்கியல்பிலவென்றதீண்டுப்பெயரும் வினையுமு
ணர்த்தும்பொருளாயவற்றைச்சார்ந்துநின்று அவற்றைவெளிப்படுத்தலல்லது
தமக்கெனப்பொருளுடையவல்லவென்றவாறும். அதுகொறேழிகாமநோயே
எ-ம்,வருகதில்லம்மவெஞ்சேரிசேர-எ-ம்-பெயரும்வினையுஞ்சார்ந்தப்பொருளை
வெளிப்படுத்தவாறுகண்டுகொள்க. சார்ந்துவருதலுரிச்சொற்கு மொத்தலிற்ற
மக்கெனப்பொருளின்மையிடைச்சொற்குச்சிறப்பிலக்கணமாம். தமக்கியல்பி
லவேயென்றது சார்ந்தல்லதுவாராவெனவலியுறுத்தவாறு.பெயரொடும்வினை
யொடுநடைபெற்றியலுந்தமக்கியல்பிலவெனப்பொதுப்படக்கூறியவதனாற்சா
ரப்படுஞ்சொல்லின்வேறாய்வருதலேயன்றி உண்டனன்-உண்டான்-எ-ம், எ
ன்மனார்-என்றிசினோர்-எ-ம், அருங்குரைத்து-எ-ம் - அவற்றிற்குறுப்பாய்வரு
தலுங்கொள்க. இனியோருரை- இடைச்சொற்கிளவியுமுரிச்சொற்கிளவியுமவ
ற்றுவழிமருங்கிற்றோன்றுமென்பதற்குச்சார்ந்துவருதலா னிடைச்சொல்லுமு
ரிச்சொல்லுஞ்சிறப்பில இவையுட்படச்சொன்னான்காமென்பதுகருத்தாகலின்
இடைச்சொல்பெயரும்வினையுஞ்சார்ந்துவருமென்னும்வேறுபாடதனாற்பெறப்
படாது. என்னைஇடைச்சொல் பெயர்சார்ந்துவரினுமுரிச்சொல் வினைசார்ந்து
வரினுமவற்றதுசிறப்பின்மையும், சொன்னான்காதலுமுணர்த்துதல்சிதையாதா
கலானதனானிடைச்சொல்பெயரும்வினையுஞ்சார்ந்துவருமென்ப திச்சூத்திர
தாற்கூறல்வேண்டுமென்ப. அவ்வுரையுரைப்பார்பெயரினும்வினையினு மெய்த
மாறியென்பதற்குப்பெயரும்வினையுஞ்சார்நதென்றுபொருளுரைப்ப. (௧)

உ௪எ. அவைதாம், புணரியனிலையிடைப் பொருணிலைக்குதந
வும், வினைசெயன்மருங்கிற் காலமொடுவருநவும், வே
ற்றுமைப்பொருள்வயி னுருபாகுநவு, மசைநிலைக்கிளவி
யாகிவருநவு, மிசைநிறைக்கிளவி யாகிவருநவுந், தத்தங்
குறிப்பிற் பொருள்செய்குநவு, மொப்பில்வழியாற்பொ
ருள்செய்குநவுமென், றப்பண்பினவே நுவலுங்காலை.

மேற்சொல்லப்பட்டவிடைச்சொற்கடாம் இரண்டுசொல்புணருமிடத்தப் பொருணிலைக்குதவுவனவும், வினைச்சொல்லைமுடிக்குமிடத்தாக் காலப்பொருளவாய்வருவனவும், செயப்படுபொருண்முதலாகிய வேற்றுமைப் பொருட்கணுருபென்னுங்குறியவாய்வருவனவும், பொருளுடையவன்றிச்சார்த்திச்சொல்லப்படுந்துணையாய்வருவனவும், வேறுபொருளுணர்த்தா திசைநிறைத்தலே பொருளாகவருவனவும், தத்தங்குறிப்பாற்பொருளுணர்த்துவனவும், ஒப்புமை தோன்றுதவழியவ்வொப்புமைப்பொருள்பயப்பனவுமெனக்கூறப்பட்டவேழியல்பையுடையசொல்லுமிடத்த. எ-று. புணரியனிலை புணரியலதுநிலை. ஆண்டுப்பொருணிலைக்குதவுதலாவது எல்லாவற்றையுமென்புழி வற்றுச்சாரியைநிலைமொழிப்பொரு ளஃறிணையென்பதுபடவருதலும், எல்லாநம்மையுமென்புழிநம்முச்சாரியைநிலைமொழிப்பொ ருடன்மைப்பன்மையென்பதுபடவருதலுமாம. அல்லனவுந் தாஞ்சார்ந்துவருமொழிப்பொருட் குபகாரமுடையவாய் வருமாறோர்ந்துகொளளப்படும். அல்லாககாற் சாரியைமொழியாகாவென்பது. வினைச்சொலொருசொல்லாயினுமுதனிலையுமிறுதிநிலையு மிடைச்சொல்லுமாகப்பிரித்துச்செய்கைசெய்து காட்டப்படுதலின் வினைசெயன்மருங்கினென்றா. அம்முடிபுணர்த்தாமைக்குக்காரணம புணரியனிலையிடை உணரத்தோன்றுமென்புழிச்சொல்லப்பட்டது. அவற்றுளொருசாரனபாலுணர்த்தாமையானும், எல்லாங்காலமுணர்த்துதலானுங்காலமொடுவருநவுமென்றார். வேற்றுமைப்பொருளவாய்வருவனபிறசொல்லுமுளவாகலி னவற்றைநீக்குதற்குருபாகுநவுமென்றார். பிறசொல்லாவன கண்ணகன்ஞாலம்- ஊர்க்காணிவந்த பொதும்பரொனவேழாம்வேற்றுமைப்பொருட்கண் வருங்கண் கான்முதலாயினவும், அளையயாகன்மாறே-சிறந்தோன்பெயரன்பிறநதமாறே,முறையுள்க்கோலோச்சுமன்னவன்-எனமூன்றும்வேற்றுமைப்பொருட்கண்வருமாறுஉளியென்பனவுமன்னபிறவுமாம். அஃதேல்வேற்றுமையுருபுமென்றே றுவாரோதவே யிவைநீங்குமெனினஃதொக்கும் அவைதம்மையுநதழீஇக்கோடற்குவேற்றுமைப் பொருள்வயினென்றார். அவைவருங்கானிலைமொழியுருபிற்கேற்றசெய்கை யேற்புழிப்பெறுதலுமுடைமையினுருபாகுநவுமென்றார். இஃதிருபொருளுணர்த்தலானிருதொடராகக்கொள்க. அசைத்தல் சார்த்துதல்;பொருளுணர்த்தாது பெயரொடும்வினையொடுஞ்சார்த்திச்சொல்லப்பட்டு நிற்றலினசைநிலையாயிற்று. அவைஅந்தின்முதலாயின. புகழாதிகுமல்லரோ - பெரிதேயுமாத்திசினோரேஎனச்சார்ந்தமொழியைவேறுபடுத்துநிற்றலினசைச்சொலாயினவென்பாருமுளர். செய்யுட்கணிசைநிறைத்துநிற்றலினிசைநிறையாயின. குறிப்புச் சொல்லுவான்கண்ணதாயினுமவன்குறித்தபொருளைத்தானுங்குறித்துநிற்றலிற்றத்தங் குறிப்பினென்றார். சொல்லுவான்குறித்தபொருளைத்தாம்விளக்குமென்பார்தத்தங் குறிப்பிற்பொருளெனரா். கூரிதோர்வாண்மன்என்புழிமன்றுணன்றியோசை வேறுபாட்டாலொருகாற்றிட்பமின்றெனனுந்தொடக்கத் தொழியிசைப்பொருடோன்றலும்பெறப்படும். பொருட்கும்,பொருளைப்புலனாகவுடைய வுணர்விற்குமொற்றுமைகருதிப்பொருளுணர்வைப்பொருளென்றார்.மிகுதிசெய்யும்பொருவென்பதுமுதலாயினவற்றிற்குமீதொக்கும். ஒக்குமென்னுஞ் சொல்லன்றேயாப்புமையுணர்த்துவது அச்சொல்லாண்டின்மையா னொப்புமைதோன்

ருமையாஞெபபில்வழியாலென்ருர். உவமையொடுபொருட்கொப்பில்லை யெ ன்ருரல்லரென்பது. ஒக்குமெனலுஞ்சொல்லையொப்பென்று மொன்ருரு முளர். ஒப்பில்வழியாற்பொருள்செய்குநவாவன அன்ன - ஏய்பப, உறழ, ஒப்ப- என் பனமுதலாகப்பொருளதிகாரத்துக்கூறபபட்ட முப்பத்தாறனுளொக்கு மென் பதொழியவேனையவாம். சாரியையும், வேற்றுமையுருபும், உவமவுருபுங் குறி ப்பாற்பொருளுணாத்துமாயினும் புணர்ச்சிக்கணுபகாரப்படுதலும், வேற்று மைத்தொகைக்குமுவமைத்தொகைக்கு மவ்வுருபுபற்றி யிலக்கணங்கூறுதலு முதலாகியபயனேக்கியிவற்றைவேறுகூறினர். இடைச்சொலேழனுள்ளுமுத னின்றமூன்றுமேலேயுணாத்தப்பட்டமையானமுன்வைத்தார். ஒபபில்வழியா ற்பொருள்செய்குநமுன்னருணர்த்தபபடுதலினிறுதிக்கணவைத்தார். ஒழிநத னமூன்றுமிவ்வோத்தினகத்துணாததப்படுதலினிடைவைத்தா. (உ)

உசஅ. அவைதா, முன்னும்பின்னு மொழியடுத்துவருதலுந், தம்மீறுதிரிதலும் பிறிதவணிலையலு, மன்னவையெல் லா முரியவென்ப.

மேற்சொல்லப்பட்டவிடைச்சொலிடைவருதலேயன்றித் தம்மாற்சார ப்படுஞ்சொற்குமுன்னும்பினனுமவருதலுந் தம்மீறுவேறுபட்டுவருதலும் பிறி தோரிடைச்சொலோரிடைச்சொன்முனவருதலுமாகிய வததன்மையவெல்லா முரிய-எ-று. அதுமன்-எ-ம், கேண்மியா-எ-ம்-சாரப்படுமொழியைமுன்னடுத் துவநதன. கொன்னூர்-எ-ம், ஒ ஒ வினிதே-எ-ம்- பின்னடுத்துவநதன. உடனு யிர்போருகதில்லவெனவீறுதிரிநதுவநதது. வருகதில்லமமவெஞ்சேரிசேரவெ ன்பதுபிறிதவணின்றது. அவைதாமெனப்பொதுவகையானேதகினுமோனு மிவ் விலக்கணமிவ்வியலின்கணுணர்த்தப்படுமசைநிலைமுதலாகிய மூன்றற்குமெனை க்கொள்க. அன்னவையெல்லாமென்றதனன்மன்னைச்சொல்-கொன்னைச் சொ லெனத்தம்மையுணரநின்றவழியீறுதிரிதலும், னகாரமுன்னரொனவெழுத்து ச்சாரியையீறுதிரிதலுங்கொள்க. (ங)

உசகூ. கழிவேயாக்க மொழியிசைக்கிளவியென், றம்மூன்றெ ன்ப மன்னைச்சொல்லே.

இவ்வோத்தினகத்துணர்த்தப்படு மூவகையிடைச்சொல்லுளதத்தங்குறி ப்பிற்பொருள்செய்குந பொருளுணர்த்துதற் சிறப்புப்பரப்புடைமையானது னைமுன்னுணர்த்துகின்ருர். கழிவுகுறித்துநிறபதும் ஆக்கங்குறித்துநிற்பதும் ஒழியிசைப்பொருண்மைகுறித்துநிற்பது மெனமன்னைச்சொன்மூன்ரும்.எ று. சிறியகட்பெறினேயெமக்கீயுமன்னே என்புழிமன்னைச்சொல்இனிஅதுகழி ந்ததென்னும்பொருள்குறித்துநின்றது. பண்டுகாடுமன்இன்றுகயல்பிற ழும்வயலாயிற்றென அஃதாக்கங்குறித்துநின்றது. கூரிதோர்வாண்மன் எ புழித் திட்பமின்றென்ருனும், இலக்கணமின்றென்ருனுமென எச்சமாயொழி தசொற்பொருண்மைநோக்கிநின்றது. (ச)

உருo. விழைவேகால மொழியிசைக்கிளவியென், றம்மூன்றெ
ன்ப தில்லைசசொல்லே.

விழைவுகுறித்துநிற்பதுங் காலங்குறித்துநிற்பதுமாண்டொழிந்து நின்ற சொற்பொருளைநோக்கிநிற்பதுமெனத்தில்லைச்சொன்மூன்றும்.எ-று.வார்ந்தில ங்கும்வையெயிற்றுச்சின்மொழியரிவையைபபெறுகதில்லம்மயானே என அவளைப்பெறுதற்கணுளதாகியவிழைவின்கண்வந்தது. பெற்றாங்கறிகதில்லம்மவி வ்வூரோஎனப்பெற்றகாலத்தறிகவெனக் காலங்குறித்துநின்றது. வருகதில்லம் மவெஞ்சேரிசேரஎனவந்தககா லினனதுசெய்வலெனனு மொழியிசைப்பொ ருளுணர்த்திற்று. (ரு)

உருக. அச்சம்பயமிலி காலம்பெருமையென், றப்பாலான்கே
கொன்னைசசொல்லே.

அச்சப்பொருளதும் பயமின்மைப்பொருளதுங் காலப்பொருளதும்பெரு மைப்பொருளதுமெனக்கொன்னைச்சொனான்காம்-எ-று. கொன்முனை யிரவூர் போலச்சிலவாருகநீதுஞ்சுநாளேயென்புழிஅஞ்சிவாழுமூர் எ-ம், கொன்னே கழிந்தன்றிளமையுமென்புழிப்பயமின்றிக்கழிந்தது-எ-ம, கொன்வரல்வாடை நினக்கென்கொண்டேனோவென்புழிக்காதலர்நீங்கியகாலமறிந்துவந்தவாடை எ-ம், கொன்னூர்துஞ்சினும் யாந்துஞ்சலமேயென்புழிப பேரூர்துஞ்சினும்-எ-ம்- கொன்னைச்சொனான்குபொருளும்படவந்தவாறுகண்டுகொள்க. (சு)

உருஉ. எச்சஞ்சிறப்பே யையமெதிர்மறை, முற்றெயெண்ணே
தெரிநிலையாக்கமென், றப்பாலெட்டே யும்மைச்சொ
ல்லே.

எச்சங்குறிப்பது முதலாகவாக்கங்குறிப்பதீறாக வும்மைச்சொலெட்டாம்-எ-று. சாத்தனும்வந்தானென்னுமும்மைகொற்றனும்வந்தானென்னு மெச்சங்குறித்துநிற்றலினெச்சவும்மை. கொற்றனும்வந்தானென்பதூஉ மிறந்தசாத்தன்வரவாகியவெச்சங்குறித்துநிற்றலினஎச்சவும்மை.குறவருமருளுங்குன்றத்துப்படினேயென்பது குன்றத்துமயங்காதியங்குதற்கட்குறவர்சிறந்தமையாற்சிறப்பும்மை.ஒன்றிரப்பான்போலிளிவந்துஞ்சொல்லும் உலகம்புரப்பான்போல்வதோர்மதுகையுமுடையன் வல்லாரைவழிபட் டொன்றறிந்தான்போல நல்லார்கட்டோன்றுமடக்கமுமுடையன் இல்லோர்புன்கணீகையிற்றணிக்க வல்லான்போல்வதோர்வண்மையுமுடையனென்புழிஇன்னானென்று துணியாமைக்கண்வருதலின் அவையையவும்மை. சாத்தன்வருதற்குமுரியனென்பது வாராமைக்குமுரியனென்னு மெதிர்மறையையொழிபாகவுடைத்தாய் நிற்றலின் எதிர்மறையும்மை. தமிழ்நாட்டுமூவேந்தருமென எஞ்சாப்பொருட்டாகலான் முற்றும்மை. நிலனுநீருந்தீயும்வளியுமாகாயமுமெனப்பூதமைந்தென்புழிஎண்ணுதற்கண்வருதலினெண்ணும்மை. இருநிலமடிதோய்தலிற்றிருமகளுமல்லளரமகளுமல்லளிவள்யாராருமென்றவழித்தெரிதற்பொருளாய்நிற்றலிற் றெரி

நிலையும்மை. திருமகளோ வரமகளோவென்று தவளைநீக்குதலி னையவும்மை யின்வேறுதலறிக. ஆக்கவும்மைவநதவழிக கண்டுகொள்க. உரையாசிரியர் நெடியனும் வலியனுமாயினானென்புழி உம்மையாக்கங்குறித்துநிற்றலி னாக்க வும்மையென்றார். செப்பேவழீஇயினும் வரைநிலையின்றேயென்னுமும்மை வழுவைபிலக்கணமாக்கிக்கோடல்குறித்து நின்றமையா னாக்கவும்மை யென்பாருமுளர். (எ)

உருஙு. பிரிநிலைவினாவே யெதிர்மறைமொழியிசை, தெரிநிலைக் கிளவி சிறபபொடுதொகைஇ, யிருமூன்றென்ப வோகா ரம்மே.

பிரிநிலைபொருட்டாவதுமுதலாக வோகார மறுவகைப்படும். எ-று. யா னோதேறேனவாபோய வழங்கலரே-எனபது தேறுவார் பிறரிறபிரித்தலிற் பிரி நிலையெச்சமாயிறறு. சாத்தனுணடானோ- என்பது வினாவோகாரம். யானோ கொளவேனென்பது கொள்ளேனென்று மெதிர்மறைகுறித்துநிற்றலி னெதி ர்மறையோகாரமாம். கொளலோகொணடானெனபது கொண்டுய்யப்போயி னனல்லனென்பதுமுதலாய வொழியிசைநோக்கிநிற்றலி னொழியிசையோகா ரம். திருமகளோவலல ளரமகளோவலல ளிவள்யாரொன்பது தெரிதற்கண்வ ருதலிற் றெரிநிலையோகாரம். ஓ ஓ பெரியனென்பது பெருமைமிகுதியுணர்த் தலிற் சிறப்போகாரமாம். (அ)

உருசு. தேற்றம்வினாவே பிரிநிலையெண்ணே, யீற்றசையிவ்வை ந்தேகாரமமே.

தேற்றேகாரமுதலாக வேகாரமைநத. எ - று. உண்டேமறுமையெனத் தெரிவின்கண்வருதலிற் றேற்றேகாரம். நீயேகொண்டாயென வினாப்பொரு ளுணர்த்தலின் வினாவேகாரம். அவருளிவனேகள்வனெனப் பிரித்தலிற் பிரி நிலையேகாரம். நிலனே நீரே தீயே வளியேயென எண்ணுதற்கண்வருதலின் எ ண்ணேகாரம். கடலபோற்றோன்றல காடிறநதோரோயென்பது செய்யுளிறுதி க்கண்வருதலினீற்றசையேகாரம.வாடாவள்ளியங்காடிறநதோரோயெனச் செ ய்யுளிடையும்வருதலி னீறறசையென்பது மிகுதிநோக்கிச்செனறகுறி. இஃத சைநிலையாயினு மேகாரவேறுபாடாகலி னீண்டுக்கூறினர். (கூ)

உருரு. வினையேகுறிப்பே யிசையேபண்பே, யெண்ணேபெய ரொ டவ்வறுகிளவியுங், கண்ணியநிலைத்தே யெனவெ ன்கிளவி.

வினைமுதலாகியவாறு பொருண்மையுங்குறித்துவருமெனவென்னுமிடை ச்சொல். எ-று. மலைவான்கொள்கெனவுயர்பலிதூஉயவென வினைப்பொருண் மையும், துண்ணெனத்துடித்ததுமன் னெனக்குறிப்புப்பொருண்மையும், ஒல் லெனவொலித்த தெனவிசைப்பொருண்மையும், வெள்ளெனவிளர்த்ததெனப் பண்புப்பொருண்மையும், நிலனென நீரெனத் தீயென வளியெனவெனவெண்

ளும்பொருண்மையும், அழுக்காறெனவொருபாவியெனப் பெயர்ப்பொருண்மையுங்குறித்து எனவென்னுஞ்சொல் வந்தவாறுகண்டுகொள்க. (க0)

உருசு. என்றெனகிளவியு மதனோரற்றே.

என்றென்னுமிடைச்சொல்லு மெனவென்பதுபோல வவ்வாறுபொருளுங்குறித்துவரும். எ - று. நரைவருமென்றெண்ணி-எ-ம், விண்ணென்றிசைத்தது-எ-ம், ஒல்லென்றொலிக்கு மொலிப்புனலூரற்கு-எ-ம், பச்சென்றுபசந்தது-எ-ம், நிலனென்று நீரென்று தீயென்று-எ-ம், பாரியென்றொருவனுளன-எ-ம் வரும். (கக)

உருஎ. விழைவின்றில்லை தன்னிடத்தியலும.

அப்பான்மூனறேதிலலைச் சொல்லெனப்பட்டமூன்றனுள் விழைவின்கண் வருந்தில்லைதன்மைக்கணல்லதுவாராது-எ-று. தன்மைக்கண்வருதன் மேற்காட்டப்பட்டனவற்றுள்ளும்பிறண்டுங்கண்டுகொள்க. இடம் வரையறுத்தோதாமையின்விழைவின்றில்லைதன்மைக்கண்வருதலு மேலேபெறப்பட்டதனைப்பின்னுங்கூறினர் ஏனையிடத்துவாராதென்று நியமித்தற்கென்பது. (கஉ)

உருஅ. தெளிவினேவுஞ் சிறப்பினோவு, மளவினெடுத்த விசையவென்ப.

தெளிவின்கண்வருமேகாரமுஞ் சிறப்பின்கண்வருமோகாரமுமளபான்மிக்க விசையையுடையவென்றுசொல்லுவராசிரியர். எ- று. அளபெ[illegible]யாய்வருதன்மேற்காட்டப்பட்டனவற்றுள்ளும் பிறண்டுங்கண்டுகொள்க. (கங)

உருகூ. மற்றென்கிளவி வினைமாற்றசைநிலை, யப்பாலிரண்டென மொழிமனார்புலவர்.

மற்றென்னுஞ்சொல்வினைமாற்றுமசைநிலையுமெனவிரண்டாம். எ- று. மற்றறிவாநல்வினையாமிளையமென்றவழி அறஞ்செய்தல் பின்னறிவாமென வக்காலத்துவினைமாற்றுதலான்மற்றென்பதுவினைமாறறின்கண்வந்தது. அதுமற்றவலங்கொள்ளாதுநொதுமலர்க்கலுழுமென அசைநிலையாய்வந்தது. கட்டுரையிடையுமற்றேவென அசைநிலையாய்வரும். (கச)

உகூ0. எற்றென்கிளவி யிறந்தபொருட்டே.

எற்றென்னுஞ்சொல்லிறந்தபொருண்மைத்து. எ-று. எற்றெனுடம்பி னெழினலமென்பது என்னலமிறந்ததென்னும்பொருள்படநின்றது. எற்றேற்றமில்லாருள்யானேற்றமில்லாதே னென்பதூஉம் இதுபொழுதுதுணிவில்லாருட்டுணிவில்லாதேன்யானென்றுதுணிவிறந்ததென்பதுபடநின்றது. (கரு)

உகூக. மற்றையதென்னுங் கிளவிதானே, சுட்டுநிலையொழிய வினங்குறித்தன்றே.

மற்றையதெனப்பெயர்க்குமுதனிலையாய்வரு மற்றையென்னுமைகாரவீற் றிடைச்சொல்சுட்டப்பட்டதனையொழித் ததனினங்குறித்துநிற்கும். எ-று. ஆ டைகொணாந்தவழி யவ்வாடைவேண்டாதான் மற்றையதுகொணாவென்னும் அஃதச்சுட்டியவாடையொழித் ததற்கினமாகியபிறவாடைகுறித்துநின்றவாறு கண்டுகொள்க. பெரும்பான்மையு முதனிலையாய்நின்றல்ல தவ்விடைச்சொல் பொருள்விளக்காமையின் மற்றையதென்னுங்கிளவியென்றார். சிறுபான்மை மற்றையாடையெனத்தானேயும்வரும். மற்றையஃது-மற்றையவன் - என்னுந் தொடக்கத்தனவும் அவ்விடைச்சொன்முதனிலையாயபெயர். (௧௭)

௨௬௨. மன்றவென்கிளவி தேற்றஞ்செய்யும்.

மன்றவென்னுஞ்சொல்தெளிவுப்பொருண்மையையுணர்த்தும். எ-று. கட்வு ளாயினுமாகமடவைமன்றவாழியமுருகே-எனவரும்.மடவையேயென்றவாறு.

௨௬௩. தஞ்சக்கிளவி யெண்மைப்பொருட்டே.

முரசுகெழுதாயத்தரைசேதஞ்சம்-எனததஞ்சக்கிளவி யரைசுகொடுத்த லெளிதெனவெண்மைப்பொருளுணாத்தியவாறுகண்டுகொள்க. (௧௮)

௨௬௪. அந்திலாங்க வசைநிலைக்கிளவியென், றாயிரண்டாகு மி யற்கைத்தென்ப.

அந்திலென்னுஞ்சொ லாங்கென்னுமிடப்பொருளுணர்த்துவதுமசைநிலை யுமெனவிரண்டாம். எ-று. வருமேசேயிழையந்திறகொழுநற்காணியவென்பு ழிஆங்குவருமென்றவாறும். அந்திற்கச்சினன்கழலினனெனவாளாதே அசைத் துநின்றது. (௧௯)

௨௬௫. கொல்லே யையம்.

குற்றிகொலலோ மகன்கொல்லோ எனக்கொல்ஐயத்துக்கண்வந்தவாறு.

௨௬௬. எல்லே யிலக்கம்.

எலலென்பதுரிச்சொனீர்மைத்தாயினுமாசிரியரிடைச்சொலாகவேயோ தினமையானிடைச்சொலெனறுகோடும். எல்வளையென - எல்லென்பதுவிளங் குதற்கண்வந்தவாறு. (௨௧)

௨௬௭. இயற்பெயர்முன்ன ராரைக்கிளவி, பலர்க்குரியெழுத்தி ன் வினையொடுமுடிமே.

இயற்பெயர்முன்னர்வருமாரொனனுமிடைச்சொல்பலரறிசொல்லான்முடி யும். எ-று. ஈண்டியற்பெயரென்றதிருதிணைக்கு மஃறிணையிருபாற்குமுரிய பெ யரை. பெருஞ்சேந்தனார்வந்தார்-முடவனார்வந்தார்- முடத்தாமக்கணியார்வந் தார்-தந்தையார்வந்தார்-எ-ம், நரியார்வந்தார்-எ-ம் வரும். தாம், தான், எல்லா ம்,நீயிர்,நீ-என்னுமைந்துமொழித்தல்லாவியற்பெயரெல்லாவற்றுமுன்னரும்,அ

ஃறிணையியற்பெயரொல்லாவற்றுமுன்னருமாரைக்கிளவிவருதலிற் பெரும்பான்மைகுறித்தியற்பெயர்முன்னரொன்றூர். நம்பியார்வந்தார்-நங்கையார்வந்தாரெனச் சிறுபான்மையுயர்திணைப்பெயர்முன்னர்வருத லொன்றெனமுடித்தலெனபதனாற்கொள்க. ஆரைக்கிளவி கள்ளென்பதுபோலவொற்றுமைப்பட்டுப் பெயரீருய்நிற்றலி னாரைக்கிளவிபலரறிசொல்லான் முடியுமென்றது-அதனை யீருகவுடையபெயர்பலரறிசொல்லான்முடியுமென்றவாறும். பலர்க்குரி யெழுத்தின்வினையொடுமுடிமேயெனவாரைக்கிளவியதியல்புணர்த்தவே அஃதுயர்த்தற்பொருட்டாதலும், திணைவழுவும்பால்வழுவுமமைத்தலும்பெற்றும். ஒருமைப்பெயர்முன்னரொருமைசிதையாமலாரைக்கிளவிவந்து பலரறிசொல்லான் முடிதலினொருவனைக்கூறும்பன்மைககிளவியின்வேறுதலறிக. (௨௨)

௨௬௮. அசைநிலைக்கிளவி யாகுவழியறிதல்.

ஆரைக்கிளவியசைநிலையாமிடமறிக. எ-று. பெயரினாகியதொகையு மாருளவே-எ-ம், எல்லாவுயிரொடுஞ்செல்லுமார்முதலே-எ-ம வரும். ஆகுவழியறிதலென்றதனாலசைநிலையாங்காலும்மைமுன்னரு மும்மீற்றுவினைமுன்னருமல்லதுவாராமையறிக. சிறுபான்மைபிறண்டுவருமேனுங்கொள்க. (௨௩)

௨௬௯. ஏவுங்குரையு மிசைநிறையசைநிலை, யாயிரண்டாகுமியற்கையவென்ப.

ஏ என்னுமிடைச்சொல்லுங் குரை என்னுமிடைச்சொல்லு மிசைநிறையுமசைநிலையுமெனவோரோவொன்றிரண்டாம். எ-று. ஏ எ யிஃதொத்தனெனப்பெறுன்கேட்டைக்காண- என்பதிசைநிறை. ஏ எ யென்சொலலுக-என்பதசைநிலை. அளிதோதானெய்துபெறலருங்குரைத்தே-என்பதிசைநிறை.பலகுரைத்துன்பங்கள்சென்றுபடும்-என்பதசைநிலை. தொடர்மொழிமுதற்கட் பிரிந்துநின்றல்லதுபெரும்பான்மையுமேகாரமிசைநிறையுமசைநிலையுமாகாமையிற் சார்ந்தமொழியோடொன்றுபட்டிசைத்திடையுமிறுதியுநிற்குந்தேற்றேகாரமுதலாயினவற்றூடொருங்குகூறாது வேறுகூறினார். அஃதேலிதனைநிரனிறைப்பொருட்டாகக்கொண்டு ஏ இசைநிறை,குரைஅசைநிலையென்றாராலுரையாசிரியரொனின்அற்றன்று மற்றுஅந்திலென்பனபோலப் பொருள்வகையான் வேறுபடுவனவற்றையிரண்டாமென்பதல்லது சொல்வகையானிரண்டாகியசொல்லையிரண்டாமென்றதனாேனோர்பயமின்மையா னவர்க்கது கருத்தன்றென்க. அல்லதூஉமொருசொல்லேயிசைநிறையுமசைநிலையுமாகலுடைமையா னவற்றையுடன்கூறினொன்றுக்கா லிசைநிறையுமசைநிலையுமொருங்குமயங்கக்கூறலா மாகலானுமவர்க்கதுகருத்தன்மையுணாக. (௨௪)

௨௭௦. மாவென்கிளவி வியங்கோளசைச்சொல்.

மா என்னு மிடைச்சொல்வியங்கோளைச்சார்ந்தசைநிலையாய்வரும். எ-று. புழ்கையுண்கமாகொழ்கையோனே-எனவரும். (௨௫)

உஎக. மியாயிகமோமதி யிகுஞ்சின்னென்னு, மாவயிறுறு மு
ன்னிலையசைச்சொல்.

மியாமுதலாகியவாறு முன்னிலைமொழியைச்சார்ந்துவருமசைநிலைச்சொ
ல்லாம. எ-று. கேண்மியா-சென்மியா-எ-ம், கண்பனியான்றிகவென்றிதோழி
ஏ-ம, காமஞ்செப்பாதுகண்டதுமொழிமோ-எ - ம், உரைமதிவாழியோவலவ
ஏ-ம், மெல்லேம்புலம்பனைச்சண்டிகும்-எ-ம், காப்பும்பூண்டிசிற்கடையும்போ
கல்-எ-ம்வரும். (உசு)

உஎஉ. அவற்றுள், இகுஞ்சின்னு மேனையிடத்தொடுந், தகு
நிலையுடைய வென்மனார்புலவர்.

மேற்கூறப்பட்டவாறனுளிகுமுஞ்சின்னுமே படர்க்கைச்சொல்லொடுந்தன்
மைச்சொலலொடும் பொருந்துநிலையுடையவெனவெய்தியதன்மேற் சிறப்புவி
திவகுத்தவாறு. கண்டிகுமல்லமோ-எ-ம்,கண்ணும்படுமோவென்றிசின்யானே-
எ ம்- தன்மைக்கண்வந்தன. புகழ்ந்திகுமல்லரோபெரிதே-எ-ம், யாரஃதறிந்தி
சினோரே-எ-ம- படர்க்கைக்கண்வந்தன. (உஎ)

உஎங. அம்மகேட் பிக்கும்.

அம்மவென்னுமிடைச்சொ லொருவனையொருவ னொன்றுகேளென்றுசொ
ல்லுதற்கண்வரும். எ- று. அம்மவாழிதோழி-எனவரும். மியாயிகமுதலாகிய
வசைநிலையொருபொருளுணர்த்தாவாயினு முன்னிலைக்கணல்லது வாராமைபி
னவ்விடமுணர்விக்குமாறுபோல அம்மவென்பதூஉமொருபொரு ளுணர்த்தா
தாயினுமொன்றனைக்கேட்பிக்குமிடத்தல்லது வாராமையா னப்பொருளுணர்
விக்குமென்பதுவிளக்கியகேட்பிக்குமெனஞர். (உஅ)

உஎச. ஆங்கவுரையசை.

ஆங்கவென்னுமிடைச்சொல்கட்டுரைக்கணசைநிலையாய்வரும். எ- று. ஆ
ங்கக்குயிலுமயிலுங்காட்டி-எனவரும். (உகூ)

உஎரு. ஒப்பில்போலியு மப்பொருட்டாகும்.

ஒப்புமையுணர்த்தாதபோலிச்சொல்லுமாங்கவென்பதுபோல வுரையசை
யாம். எ-று. மங்கலமென்பதோரூருண்டுபோலும்- எனவரும். போலும், போ
ல்வது-என்னுந்தொடக்கத்துப்பலவாய்பாடுநதழுவுதற்குப்போலியென்றுர்.செ
ருப்பழற்சேர்ந்தக்கானெய்போல்வதூஉமென்பதுமது. அசைநிலையுமபொருள்
குறித்தல்லதுநில்லாமையினப்பொருட்டாகுமென்றுர். (௩0)

உஎசு. யாகா, பிறபிறக்கரோபோ மாதெனவரூஉ,மாயேழ்சொ
ல்லு மசைநிலைக்கிளவி.

யாமுதலாகியவேழிடைச்சொல்லுமசைநிலையாம். எ-று. யாபன்னிருவர்
மாணுக்கரகத்தியனுர்க்கு-எ-ம், புறனிற்பட்டாளோவிவளிவட்காண்டிகா-எ-ம்,

தான்பிறவரிசையறிதலிற்றன்னுந்தூக்கி-எ-ம், அதுபிறக்கு-எ - ம், நோதகவிருங்குயிலாலுமரோ-எ-ம், பிரியின்வாழாதென்போதெய்ய-எ-ம், விளிந்தன்றுமாதவற்றெளிந்தவென்னெஞ்சே-எ-ம்வரும். இடம்வரையறுமையினிவைமூவிடத்திற்குமுரிய. ஆங்கவுமொபபில்போலியுமுரைதொடங்குறற்கண்ணுமாதரமில்வழியும்வருதலின்வேறுகூறினர். (௩க)

உ௭௭. ஆகவாக லென்பதென்னு, மாவயின்மூன்றும் பிரிவில
சைநிலை.

ஆகவாகலென்பது என்னுமூன்றிடைச்சொல்லும் அசைநிலையாங்காலிரட்டித்துநிற்கும்- எ - று. பிரிவிலசைநிலையெனவேதனித்துநின்றசைநிலையாகாவென்பதாம். ஒருவன்யானின்னேனென்றானும், நீயின்னையென்றானும், அவனின்னனென்றானுங்கூறியவழிக்கேட்டான் ஆகஆக- ஆகல் ஆகலென்னும்; இவையுடம்படாமைக்கண்ணும், ஆதரமில்வழியும்வரும். ஒருவனொன்றுரைப்பக்கேட்டான் என்பது என்பது என்னும். அதுநன்குரைத்தற்கண்ணும், அழகாதற்கண்ணும்வரும். பிறண்டுவரினும்வழக்குநோக்கியுணர்ந்துகொள்க. (௩உ)

உ௭அ. ஈரளபிசைக்கு மிறுதியிலுயிரே, யாயியனிலையுங் காலத்
தானு, மளபெடைநிலையுங் காலத்தானு, மளபெடையி
ன்றித் தான்வருங்காலையு, முளவெனமொழிபபொருள்
வேறுபடுதல்,குறிப்பினிசையானெறிப்படத்தோன்றும்

இரண்டுமாத்திரையையுடைத்தாய் மொழிக்கீறாதெனப்பட்ட ஔகாரம்பிரிவிலசைநிலையென மேற்கூறப்பட்டனபோல விரட்டித்து நிற்குமிடத்துமிரட்டியாதளபெடையாய்நிற்குமிடத்து மளபெடையின்றித் தான்வருமிடத்தும்பொருள்வேறுபடுதலுள அப்பொருள்வேறுபாடுசொல்லுவான் குறிப்பிற்குறிக்குமோசைவேறுபாட்டாற்புலப்படும்.எ-று. பொருள்வேறுபாடாவனவழக்குநோக்கச் சிறப்புமாறுபாடுமாம். ஔ ஔ வொருவன்தவஞ்செய்தவாறு-என்றவழிச்சிறப்புத்தோன்றும். ஒருதொழில்செய்வானை ஔ ஔ வினிச்சாலுமென்றவழிமாறுபாடுதோன்றும்.ஔஉ வொருவனிரவலர்க்கீந்தவாறு - ஔஉ வினிவெகுளல் - எ - ம், ஔவவன்முயலுமாறு - ஔவினித்தட்டுப்புடையல்- எ-ம்- அளபெடுத்துமளபெடாதும்வநதவ்ழியு மப்பொருடோன்றியவாறு கண்டுகொள்க. இதனையிக்காலத்தோகாரமாகவழங்குப. பிறபொருள் படுமாயினு மறிந்துகொள்க. ஈரளபிசைக்குமென்றேயொழியி னெட்டெழுத்தெல்லாவற்றுமேலும், இறுதியிலுயிரொன்றேயொழியி னெகர வொகரத்துமேலுஞ் சேறலானீரளபிசைக்குமிறுதியிலுயிரென்றார். இதுதத்தங்குறிப்பிற்பொருள்செய்வதாயினுமடுக்கிவருதலுடைமையானீண்டுவைத்தார். (௩௩)

உ௭௯. நன்றீற்றேவு மன்றீற்றேவு, மந்தீற்றோவு மன்னீற்றோ
வு, மன்னபிறவுங் குறிப்பொடுகொள்ளும்.

நன்றீற்றேவுமன்றீற்றேவுமாவன-நன்றே-அன்றே-என்பன. அந்தீற்றேவு மன்னீற்றேவுமென்பன-அந்தோ - அன்னோ - என்பன. நன்றின்றீற்றின்கணே யெனவிரியும். இவ்விரியேனையவற்றிற்குமொக்கும். நன்றீற்றேஎன்பதனா னம் மூர்ந்துவருஉமிகர வைகாரமெனபுழிப்போலச்சொன்முழுவதூங் கொள்ளப்ப டும். ஒழிந்தனவுமன்ன. குறிப்பொடுகொளளுமென்றது மேலதுபோலவிவை யுங்குறிப்போசையாற் பொருளுணர்த்துமெனறவாறு. ஒருவனொன்றுரைத்த வழியதற்குமேவாதான் நன்றேநன்றே-அன்றேஅன்றேயெனவடுக்கலும்வரும். அவைமேவாமைக்குறிப்புவிளக்கும். அவனன்றேயிதுசெய்வானெனவடுக்கா துநின்றவழி அன்றீற்றேவுக்குத்தெளிவுமுதலாகிய பிறபொருளும்படும். ஏனை யிரண்டுமடுக்கியுமடுக்காது மிரங்கற் குறிப்புவெளிப்படுக்கும். இவையுந்தத்தங் குறிப்பிற்பொருள்செய்வன. அன்னபிறவுமென்றதனான்அதோஅதோ, சோ சோ-ஒக்குமொக்குமென்றற்றொடக்கத்தனகொள்க. (ந௪)

உஅ0. எச்சவும்மையு மெதிர்மறையும்மையுந், தத்தமுண்மய ங்கு முடனிலையிலவே.

இனிமேற்கூறப்பட்டவிடைச்சொலலின்கட்படு மிலக்கணவேறுபாடுணர் த்துகின்றார். எச்சவும்மைநின்றவழியெஞ்சுபொருட்கிளவியா மெதிர்மறையும மைத்தொடாவந்து தமமுண்மயங்குதலில. எ - று. சாத்தனுமவந்தான்கொற் றனும்வரலுரிபன் - என்னிவையடராமைகண்டுகொள்க. ஏனையும்மையொடுமயங் குதல்விலக்காராயிற்றென்னையெனின் அவையெஞ்சுபொருட்கிளவியவாய் வா ராமையினென்பது. (ந௫)

உஅக. எஞ்சுபொருட்கிளவி செஞ்சொலாயிற், பிற்படக்கிள வார் முற்படக்கிளத்தல்.

எச்சவும்மையாற்றழுவப்படுமெஞ்சுபொருட்கிளவி யும்மையில்சொல்லா யி னவ்வும்மையில்சொல்லை யவ்வும்மைத்தொடர்க்குப்பின்சொல்லாது முன் சொல்லுக. எ-று. சாத்தன்வந்தான-கொற்றனும்வந்தான்-எனவரும். கொற்ற னும்வந்தான்-சாத்தன்வந்தானெனப்பிற்படக்கிளப்பின்முற்கூறியதனைவிலக்கு வதுபோன்று பொருள்கொள்ளாமைகண்டுகொள்க. ஆடகுபுலால்பாகுபாளி தமுமுண்ணுன்கடல்போலுங்கல்வியன்-என்பதுமது.உம்மையடாதேதானேநிற் றலிற்செஞ்சொலென்றார். செஞ்சொலாயின்முற்படக்கிளக்கவெனவேயெஞ்சு பொருட்கிளவியும்மையொடுவரிற்பிறபடக்கிளக்கவெனறவாறும். (ந௬)

உஅஉ. முற்றியவும்மைத் தொகைச்சொன் மருங்கி, னெச்சக்கி ளவி யுரித்துமாகும்,

முற்றும்மையடுத்துநின்றதொகைச்சொலிடத்துஎச்சச்சொலுரித்துமாம்.எ- று. பத்துங்கொடால்-அனைத்துங்கொடாலென்புழிமுற்றும்மைதம்பொருளுண ர்த்தாது சிலவெஞ்சக்கொடுவென்னும்பொருடோன்றிநின்றவாறுகண்டுகொள் க. முற்றுதலென்னும்பொருளதுபண்பு முற்றியவும்மையெனவொற்றுமைநய

த்தாற்சொன்மேலேறிநின்றது. உரித்துமாகுமெனவேயெச்சப்பொருண்மைகுறியாதுநிற்றலேபெரும்பான்மையென்பதாம். ஏற்புழிக்கோடலென்பதனான் எச்சப்படுவதெதிர்மறைவினைக்கணென்றுகொள்க. பத்துங்கொடுவென்பது-பிறவுங்கொடுவென்பதுபடநிற்றலின் விதிவினைக்கண்ணுமெச்சங்குறிக்குமென்பாருமுளர். இப்பொழுதுபத்துங்கொடுவெனபதுகருத்தாயி னிப்பொழுது பத்துக்கொடுவெனவும்மையின்றியும்பொருள்பெறப்படும்.பத்துங்கொடுபிறவுங்கொடுவென்பதுகருத்தாயினிஃதெச்சவும்மையாகலினீண்டைக்கெய்தாது அதனானுதபொருத்தமின்றென்க. இவைமூன்றுசூத்திரத்தானும்வழுவற்கவென விடைச்சொற்பற்றிமரபுவழுக்காத்தவாறு. (௩௭)

௩அ௩. ஈற்றுநின்றிசைக்கு மேயெனிறுதி, கூற்றுவயினோரளபாகலுமுரித்தே.

செய்யுளிறுதிக்கணின்றிசைக்குமீற்றசையேயோகாரங்கூற்றிடத்தொருமாத்திரைத்தாதலுமுரித்து. எ-று. கடல்போற்றோன்றல்காடிறந்தோரே - என்புழியோரளபாயினவாறுகண்டுகொள்க. தேற்றமுதலாயினநீக்கியீற்றசையே தழுவுதற்கீற்றுநின்றிசைக்குமென்றார். செய்யுளிடைநிற்பதனை நீக்குதற்கீற்றுநின்றிசைக்கு மென்றேயொழியாதிறுதியென்றார். மேனின்றசெய்யுளுறுப்பொடு பொருந்தக்கூறுதற்கணென்பார கூற்றுவயினென்றார். உம்மையெதிர்மறை.()

உஅச. உம்மையெண்ணு மெனவெனெண்ணுந், தம்வயிற்றொகுதி கடப்பாடிலவே.

உம்மையான்வருமெண்ணுமெனவான்வருமெண்ணு மிறுதிக்கட்டொகைபெறுதலைக்கடப்பாடாகவுடையவல்ல. எ - று. எனவேதொகைபெற்றும்பெறாதும்வருமென்பதாம். உயர்திணைக்குரிமையுமஃறிணைக்குரிமையு மாயிருதிணைக்குமோரன்னவுரிமையுமம்மூவுருபின-எ-ம், இசையினுங்குறிப்பினும் பண்பினுந்தோன்றி-எ-ம், நிலனெனநீரெனத்தீயெனவளியெனநான்கும்-எ-ம், உயிரெனவுடலெனவின்றியமையா-எ-ம்- அவ்விருவகையெண்ணுந்தொகைபெற்றும் பெறாதும்வந்தவாறு. தொகையெனடபொருப்படக்கூறியவதனானெண்ணுப்பெயரேயன்றியனைத்துமெல்லாமென்றுந்தொடைசுதந்தனபுங்கொள்க. (௩௧)

உஅ௫. எண்ணேகார மிடையிட்டுக்கொளினு, மெண்ணுக்குறித்தியலு மென்மனார்புலவர்.

சொற்றொறும்வாரா தெண்ணேகாரமிடையிட்டுவரினுமெண்ணுதற் பொருட்டாம். எ-று. மலைநிலம்பூவேதுலாக்கோலென்றின்னர்-எ-ம்,தோற்றமிசையேநாற்றஞ்சுவையே யுறலோடாங்கைம்புலனெனமொழிப-எ-ம் வரும். எண்ணுக்குறித்துவருவனவெண்ணப்படும்பெயரெல்லாவற்றொடும்வருதன்மரபாயினு மிடையிட்டுவரினுமமைகவெனவமைத்தவாறு. எனவுமென்றுஞ்சொற்றொறும்வாராதொருவழிநின்றுமெண்ணுக்குறிக்குமாலெனின் அவையொருவழிநின்றெல்லாவற்றொடுமொன்றுதலி னுண்டாராய்ச்சியில்லையென்க. பிறவெண்

ணொடாநின்றவழி யேகாரவெண்ணிடை வந்ததாயினுமொடாநின்ற பிறவெண் ணேயாமெனவுரைத்தாராலுரையாசிரியரெனின் அவ்வாறுவிரா யெண்ணியவ ழிபபிறவெண்ணுற்பெயராகொடுப்பி னதனை யேகாரவெண்ணென்பாரையும் வி லக்காமையானும, பிறவெண்ணுமென்பதனாற் பெறப்படுவதோராபயனின்மை யானுமவாக்கதுகருத்தன்றெனக. (சO)

உஅ௬. உம்மைதொக்க வெனாவென்கிளவியு, மாவீறுகியவென்
றென்கிளவியு, மாயிருகிளவியு மெண்ணுவழிப்பட்டன.

உம்மைதொக்குநின்றவெனாவென்று மிடைச்சொல்லு மென்றுவென்னுமி டைச்சொல்லுமிரண்டுமெண்ணிடத்துவரும. எ-று. நிலனென நீரென - எ-ம், நிலனென்று நீரென்று-எ-மவரும். உமமைதொககவெனாவெனகிளவியெனவே எனாவுமெனவசசொல்உமமொடுவருதலுமுடைத்தென்பதாம். உம்மொடு வந்த வழியவ்வெண்ணும்மையெண்ணுளடங்கும. எண்ணுவழிப்பட்டனவெனவேய வைசொற்றொறுமவருதலேயனறியிடையிட்டுவருமென்பதாம். பின்சாராயல்பு டைதேவகையெனா-எ-ம், ஒப்பிறபுகழ்றபழியினென்று- எ-ம்- இடையிட்டுவந தவாறு. இவையெண்ணுதறகண்வாராமையானும், அவறறின்வருஉமெண்ணினி றுதியுமெனச்சூத்திரஞ்சுருங்குதற்சிறப்பினானுமிவற்றினையீண்டுவைத்தா.

உஅஎ. அவற்றின்வரூஉ மெண்ணினிறுதியும்,பெயர்க்குரிமரபி
ற் செவ்வெணிறுதியு, மேவினாகிய வெண்ணினிறுதியு
ம், யாவயின்வரினுந் தொகையின்றியலா.

மேறசொல்லப்பட்டவெனாவென்றுவென்பனவற்றான் வருமெண்ணினிறு தியுமிடைச்சொல்லானறிப்பெயரானெண்ணப்படுஞ் செவ்வெணிறுதியு மே காரத்தான்வருமெண்ணினிறுதியும் யாதானுமோரிடத்துவரினுநதொகையின்றி நில்லா. எ-று. நிலனென நீரெனவிரண்டும்-எ-ம,நிலனென்று நீரென்றுவிரண் டும்-எ-ம், நிலநீரெனவிரண்டும்-எ-ம், நிலனேநீரேயெனவிரண்டும்-எ-ம்- தொ கைபெறறுவநதவாறு. செவ்வெண்ணிடைசசொலலெண்ணன்றென்றாராயினு மெண்ணுதலுநதொகைபெறுதலுமாகியவொப்புமையானீண்டுக்கூறினார்.(சஉ)

உஅஅ உம்மையெண்ணி னுருபுதொகல்வரையார்.

உம்மையெண்ணின்கணுருபுதொகுதல்வரையப்படாது. எ-று. பிறிதுபிறி தேற்றலுமுருபுதொகவருதலுநெறிப்படவழங்கியவழிமருங்கினென்பவென்னு ம்பொதுவிதியானும்மையெண்ணின்கணுருபுதொகல்பெறப்பட்டமையாற் பெ ற்றதன்பெயர்த்துணைநியமப்பொருட்டாகலினும்மையெண்ணினுருபுதொகலவ ரையப்படாதேனையெண்ணின்கணவைவரையப்படுமென நியமித்தலிதற்குப்ப யனாகக்கொள்க. குன்றிகோபங்கொடிவிடுபவளமொண்செங்காந்தளொக்குநி ன்னிறமெனப்பிறவெண்ணின்கணுருபுதொக்கதாலெனின் அற்றன்று செவ்வெ ண்தொகையின்றில்லாமையினவற்றையெனவொருசொல்விரிக்கப்படும். விரி

க்கவேகுன்றிமுதலாயின வெழுவாயாய்நின்றனவாமென்பது. பாட்டுங்கோட்டியுமறியாப்பயமிறேக்குமரம்போனீடியவொருவன், இசையினுங்குறிப்பினும் பண்பினுந்தோன்றி- எனவும்மையெண்ணின்கணுருபுதொக்கவாறு கண்டுகொள்க. வரையாதொன்றதனானுண்டுமெல்லாவுருபுந்தொகா; ஐயுங்கண்ணுமேதொகுவனவெனக்கொள்க. யானைதேர்குதிரைகாலாளெறிந்தார்-எனவும்மையுருபுமுடன்றொக்கவழியும்மைத்தொகையென்னாதுருபுதொகையென்கவென்ப இச்சூத்திரத்திற்குக்கருத்தாகவுரைத்தாரா லுரையாசிரியரெனின் அஃதும்மைத்தொகையாகலினொருசொன்னடைத்தாயுருபேற்றானும், பயனிலைகொண்டானு நிற்கும். அத்தொகையினுடை உருபின்மைசிற்றறிவினோர்க்கும்புலனாம்;அதனானஃதவர்க்குச்கருத்தன்மைசொல்லவேண்டுமோவென்பது. (௪௩)

உ௮௯. உம்முந்தாகு மிடனுமாருண்டே.

வினைசெயன்மருங்கிற் காலமொடுவருவனவற்றுள் உம்மீறுந்தாயத்திரிதலுமுடைத்து. எ-று. நீர்க்கோழிகூப்பெயாக்குந்து-எ-ம், நாரரிநறவினுண்மகிழ்துங்குந்து-எ-ம்வரும். வினைசெயன்மருங்கிற் காலமொடுவருவனவற்றுளென்பது ஏற்புழிக்கோடலென்பதனாற்பெற்றாம். இடனுமாருண்டேயென்றதித்திரிபுபெயரொச்சத்திற்சீறுயவழியென்பதுகருதிப்போலும். தம்மீறுதிரிதன் முதலாயினஇவ்வோத்தினுட்கூறப்படுமிடைச்சொற்கேயென்பதிதனானும்பெற்றாம். வினையியலுள்ளுங்கூறப்படுமாயினுமிடைச்சொற்றிரிபாகலானீண்டுக்கூறலுமியைபுடைத்தென்பது. (௪௪)

உ௯௦. வினையொடுநிலையினு மெண்ணுநிலைதிரியா, நினையல் வேண்டு மவற்றவற்றியல்பே.

வினையொடுநிற்பினுமெண்ணிடைச்சொற்கடந்நிலைமையிற்றிரியாவவற்றொடுவருங்காலவற்றவற்றியல் பாராய்தல்வேண்டும். எ-று. உண்டுந்தின்றும்பாடியும்வந்தான்-எ-ம், உண்ணவெனத்தின்னவெனப்பாடவெனவந்தான்- எ-ம்வரும். ஒழிந்தவெண்ணொடுவருவனவுளவேற்கண்டுகொள்க. பெரும்பான்மையும்பெயரொடல்லதெண்ணிடைச்சொனில்லாமையினதனைமுற்கூறிச்சிறுபான்மைவினையொடுநிற்றலுமுடைமையானிதனை யீண்டுக்கூறினார். நினையல்வேண்டுமவற்றவற்றியல்பேயென்றதனானெண்ணிடைச்சொன்முற்றுச்சொல்லும்பெயரொச்சமும்பற்றிவாராதென்பதூஉம், வினையெச்சத்தொடுமேற்பனவற் றொடல்லதுவாராதென்பதூஉம், ஆண்டுத்தொகைபெறுதல்சிறுபான்மையென்பதூஉங்கொள்க. சாத்தன்வந்தான் கொற்றன்வந்தான் வேடன்வந்தானென மூவரும்வந்தமையாற் கலியாணம்பொலிந்ததெனச்செவ்வெண்டொகைபெற்றுவந்ததென்றாராலுரையாசிரியரெனின் அவையெழுவாயும், பயனிலையுமாயமைந்து மாறுதலினெண்ணப்படாமையானும், மூவருமென்பது சாத்தன்முதலாயினோர்தொகையாகலானுமதுபோலியுரையென்க. (௪௫)

உ௯௧. என்றுமெனவு மொடுவுந்தோன்றி, யொன்றுவழியுடைய வெண்ணினுட்பிரிந்தே.

என்றுமெனவுமொடுவுமெனபனவொருவழித்தோன்றியெண்ணினுட் பிற வழியும்பிரிந்துசென்றென்றுமிடமுடைய-எ-று. வினைபகையென்றிரண்டினெ ச்சம-எ-ம், கண்ணிமைநொடியென-எ-ம், பொருள்கருவிகாலம்வினையிடனொ டைந்தும்-எ-ம்- அவையொருவழிநின்று, வினையென்று பகையென்று - எ-ம், கணணிமையென நொடியென-எ- ம், பொருளொடு கருவியொடு காலத்தொடு வினையொடு இடனொடு-எ- ம் - நின்றவிடத்துப்பிரிந்து பிறவழிச்சென் றென் றியவாறுகண்டுகொள்க. ஒன்றுவழியுடையவென்றதனுற்சொற்றொறுநிற்பதே பெரும்பான்மையென்பதாம். சொற்றொறுநின்றவெண்ணிக்காலத்தரிய. ஒடு வென்பதோரிடைச்சொலெண்ணின்கண்வருதலினுற்கொள்க. இவைமூன்றும் பொருளிற்பிரிந்தெண்ணின்க ணசையாய்வருதலுடைய்வென்ப துணையாசிரிய ர்க்குக் கருத்தென்பாருமுளர். அசைநிலையென்பதிச்சூத்திரத்தாற் பெறப்படா மையானும், கண்ணிமைநொடியென்னுஞ்சூத்திரத்தெனவென்பதைக் கண்ணி மையென்பதனொடுகூட்டுகவென்றுணர்த்தலானுமவர்க்கதுகருத்தன்றென்க. ()

உகஉ. அவ்வச்சொல்லிற் கவையவைபொருளென, மெய்பெ றக்கிளந்த வியலவாயினும், வினையினும்பெயரினுநினை யத்தோன்றிந், திரிந்துவேறுபடினுந் தெரிந்தனர்கொ ளலே.

மேற்கூறப்பட்டவிடைச்சொற்க ளவ்வச்சொல்லிற்கவையவை பொரு ளெனநிலைபெறச்சொல்லப்பட்ட வியல்பையுடையனவாயினும் வினையொடும் பெயரொடுமொராய்ந்துணரத்தோன்றிவேறுபொருளவாயு மசைநிலையாயுந்திரி ந்துவரினுமாராய்ந்துகொள்க. எ-று. எனவேகூறியமுறையான்வருதல் பெரு ம்பான்மையென்றும், வேறுபடவருதல்சிறுபான்மையென்றுஞ் சொல்லியவா றும். வினையொடும்பெயரொடுமென்றது அவைவேறுபொருள வென்றுணர்த ற்குச்சார்புகூறியவாறு. சென்றீபெருமநிற்றகைக்குநாயாரோ-எ-ம், கலக்கொ ண்டேன்கள்ளென்கோகாழ்க்கொண்டேன் சூடென்கோ-எ-ம்-ஓகாரமீற்றசை யாயுமெண்ணுயும்வந்தது. ஓர்கமாதோழியவாதேர்மணிக்குரலே- எனமாமுன் னிலையசைச்சொலாயிற்று. அதுமற்கொண்கன்றேரோ- என மன்னசைநிலையா யிற்று. பிறவுமன்ன. செய்யுளின்பநோக்கிவினையினும்பெயரினுமென்றார்.(சஎ)

உகஙு. கிளந்தவல்ல வன்னபிறவுங், கிளந்தவற்றியலா னுணர் ந்தனர்கொளலே.

மேற்சொல்லப்பட்டனவன்றியவைபோல்வன பிறவரினுமவற்றையுங் கி ளந்தசொல்லினியல்பானுணர்ந்துகொள்க. எ- று. கிளந்தவற்றியலா னென்ற தாசிரியராணையானன்றிக்கிளந்தவற்றையு மின்னவென்றறிவது வழக்கினுட்சா ர்புமிடமுங்குறிப்பும்பற்றியன்றே கிளவாதவற்றையு மவ்வாறுசார்புமிடமுங் குறிப்பும்பற்றிஇஃதசைநிலை இஃதிசைநிறைஇஃதுகுறிப்பாலின்னபொருளுண ர்த்துமென் றுணர்ந்துகொள்கவென்றவாறு. சிறிதுதவிர்ந்தீகமாள நின்பரிசி லருய்மமார்-எனமாளவும்,சொல்லேன்றெய்யநின்னொடுபெயர்ந்தே-எனத்தெ

ய்யவும், அறிவார்யாரஃதிறுவுழியிறுகென-எனஎனவும், பணியுமாமென்றும் பெருமை எனஆமும், ஈங்காகுகவாலென்றிசின்யானே- எனஆலும்-அசைநிலையாய்வந்தன. குன்றுதொறாடலுநின்றதன்பண்பே- எனத்தொறுவென்பதுதான்சார்ந்தமொழிபபொருட்குப்பன்மையுமிடமாதலுமுணர்த்திநிற்கும். ஆனம்-ஏனம்-ஓனம்- என்பனவெழுத்துச்சாரியை. பிறவுமெடுத்தோதாதவிடைச்சொலெல்லாமிப்புறநடையாற்றழீஇக்கொள்க. (சஅ)

ஏழாவது

இடைச்சொலியல் முற்றிற்று.

---

எட்டாவது

# உரிச்சொலியல்.

---

உகூச. உரிச்சொற்கிளவி விரிக்குங்காலை, யிசையினுங்குறிப்பினும் பண்பினுந்தோன்றிப், பெயரினும்வினையினு மெய்தடுமாறி, யொருசொற்பல்பொருட் குரிமைதோன்றினும், பலசொலொருபொருட் குரிமைதோன்றினும், பயிலாதவற்றைப் பயின்றவைசார்த்தித், தத்தமரபிற்சென்றுநிலைமருங்கி, னெச்சொலாயினும் பொருள்வேறுகிளத்தல்.

நிறுத்தமுறையானேயுரிச்சொலுணர்த்திய வெடுத்துக்கொண்டார்; அதனு னிவ்வோத்துரிச்சொலோத்தென்னும்பெயர்த்தாயிற்று. தமக்கியல்பில்லாதஇடைச்சொற்போலாதிசைகுறிப்புப் பண்பென்னும்பொருட்குத்தாமேயுரியவாகலினுரிசசொலாயிற்று. பெரும்பான்மையுஞ்செயயுட்குரியவாய் வருதலினுரிச்சொலாயிற்றென்பாருமுளர். உரிச்சொல்லைவிரித்துணர்த்துமிடத்திசைகுறிப்புப்பண்பென்னும்பொருண்மேற்றோன்றிப்பெயர்க்கண்ணும் வினைக்கண்ணுந் தம்முருபுதடுமாறி யொருசொற்பல்பொருட்குரித்தாய்வரினும்பலசொலொருபொருட்குரித்தாய்வரினுங் கேட்பானுற்பயிலப்படாதசொல்லைப்பயின்றவற்றெடுசார்த்திப்பெயரும்வினையுமாகிய தத்தமக்குரியநிலைக்களத்தின்கண் யாதானுமொருசொல்லாயினும் வேறுவேறுபொருளுணாத்தப்படும். எ-று. என்றதுஇசைகுறிப்புப்பண்பென்னும் பொருளவாய்ப் பெயர்வினைபோன்றுமவற்றிற்குமுதனிலையாயுநதடுமாறி ஒருசொலொருபொருட்குரித்தாதலே யன்றியொருசொற்பலபொருட்கும் பலசொலொருபொருட்குமுரியவாய் வருவனவுரிச்சொலென்றும், அவைபெயரும்வினையும்போல வீறுபற்றிப்பொருளுணாத்தலாகாமையின் வெளிப்படாதவற்றை வெளிப்பட்டவற்றெடு சாாத்தித்தம்மையெடுத்தோதியே யப்பொருளுணர்த்தப்படுமென்றும் உரிச்சொற்குப்பொதுவிலக்கணமு மவற்றிற்குப் பொருளுணர்த்துமுறைமையுமுணர்த்தியவாறு.

குறிப்புமனத்தாற் குறித்துணரப்படுவது. பண்புபொறியானுணரப்படுங்குண ம். கறுப்புத்தவ-என்பனபெயர்வினைப்போலி. துவைத்தல் துவைக்கும்-என்ப ன பெயர்வினைக்கு முதனிலையாயின. உறுமுதலாயின மெய்தடுமாறுதுவருமா தலிற் பெயரினும்வினையினுமெய்தடுமாறியென்றது பெரும்பான்மைபற்றியெ னக்கொள்க. அவைகூறியவாற்றாற் பொருட்குரியவாய்வருமாறு முன்னர்க் காணப்படும். மெய்தடுமாறலுமொருசொற்பல்பொருட்குரிமையும் பலசொல் லொருபொருட்குரிமையு முரிச்சொற்குண்மையாமேனுதிருேனு முரிச்சொற் கிலக்கணமாவது இசைகுறிப்புப்பண்பென்னும பொருட்குரியவாய்வருதலே யாம். ஒருசொலொருபொருட்குரித்தாத லியல்பாதலாற்சொல்லாமையே மு டியுமென்பது. (க)

௨௯௫. வெளிப்படுசொல்லே கிளத்தல்வேண்டா, வெளிப்பட வாரா வுரிச்சொல் மேன.

வெளிப்பட்டவுரிச்சொல் கிளந்ததனுற்பயனின்மையிற்கிளக்கப்படா வெளிப்படவாரா வுரிச்சொன்மேற்றுக்கிளநதோதல்-எ-று. பயிலாதவற்றைப பயின்றவைசார்த்தி யெச்சொலாயினும் பொருள்வேறுகிளத்தலென்றதனுற் பயிலாதவற்றைப்பயின்றவற்ருெடு சார்த்தியும், பயின்றவற்றைப்பிறிதொன்ற ெடுசார்த்தாது தம்மையேகிளந்தும் எல்லாவுரிச்சொல்லு முணர்த்தப்படு மென்பது பட்டுநின்றதனைவிலக்கிப் பயனின்மையாற் பயின்றவுரிச்சொல் கி ளக்கப்படாது பயிலாதவுரிச்சொல்லே கிளக்கப்படுமென வரையறுத்தவாறு. மேலவென்பது மேனவென நின்றது. (௨)

௨௯௬. அவைதா, முறுதவ நனியென வரூஉமூன்று, மிகுதிசெ ய்யும் பொருளவென்ப.

வெளிப்படவாரா வுரிச்சொல்லைக்கிளந்தோதிவிரிக்கின்ருர். அவைதாமெ ன்றது வெளிப்படவாரா வுரிச்சொற்ருமென்றவாறு. அதற்குமுடிபு அவைதா மம்மாமெம்மே மென்னுங்கிளவியுமென்புழி யுரைத்தாங்குரைக்க. உறுபுனற ந்துலகூட்டி-எ-ம், ஈயாதுவீயுமுயிர்தவப்பலவே-எ-ம், வந்துநனிவருந்தினைவா ழியென்னெஞ்சே-எ-ம்- உறுதவநனியென்பன மிகுதியென்னுங்குறிப்புப்பொ ருளுணர்த்தும். எ-று. குறிப்புச்சொல் பரப்புடைமையான் முற்கூறினர்.(ங)

௨௯௭. உருவுட்காகும் புரையுயர்பாகும்.

உருகெழுகடவுள்-எ-ம், புரையமன்றபுரையோர்கேண்மை-எ-ம்- உருவும் புரையுமுட்கு முயர்புமுணர்த்தும். எ-று. (ச)

௨௯௮. குருவுங்கெழுவு நிறனகும்மே.

குருமணித்தாலி-செங்கேழ்மென்கொடி- எனக்குருவுங்கெழுவு நிறமென் னும் பண்புணர்த்தும். எ-று. (ரு)

௨௯௯. செல்லலின்ன லின்னுமையே.

மணங்கமழ்வியன்மார்பணங்கியசெல்லல்-எ-ம், வெயில்புறந்தரூஉ மின்னலியக்கத்து-எ-ம்- செல்லலு மின்னலு மின்னாமையென்னுங் குறிப்புணர்த்தும். எ-று. (சு)

ஙOO. மல்லல்வளனே யேபெற்றாகும்.

மல்லன்மால்வரை-எ-ம், ஏகலடுக்கம்-எ-ம்-மல்லலுமேவும் வளமும்பெற்றுமாகிய குறிப்புணர்த்தும். எ-று. பெற்றாகுக்கம். ஈதக்காலத்துப்பயின்றது போலும். இவையிரண்டுசூத்திரம். (எ)

ஙOக. உகப்பேயுயர்த லுவப்பேயுவகை.

விசும்புகந்தாடாது-எ-ம,உவந்துவந்தாரவநெஞ்சமொடாய்நலனளஇய- எ-ம்- உகப்புமுவப்பு முயர்தலுமுவகையுமாகிய குறிபபுணர்த்தும். எ-று. (அ)

ஙOஉ. பயப்பேபயனும் பசப்புநிறனாகும்.

பயவாக்களரனையர்-எ-ம், மையில்வாண்முகம் பசப்பூரும்மே-எ-ம்- பயப்பும்பசப்பும் பயனுநிறவேறுபாடுமாகிய குறிபபும்பண்புமுணர்த்தும். எ-று. இவையுமிரண்டுசூத்திரம். (கூ)

ஙOங. இயைபேபுணர்ச்சி யிசைப்பிசையாகும்

இயைந்தொழுகும்-யாழிசைபூர்ப்புக்குமென இவைபுணர்ச்சிக்குறிப்பும் இசைப்பொருண்மையுமுணர்த்தியவாறு. இவையுமிரண்டுசூத்திரம். (கO)

ஙOச. அலமரறெருமர லாயிரண்டுஞ்சுழற்சி.

அலமரலாயம்-எ-ம், தெருமாலுள்ளமொடன்னைதுஞ்சாள்-எ-ம்- அலமரலுந்தெருமரலுஞ் சுழற்சியாகிய குறிப்புணர்த்தும். எ-று. (கக)

ஙOரு. மழவுங்குழவு மிளமைப்பொருள.

மழகளிறு-எ-ம், குழக்கன்று-எ-ம் - மழவுங்குழவுமிளமைக்குறிப்புணர்த்தும். எ-று. (கஉ)

ஙOசு. சீர்த்திமிகுபுகழ் மாலையியல்பே.

வயக்கஞ்சால்சீர்த்தி-எ-ம், இரவின்வரன்மாலையனே-எ-ம்- சீர்த்தியுமாலையும்பெரும்புகழு மியல்புமாகிய குறிப்புணர்த்தும். எ-று. இவையுமிரண்டுசூத்திரம். (கங)

ஙOஎ. கூர்ப்புங்கழிவு முள்ளதுசிறக்கும்.

துனிகூரெவ்வமொடு-எ-ம், கழிகண்ணோட்டம்-எ-ம் - கூர்ப்புங்கழிவுமொன்றனது சிறத்தலாகிய குறிப்புணர்த்தும். எ-று. உள்ளதென்றது முன்சிறவாதுள்ளதென்றவாறு. (கச)

௩௦௮. கதழ்வுந் துனைவும் விரைவின் பொருள.

கதழ்பரிநெடுந்தோ-எ-ம், துனைபரிநிவக்கும்புள்ளினமான-எ-ம் - கதழ்வுந்துனைவும்விரைவாகியகுறிப்புணர்த்தும்-எ-று. (௧௫)

௩௦௯. அதிர்வும்விதிர்ப்பு நடுக்கஞ்செய்யும்.

அதிரவருவதோர்நோய்-எ-ம், விதிர்ப்புறவறியாவேமக்காப்பினை- எ-ம்-அதிர்வும் விதிர்ப்புநடுக்கமாகியகுறிப்புணர்த்தும். எ-று. அதிழ்வென்றுபாடமோதிஅதிழ்கண்முரசமென்றுதாரணங்காட்டுவாருமுளர். (௧௬)

௩௧௦. வார்தல்போக லொழுகன்மூன்று, நேர்புநெடுமையுஞ் செய்யும்பொருள.

வார்ந்திலங்குவையெயிற்று-வார்கையிறவொழுகை-எ-ம, போகுகொடிமருங்குல்-வெள்வேல்விடத்தேரொடுகாருடைபோகி - எ-ம், ஒழுகுகொடிமருங்குல்-மால்வரையொழுகியவாழை-எ-ம்- வார்தல்போகல ஒழுகலென்னுமூன்றுசொல்லுநேர்மையுநெடுமையுமாகியபண்புணர்த்தும்.எ-று. (௧௭)

௩௧௧. தீர்தலுந்தீர்த்தலும் விடற்பொருட்டாகும்.

தீர்தலுந்தீர்த்தலுமென்னுமிரண்டும்விடுதலாகியகுறிப்புணர்த்தும்- எ-று. துணையிற்றீர்ந்த கடுங்கண்யானை-எனவரும். தீர்த்தல் விடுதறபொருண்மைக்கண்வநதவழிக்கண்டுகொள்க. தீர்த்தலென்பது செய்வித்தலையுணர்த்திநின்றநிலைமையெனிற்செய்வித்தலையுணர்த்துநிலைமைவேறுதின் இயைபே புணர்ச்சியென்புழியுமியைப்பெனவேறோதலவேண்டும்;அதனாற்றீர்தலுஞ் செய்தலையுணர்த்துவதோருரிச்சொலெனவேபடுமென்பது. விடற்பொருட்டாகுமென்பதனையிரண்டனொடுங்கூட்டுக. பன்மையொருமைமயக்கமெனினுமமையும்.(௧௮)

௩௧௨. கெடவரல்பண்ணையா யிரண்டும்விளையாட்டு.

கெடவரலாயமொடு-எ - ம், பண்ணைத்தோன்றியவெண்ணான்குபொருளும்-எ-ம்வரும். (௧௯)

௩௧௩. தடவுங்கயவு நளியும்பெருமை.

வலிதுஞ்சுதடக்கைவாய்வாட்குட்டுவன் - கயவாய்ப்பெருங்கையானை-நளிமலைநாடன்-எனத்தடமுதலியனபெருமையாகியபண்புணர்த்தும். எ-று. கயவென்பதுவழக்கு. (௨௦)

௩௧௪. அவற்றுட், டடவென்கிளவி கோட்டமுஞ்செய்யுங், கயவென்கிளவி மேன்மையுஞ்செய்யு, நளியென்கிளவி செறிவுமாகும்.

தடமருப்பெருமை-கயந்தலைமடப்பிடி-சிலைப்புவல்லேற்றிற் றலைக்கைதந்துநளிந்தலைவருதலுடன்றனளாகி-எனத்தடவென்கிளவிமுதலாயினபெருமை

யெயன்றிக்கோட்டமுமேன்மையுமாகியபண்புஞ்செறிவாகியகுறிப்பு முணர்த்தும்-எ-று. இவைமூன்றுசூத்திரம். (உக)

ருகரு. பழூதுபயமின்றே சாயன்மென்மை, முழூதென்கிளவி யெஞ்சாப்பொருட்டே.

பழூதுகழிவாளுள்-எ-ம், மயிற்சாயன்மகள்வேண்டி-எ-ம், மண்முழுதாண்ட-எ-ம்- பழுதுமுதலியனபயமின்மையாகியகுறிப்பு மேன்மையாகியபண்புமெஞ்சாமையாகியகுறிப்புமுணர்த்தும்-எ-று. இவைமூன்றுசூத்திரம்.(உஉ)

ருகசு. வம்புநிலையின்மை மாதர்காத, னம்புமேவு நசையாகும்மே.

வம்புமாரி-மாதர்நோக்கு-நயந்துநாமவிட்ட நன்மொழிநம்பி-பெயரிசை நவிரமேவுங்காரிகையுண்டி-எனவம்புமாதருநிலையின்மையுங்காதலுமாகியகுறிப்புணர்த்தும்; நம்புமேவுநசையாகியகுறிப்புணர்த்தும். எ-று. மேவுநசையாக. இவைமூன்றுசூத்திரம். (உரு)

ருகஎ. ஓய்தலாய்த னிழத்தல்சாஅ, யாவயினான்கு முள்ளதனுணுக்கம்.

வேனிலுழந்த வறிதுயங்கோய்களிறு-பாய்ந்தாய்ந்ததானைபரித்தானமை நதினை-கிழத்தயானைமெய்புலம்பட- கயமறலெதிரக் கடும்புனல்சாஅய்-என ஓய்தன்முதலாயின நுணுக்கமாகிய குறிப்புணர்த்தும். எ- று. ஆய்ந்ததானை-பொங்குதல்வீதலானுணுகியதானை. உள்ளதெனறது முன்னுணுகாதுள்ளதென்றவாறு. (உசு)

ருகஅ. புலம்பேதனிமை துவன்றுநிறைவாகு, முரஞ்சன்முதிர்வே வெம்மைவேண்டல்.

புலிப்பற்கோத்தபுலம்புமணித்தாலி-எம், ஆரியர்துவன்றியபேரிசைமூதூர்-எ-ம், சூர்முரஞ்செழிலி- எ-ம், வெங்காமம் - எ-ம்- புலம்புமுதலாயினதனிமையுநிறைவுமுதிர்வுமாகியகுறிப்பும் வெம்மையாகியபண்புமுணர்த்தும். எ-று. இவைநான்குசூத்திரம். (உ௫)

ருகசு. பொற்பேபொலிவு வறிதுசிறிதாகு, மேற்றநினைவுந் துணிவுமாகும்.

பெருவரையடுக்கம்பொற்ப-எ-ம், வறிதுவடக்கிறைஞ்சிய-எ-ம்,கானலஞ்சேர்ப்பன்கொடுமையேற்றி- எ-ம், எற்றேறறமில்லாருள்யானேற்றமில்லாதேன்-எ-ம்- பொற்புமுதலாயின முறையேபொலிவுஞ் சிறிதென்பதூஉம் நினைவுந்துணிவுமாகியகுறிப்புணர்த்தும், எ-று. இவையுமூன்றுசூத்திரம். (உசு)

ருஉ0. பிணையும்பேணும் பெட்பின்பொருள.

அரும்பிணையகற்றிவேட்டனாட்பிணம்-எ-ம், அமரர்ப்பேணியுமாகுதியரு த்தியும் - எ-ம்- பிணையும்பேணுமபெட்பின்பொருளாகியபுறந்தருதலென்னுங்கு றிப்புணர்த்தும்-எ-று. பெட்பின்பொருளவென்பதனாற்பெட்பின் பொருளாகி யவிரும்புதலுணர்த்தலுங்கொள்க. அதுவந்தவழிக்கண்டுகொள்க. (உஎ)

**௩௨க. பணையேபிழைத்தல் பெருப்புமாகும்.**

பணைத்துவீழ்பகழி-எனப்பணையெனபது பிழைத்தலாகிய குறிப்புணர்த் தும்; அதுவேயன்றிப்பணைத்தோளெனப பெருப்புமாகியகுறிப்புமுணர்த்தும் எ-று. பெருமையாகிய பணபுணர்த்தாது பெருத்தலாகியகுறிப்புணர்த்துபெ ன்பார்பெருப்பென்றார். (உஅ)

**௩௨௨. படரேயுள்ளல் செலவுமாகும்.**

வள்ளியோர்ப்படர்ந்துபுள்ளிற்போகி-கறவைகன்றுவயிற்படர-எனப்பட ரென்பதுள்ளுதலுஞ்செலவுமாகியகுறிப்புணர்த்தும. எ-று. (உக)

**௩௨௩. பையுளுஞ்சிறுமையு நோயின்பொருள.**

பையுண்மாலை- எ-ம், சிறுமையுறுபசெய்பறியலரே, எ-ம்- பையுளுஞ்சிறு மையுநோயாகியகுறிப்புணர்த்தும். எ-று. (௩0)

**௩௨௪. எய்யாமையே யறியாமையே.**

எய்யாமையலைநீயும்வருந்துதி - என எய்யாமையறிவின்மையாகிய குறி ப்புணர்த்தும். எ-று. அறிதறபொருட்டாகிய ..., லெனுமும், எய்த்தலெனரு ளுஞ்சான்றோர்செய்யுட்கண்வாராமையினெய்யாமைஎதிர்மறையன்மையறிக.

**௩௨௫. நன்றுபெரிதாகும்.**

நன்றுபெரிதுற்றனையாற் பெரும-எனநன்றென்பதுபெரிதென்னுங் குறி ப்புணர்த்தும். எ - று. பெருமையென்னது பெரிதென்றதனு னன்றென்பது வினையெச்சமாதலகொள்க. (௩௨)

**௩.௨௬. தாவேவலியும் வருத்தமுமாகும்.**

தாவினன்பொன்றைஇயபாவை-எ-ம், கருங்கட்டாக்கலை பெரும்பிறிதுற் றென-எ-ம்- தாவென்பது வலியும்வருத்தமுமாகிய குறிப்புணர்த்தும். எ-று.()

**௩௨எ. தெவுக்கொளற்பொருட்டே தெவ்வுப்பகையாகும்.**

நீர்தெவுநிரைத்தொழுவர்- எ-ம், தெவ்வுப்புலம்-எ-ம்-தெவுந்தெவ்வுமுறை யானேகொள்ளுதலும்பகையுமாகியகுறிப்புணர்த்தும். எ-று. இவையுமிரண்டு சூத்திரம். (௩௪)

**௩௨அ. விறப்புமுறப்பும் வெறுப்புஞ்செறிவே.**

விறந்தகாப்பொடுண்ணின்றுவலியுறுத்து - எ-ம், உறந்தவிஞ்சி-எ-ம், வெ
ர்த்தகேள்விவிளங்குபுகழ்க்கபிலன்-எ-ம்- விற்பமுதலாயின செறிவென்னுங்
றிப்புணர்த்தும். எ-று. (ருடு)

ருஉகூ. அவற்றுள், விறப்பேவெரூஉப் பொருட்டுமாகும்.

அவலெறியுலக்கைப்பாடுவிறந்தயல்- எனவிறப்பென்பது செறிவேயன்றி
வருவுதற்குறிப்புமுணர்த்தும். எ-று. (ருசா)

ருரு0. கம்பலைசும்மை கலியேய்ழுங்க, லென்றிவைநான்கு ம
ரவப்பொருள.

கம்பலைமூதூர்-எ-ம், ஒலிபெருஞ்சும்மையொடு-எ-ம், கலிகொளாயமலி
தாகுபெடுத்த-எ-ம், உய்வுப்புணர்நதன்றிவ் வழுங்கலூரே - எ-ம்- கம்பலைமு
லியநான்குமரவமாகியவிசைப்பொருண்மையுணர்த்தும். எ-று. (ருஎ)

ருரு க. அவற்றுள், அழுங்கலிரக்கமுங் கேடுமாகும்.

பழங்கணோட்டமுதவியவழுங்கினேனல்லனோ வயர்ந்தனன்மன்னே,
-ம், குணனழுங்கக்குற்றமுழைநின்றுகூறுஞ்சிறியவர்கட்கு-எ-ம் - அழுங்கல்
ரவமேயன்றியிரக்கமுங்கேடுமாகியகுறிப்புமுணர்த்தும். எ-று. (ருஅ)

ருருஉ. கழுமென்கிளவி மயக்கஞ்செய்யும்.

கழுமியஞாட்பு-எனக்கழுமென்பதுமயக்கமாகியகுறிப்புணர்த்தும். எ-று.

ருருரு. செழுமைவளனுங் கொழுப்புமாகும்.

செழும்பல்குன்றம்-எ-ம், செழுந்தடிதின்ற-செழுமதிள்-எ-ம்- செழுமை
வளனுங் கொழுப்புமாகிய பண்புணர்த்தும். எ-று. (சா0)

ருருச. விழுமஞ்சீர்மையுஞ் சிறப்புமிடும்பையும்.

விழுமியோர்காண்டொறுஞ் செய்வர்சிறப்பு-எ-ம், வேற்றுமையில்லா வி
ழுத்துணைப்பிறந்து-எ-ம், நின்னுறுவிழுமங் களைந்தோன்-எ-ம்-விழுமம் முறை
யானே சீர்மையுஞ்சிறப்பு மிடும்பையுமாகிய குறிப்புணர்த்தும். எ-று. (சாக)

ருருடு. கருவிதொகுதி கமநிறைந்தியலும்.

கருவிவானம்-எ-ம், கமஞ்சூன்மாமழை-எ-ம்- கருவியுங்கமமுந்தொகுதியு
நிறைவுமாகிய குறிப்புணர்த்தும். எ-று. கருவிவானமென்புழிக் கருவிமின்னு
முழக்குமுதலாயவற்றதுதொகுதி. இவையிரண்டுசூத்திரம். (சாஉ)

ருருசா. அரியேயைம்மை கவ்வகத்திடுவே.

அரிமயிர்த்திரண்முன்கை- எ-ம், கழுவிளங்காரங்கவைஇயமார்பே-எ -ம்-
அரியுங்கவ்வுமைம்மையுமகத்திடுமாகியகுறிப்புணர்த்தும். எ-று. இவையுமிரண்
டுசூத்திரம்

ஙஙஎ. துவைததலுஞசிலைததலு மியமபலுமிரஙகலு, மிசைப் பொருடகிளவி யெனமனாாபுலவா.

வரிவளை துவைபப-எ-ம, ஆமாநலலேறுசிலைபப-எ-ம, கடிமரநதடியுமோசைதனனூாநெடுமதில வரைபபிற கடிமனையியமப-எ-ம, ஏறிரஙகிருளிடை எ-ம- துவைததனமுதலாயின இசைபபொருளுணாததும. எ-று. (சச)

ஙஙஅ. அவறறுள, இரஙகலகழிநத பொருடடுமாகும.

செயதிரஙகாவினை - என இரஙகலிசையேயனறிப பொருளாநகழிவாகிய குறிபபுமுணாததும. எ-று கழிநதபொருளபறறிவருஙகவலையைக கழிநதபொருளெனறாா. (சரு)

ஙஙகூ. இலமபாடொறகமா யிரணடுமவறுமை.

இலமபடுபுலவோ ரோறறகைநிறைய- எ - ம, ஒககலொறகஞ்சொலலிய- எ-ம- இலமபாடுமொறகமும வறுமையாகியகுறிபபுணாததும. எ-று. இலமெனனுமுரிசசொறபெருமபானமையும பாடெனனுநதொழிலபறறியலலது வாராமையினிலமபாடெனறாா. (சசா)

ஙச0. ஞெமிாதலுமபாயதலும பரததறபொருள.

கருமணனஞெமிரியதிருநகாமுறறதது - எ-ம, பாயபுனல-எ-ம-ஞெமிாதலுமபாயதலும பரததலாகிய குறிபபுணாததும. எ-று. (சஎ)

ஙசக. கவாவுவிருபபாகுஞ சேரோதிரடசி,வியலென்கிளவி யகலபபொருடடே.

கவாஙடைபபுரவி- எ-ம், சோநதுசெறிகுரயகு - எ-ம, வியலுலகம-எ-ம- கவாவுமுதலாயினமுறையானே விருபபுநதிரடசியுமகலமுமாகிய குறிபபுணாததும. எ-று. இவைமூனறுசூததிரம. (சஅ)

ஙசஉ. பேநாமுருமென வருஉங்கிளவி, யாமுறைமூன்று மசசபபொருள.

மனறமாாததபேமுதிாகடவுள-எ-ம், நாநலலாரம - எ-ம, உருமிலசுறறம்- எ-ம்-பேமுதலாயினமூனறுமசசமாகிய குறிபபுணாததும. எ-று. (சகூ)

ஙசங. வயவலியாகும் வாளொளியாகுக், துயவென்கிளவி யறிவின்றிரிபே.

வயககரம- எ-ம, வாண்முகம- எ-ம, துயவுறறேமயாமாக-எ-ம்- வயமுதலாயினவலியுமறிவுவேறுபடுதலுமாகிய குறிபபுமொளியாகிய பணபுமுணாததும். எ-று, இவைமூனறுசூததிரம். (ரு0)

ஙசச. உயாவேயுயஙக லுசாவேசூழ்சசி, வயவென்கிளவி வேடகைபபெருககம.

பருந்திருந்துயாவிளிபயிற்றும்-அயாவுயாநனந்தலை-எ-ம், உசாத்துணை-எ-ம், வயவுறுமகளிர்-எ-ம்-உயாவுமுதலாயினமுறையானேயுபங்கலுஞ்சூழ்ச்சியு ம் வேட்கைப்பெருக்கமுமாகிய குறிப்புணர்த்தும். எ - று. இவைமூன்றுசூ த்திரம். (௫க)

௩சரு. கறுப்புஞ்சிவப்பும் வெகுளிப்பொருள

நிற்கறுப்பதோரருங்கடிமுனையா- எ - ம், நீசிவந்திறுத்தநீரழிபாக்கம்- எ-ம்- கறுப்புஞ்சிவப்பும்வெகுளியாகிய குறிப்புணர்த்தும். எ-று. கருமைசெம் மையென்னுது கறுப்புச்சிவப்பென்றதனாற்றொழிற்பட் டிழியல்ல தவைவெகு ளியணர்த்தாமைகொள்க. (௫௨)

௩சசு. நிறத்துருவுணர்த்தற்கு முரியவென்ப.

கறுத்தகாயா-சிவந்தகாந்தள்-என்றிவைவெகுளியேயன்றி நிறவேறுபாடு ணர்த்தற்குமுரிய. எ-று. இவைவெளிப்படுசொல்லாயினுங் கறுப்புஞ்சிவப்பும் வெகுளிப்பொருளவென்றதனாற்கருங்கண்-செவ்வாய் எனப்பண்பாயவழியல் லது தொழிலாயவழி நிறவேறுபாடுணர்த்தாவென்பதுபடுதலி னதனைப்பாது காத்தவாறு. (௫௩)

௩சஎ. நொசிவுநுழைவு நுணங்குநுண்மை.

நொசிமருங்குல்- எ-ம், நுழைநூறகலிங்கம்-எ-ம், நுணங்குதுகினுடங்கம் போல-எ-ம்- நொசிவுமுதலாயினநுண்மையாகியபண்புணர்த்தும். எ-று.(௫௪)

௩சஅ. புனிறென்கிளவியீன் றணிமைப்பொருட்டே.

புனிற்றுப்பாய்ந்தெனக்கலங்கி- எனபபுனிறென்பதீன்றணிமையாகிய கு றிப்புணர்த்தும். எ-று. (௫௫)

௩சசு. நனவேகளனு மகலமுஞ்செய்யும்.

நனவிற்புகுவிறலிற்றோன்றுநாடன்-எம, நனந்தலையுலகம்-எம்- நனவுகள னுமகலமுமாகியகுறிப்புணர்த்தும்-எ-று. (௫௬)

௩௫௦. மதவேமடனும் வலியுமாகும்.

பதவுமேய்ந்தமதவுநடைகல்லான்-எ-ம், கயிறிடுகதச்சேப்போன் மதமி க்கு-எ-ம்-மதவென்பது மடனும்வலியுமாகிய குறிப்புணர்த்தும். எ-று. (௫௭)

௩௫க. மிகுதியும்வனப்பு மாகலுமுரித்தே.

மதவிடை-எ-ம், மாதர்வாண்முகமதைஇயநோக்கே-எ-ம் - மடனும்வலியு மேயன்றிமிகுதியும்வனப்புமாகிய குறிப்புஞ்சிறுபான்மையுணர்த்தும்-எ-று.ம தவிடையென்புழிமிகுதியுள்ளமிகுதி. (௫அ)

ஙடுஉ. புதிதுபடற்பொருட்டே யாணர்க்கிளவி.

மீன்றொடுபெயருமியாணரூர்-எனயாணரென்பதுவாரிபுதிதாகப்படுதலாகிய குறிப்புணர்த்தும்-எ-று. (டுக)

ஙடுங. அமர்தன்மேவல் யாணுக்கவினாகும்.

அகனமர்ந்துசெய்யாளுறையும்-எ-ம், யாணதுபசலை-எ-ம்-அமர்தலும்யாணுவுமுறையானேமேவுதலுங்கவினுமாகியகுறிப்புணர்த்தும்-எ- று. இவையிரண்டுசூத்திரம். (சுo)

ஙடுச. பரவும்பழிச்சும் வழுத்தின்பொருள.

நெல்லுக்குத்துப்பரவுங்கடவுளுமிலவே-எ-ம்,கைதொழூஉப்பழிச்சி-எ-ம்- பரவும்பழிச்சும்வழுத்தலாகியகுறிப்புணர்த்தும்-எ-று. (சுக)

ஙடுடு. கடியென்கிளவி, வரைவேகூர்மை காப்பேபுதுமை, விரைவேவிளக்க மிகுதிசிறப்பே, யச்சமுன்றெற் றாயீரைந்து, மெய்ப்படத்தோன்றும் பொருட்டாகும்மே.

கடியென்னுமுரிச்சொல்வரைவுமுதலாகியபத்துக்குறிப்புமுணர்த்தும்-எ-று கடிந்தகடிந்தோராரர்செய்தார்க்குஎனவரைவும், கடிநுனைப்பகழிஎனக்கூர்மையும்,கடிகா-கடிமரந்தடியுமோசை-எனக்காவலும், கடிமலர் - கடியுண்கடவுட்கிட்டசெழுங்குரல்-எனப்புதுமையும்,கடிமான்-கடுநதேர்குழித்தஞெள்ளலாங்கண்-எனவிரைவும், கடும்பகல்-எனவிளக்கமும், கடுங்காலொற்றலின்-எனமிகுதியும், கடுநட்பு-எனச்சிறப்பும், கடியையரனெடுத்தகைசெருவத்தானே-எனவச்சமும், கொடுஞ்சுழிப்புகார்த்தெய்வநோக்கிக் கடுஞ்சூடருகுவனினக்கே-எனமுன்றெற்று முணர்த்தியவாறுகண்டுகொள்க. முன்றெற்றுப்புறத்தின்றித்தெய்வமுதலாயினவற்றின்முன்னின்றுதெளித்தல். (சுஉ)

ஙடுசு. ஐயமுங்கரிப்பு மாகலுமுரித்தே.

கடுத்தனளல்லளோவன்னை-எ-ம், கடிமிளகுதின்றகல்லாமந்தி-எ-ம்- கடியென்கிளவிமேற்கூறப்பட்டபொருளையன்றிச் சிறுபான்மையையமுங் கரிப்புமுணர்த்துதற்குமுரித்து-எ-று. ஐயங்குறிப்பு. கரிப்புப்பண்பு. (சுங)

ஙடுஎ. ஐவியப்பாகு முனைவுமுனிவாகும், வையேகூர்மை யெறுழ்வலியாகும்.

ஐதேகாமம்யானே-எ-ம்,சேற்றுநிலமுனைஇயசெங்கட்காரான்-எ-ம்,வைநுனைப்பகழி-எ-ம், போரொறுழ்த்திணிதோள்-எ- ம்- ஐம்முதலாயினமுறையானேவியப்புமுனிவுங் கூர்மையும்வலியுமாகிய குறிப்புணர்த்தும்-எ-று. இவைநான்குசூத்திரம். (சுச)

௩௫௮. மெய்பெறக்கிளந்த வுரிச்சொலெல்லா, முன்னும்பின்
னும் வருபவைநாடி, யொத்தமொழியாற் புணர்த்தன
ருணர்த்த, றத்தமரபிற் றோன்றுமன் பொருளே.

இச்சொலிப்பொருட்குரித்தென மேற்கூறப்பட்ட வுரிச்சொலெல்லாவற்றையு மவற்றுமுன்னும்பின்னும்வருமொழிகளையாராய்ந்து அம்மொழிகளுட்டக்கமொழியாலே யொருபொருளுணர்த்துக; இவ்வாறுணர்த்தவேவரலாற்றுமுறைமையாற்றத்தமக்குரித்தாய பொருள்விளங்கும். எ-று. இஃதென்சொல்லியவாறோவெனின்உறுதவநனியெனவரூஉமூன்றுமிகுதிசெய்யும்பொருளவென்ப-எ-ம், செல்லலின்னலின்னுமையே-எ-ம்- ஓதியவழி அவைபயின்றசொலன்மையானிவைமிகுதியுமின்னுமையுமுணர்த்துமென்றுஆசிரியராணையாற்கொள்வதலலதுவரலாற்றுற்பொருளுணர்த்துமெனப்படாவோவென் றையுறுவார்க்கு உறுகால்-தவப்பல-நனிசேய்த்து-எ-ம், மணங்கமழ்வியன்மார் பணங்கிய செல்லல்-எ-ம்- முன்னும்பின்னும்வருஞ்சொனுடியவற்றுள்இச்சொல்லொடிவ்வுரிச்சொலியையுமென்று கடைப்பிடிககத் தாம்புணர்த்தசொற்கேற்ற பொருள்விளங்குதலினுரிச்சொல்லும் வரலாற்றுற்பொருளுணர்ததுமென்பது பெறப்படுமென ஐயமகற்றியவாறெனக்கொள்க. வரலாற்றுற் பொருளுணர்த்தாவாயிற்குழூவின்வநதகுறுநிலவழக்குப்போல இயற்கைச்சொலெனப் படாவாமென்பது. (௬௫)

௩௫௯. கூறியகிளவிப் பொருணிலையல்ல, வேறுபிறதோன்று
னு மவற்றொடுங்கொளலே.

முன்னும்பின்னும்வருபவைநாடியவழி யுரிச்சொற்குக்கூறப்பட்டபொருளேயன்றிப்பிறபொருடோன்றுமாயினுங்கூறப்பட்ட வற்றொடவற்றையுங்கொள்க - எ-று. கடிநாறும்பூந்துணையொன்றவழிக்கடியென்பது முன்னும் பின்னும் வருபவைநாட வரைவுமுதலாயினபொருட்கேலாது மணப்பொருட்டாயினவாறுகண்டுகொளக. பிறவுமன்ன. (௬௬)

௩௬௦. பொருட்குப்பொருடெரியி னதுவரம்பின்றே.

பயிலாதவற்றைப்பயின்றவைசார்த்திப்பொருளுணர்த்துங்காற்படுமுறைமையுமுணர்த்துகின்றார். ஒருசொல்லையொருசொல்லாற் பொருளுணர்த்தியவழி அப்பொருளுணர்த்தவந்தசொற்கும் பொருள்யாதெனப் பொருட்குப்பலபொருடெரியுமாயின்மேன்மேல்வருவனவற்றிற்கெல்லா மீதொத்தலினவ்வினைவிறைவரம்பின்றியோடும்;அதனாற்பொருட்குப்பொருடெரியற்க.எ-று.ஒருசொற்குப்பொருளுரைப்பதுபிறிதோர்சொல்லானன்றே அச்சொற்பொருளுமறியாதானையுணர்த்துமாறென்னையெனின் அதுவருகின்றசூத்திரத்தாற்பெறப்படும்.

௩௬௧. பொருட்குத்திரிபில்லை யுணர்த்தவல்லின்.

உறுகாலென்புழி உறுவென்னுஞ்சொற்குப்பொருளாகிய மிகுதியென்பதன்பொருளுமறியாதமடவோனுயின் அவ்வாறொருபொருட்கிளவிகொணர்ந் து

ணர்த்தலுறாது கடுங்காலதுவலிகண்டா யீண்டுறுவென்பதற்குப்பொருளெல் றுதொடர்மொழிகூறியானும்,கடுங்காலுளவழிக்காட்டியானும் அம்மாணுக்கனு ணரும்வாயிலறிந்துணர்த்தவல்லானுயி னப்பொருடீரிவுபடாம லவனுணரும் எ-று. அவற்றானுமுணர்தலாற்றுனேயுணர்த்துமாறென்னையெனின்அதற்கன்றே வருஞ்சூத்திரமெழுந்ததென்பது. (சுஅ

௩௯௨. உணர்ச்சிவாயி லுணர்வோர்வலித்தே.

வெளிப்படத்தொடர்மொழிகூறியானுமப்பொருளைக்காட்டியானு முணா த்தவுமுணராதானே யுணர்த்தும்வாயிலில்லை யுணர்ச்சியதுவாயி லுணர்வோர் துணர்வைவலியாகவுடைத்தாகலான். எ-று. யாதானுமோராற்றானுணருந்தன் மைஅவற்கில்லையாயி னவனேயுணாத்தற்பாலனலலன். எ று. (சுகூ

௩௯௩. மொழிப்பொருட்காரணம் விழிப்பத்தோன்றா.

உறுதவமுதலாயினசொற்கு மிகுதிமுதலாயினபொருளாதல் வரலாற்று முறைமையாற்கொள்வதல்ல தவைபப்பொருளவாதற்குக்காரணம் விளங்கத் தோன்றா.எ-று. பொருளொடுசொற்கியைபு இயற்கையாகலானவ்வியற்கையா கியவியைபாற் சொற்பொருளுணர்த்துமென்ப. ஒருசாராரொருசார்ப்பிறகார ணத்தானுமுணர்த்துமென்ப. அவற்றுண்மெய்ம்மையாகியகாரண மாசிரியர்க் குப் புலனாவதல்லது நம்மனோர்கருப்புலனாகாமையின் மொழிப்பொருட்கார ணமில்லையென்றுதவிழிப்பத்தோன்றாவென்றா. அக்காரணம்பொதுவங்கயா னென்றுயினுஞ்சொற்றொறுமுண்மையிற்சிறப்புவகையாற்பலவாம். அதனான் விழிப்பத்தோன்றாவெனப்பன்மையாற்கூறினார். உரிச்சொற்பற்றியோதினாரே னுமேனைச்சொற்பொருட்குமிஃதொக்கும். (எ0)

௩௯௪. எழுத்துப்பிரிந்திசைத்த லிவணியல்பின்றே.

முதனிலையுமிறுதிநிலையுமாகவெழுத்துக்கள்பிரிந்து வேறுவேறுபொருளு ணர்த்தலுரிச்சொலிடத்தியல்புடைத்தன்று. எ - று. இவணியல்பின்றெனவே யெழுத்துப்பிரிந்து பொருளுணர்த்தல் பிறண்டியல்புடைத்தென்பதாம். அ வையாவனவினைச்சொல்லும், ஒட்டுப்பெயருமாம். பிரிதலும் பிரியாமையும் பொருளுணர்த்துவனவற்றிற்கேயாகலின் கூறைகோட்படுதல்கடவுளர்க்கெய் தாதவாறுபோல இடைச்சொறகிவ்வாராய்ச்சியெய்தாமையறிக. தவநனியெ ன்னுநதொடக்கத்தனகுறிப்புவினையெச்சம்போலப் பொருளுணர்த்தலினவை போலப்பிரிக்கப்படுஞ்சொல்லோவென்றையுறுமையையமகற்றியவாறு. (எக)

௩௯௫. அன்னபிறவுங் கிளந்தவல்ல, பன்முறையானும் பரந் தனவரூஉ, முரிச்சொலெல்லாம் பொருட்குறைகூட்ட, வியன்றமருங்கி னினைத்தெனவறியும், வரம்புதமக்கின் மையின் வழிநனிகடைப்பிடித், தோம்படை யாணையிற் கிளந்தவற்றியலாற்,பாங்குறவுணர்தலென்மனார்புலவர்.

அன்னபிறவுங்கிளந்தவல்லபன்முறையானும் பரந்தனவரூஉ முரிச்சொ லெல்லாமென்பது சொல்லப்பட்டனவேயன்றியவைபோல்வனபிறவுமாயீறு பற்றியுணர்த்தற்கடங்காது பலவாற்றானும்பரந்துவரூஉ முரிச்சொலெல்லாம். எ-று. பொருட்குறைகூட்டவியன்றமருங்கினினைத்தெனவறியும் வரம்புதமக் கின்மையினென்பது பொருளொடு புணர்த்துணர்த்தலிசைகுறிப்புப் பண்புப ற்றித்தாமியன்ற நிலத்தித்துணையெனவரையறுத்துணருமெல்லை தமக்கின்மை யினெஞ்சாமைச்கிளத்தலரிதாகலின். எ - று. வழிநனிகடைப் பிடித்தோம் படையாணையிற்கிளநதவற்றியலாற் பாங்குறவுணர்தலென்பது இசையினுங் குறிப்பினும்பண்பினுநதோன்றிப் பெயரினும்வினையினுமெய்தடுமாறி-எ-ம், மு னனும்பின்னும்வருபவைநாடி-எ-ம்- கூறியநெறியைச்சோராமற் கடைப்பிடித் தச்சொலாயினும்பொருள்வேறுகிளத்தல்- எ-ம். ஒத்தமொழியாற் புணர்த்த னருணர்த்தல் தத்தமரபிற்றோன்றுமன்பொருள் - எ-ம் - என்றோற்றரப்பட்ட பாதுகாவலாணையிற்கிளநதவற்றியல்பொடு மரீஇயவற்றைமுறைபபட வுணர் . எ - று. குறிப்புப்பொருண்மை பலவகைத்தாகலானும், பெயரினும்வி னையினுமெய்தடுமாறியுந்தடுமாறாது மொருசொற்பலபொருட்குரித்தாயும்வரு தலானும், ஈறுபற்றித்தொகுத்துணர்த்தற்கனனவிறுடையவன்மையானும் - ப ல்முறையானும்பரநதனவரூஉமென்றார். பொருளைச்சொல்லின்றியமையாமை யினதனைக்குறையென்றார். ஒருவன்வினையும்பயனுமின்றியமையாமையின் வி னைகுறைதீர்நதாரிற்றீர்ந்தன்றலகு- பயக்குறையில்லைத்தாம்வாழுநாளே-என் றற்போல] பொருட்குறை கூட்டவரம்புதமககின்மையினெனவியையும். இரு மையென்பது கருமையும்பெருமையுமாகிய பண்புணர்த்தும். சேணென்பது சேய்மையாகியகுறிபபுணர்த்தும். தொன்மையென்பது பழமையாகியகுறிப் புணர்த்தும். இவையெல்லாமன்னபிறவுஙகிளநதவல்லவென்பதனாற் கொள்க. பிறவுமன்ன. (எஉ)

எட்டாவது

உரிசசொலியல் முற்றிற்று.

---

ஒன்பதாவது

# எச்சவியல்

---

௩கககு. இயற்சொற்றிரிசொற் றிசைச்சொல்வடசொலென், றனைத்தேசெய்யு ளீட்டசசொல்லே.

கிளவியாக்கமுதலாகவுரிச்சொலோத்திறுதியாகக்கிடந்த வோத்துக்களு ளுணர்த்துதற்கிடமின்மையா னுணர்த்தப்படாதெஞ்சிநின்ற சொல்லிலக்கண மெல்லாந்தொகுத்துணர்த்தியவெடுத்துக்கொண்டார். அதனானிவ்வோத்தெச் சவியலென்னும்பெயர்த்தாயிற்று. கண்டீரென்று-எ-ம், செய்யாயென்னுமுன் னிலைவினைச்சொல்-எ-ம், உரிச்சொலின்மருங்கின் -எ - ம், ஒருமைசுட்டியபெ யர்நிலைக்கிளவி-எ-ம்- இவைமுதலாகியசூத்திரங்களா னுணர்த்தப்பட்டவகை

நிலையும், வினைச்சொலிலக்கணமும், வழுவமைதியும்-அவ்வோத்துக்களு ளுண ர்த்தாதீண்டுணர்த்தியதென்னையோவெனின் அதற்குக்காரண மவ்வச்சூத்திர முரைக்கும்வழிச்சொல்லுதும். பலபொருட்டொகுதிகொண்டதனற் பெயர் கொடுக்குங்காற்றலைமையும் பன்மையும்பற்றிக் கொடுப்பினல்லதுபிறிதாறின் மையானும், தலைமையும்பன்மையுமெச்சத்திற்கின்மையானும் பத்துவகையெ ச்சமீண்டுணர்த்தலானெச்சவியலென்றல்பொருந்தாமையுணர்க. செய்யுட்குரி யசொல்லும், அவற்றதிலக்கணமும், அவற்றுற்செய்யுள்செய்வுழிப்படும்விகா ரமும், செய்யுட்பொருள்கோளுமெடுத்துக்கோடற்கணுணர்த்துகின்றார். (இய ற்-சொல்லே) இயற்சொல்லுந்திரிசொல்லுந்திசைச்சொல்லும் வடசொல்லு ம் எனவத்துணையேசெய்யுளீட்டுதற்குரியசொல்லாவன. எ - று. இயற்சொல் லானும், செய்யுட்சொல்லாகிய திரிசொல்லானுமேயன்றித்திசைச்சொல்லும், வடசொல்லும் விராய்ச்சான்றோர்செய்யுள்செய்யுமாறுகண்டேனைப் பாடைச் சொல்லுஞ்செய்யுட்குரியவோவென்றையுற்றார்க்கு இந்நான்குசொல்லுமேசெ ய்யுட்குரியன பிறபாடைச்சொ லுரியவல்லவென்றுவரையறுத்தவாறு. செய் யுட்செய்யலாவதுஒருபொருண்மேற்பலசொற்கொணர்ந்தீட்டல் ஆகலானீட்ட லென்றார். பெயர்வினையிடையுரியென்பன வியற்சொற்பாகுபாடாகலா னியற் சொ லிந்நான்குபாகுபாட்டானுஞ்செய்யுட்குரித்தாம். திரிசொற்பெயராயல்ல துவாரா. என்மனோரொன்பதனைவினைத்திரிசொலென்பாருமுளர். அஃதுஎன்றிசி னோர்-பெறலருங்குரைத்தென்பனபோலச்செய்யுண்முடிவுபெற்று நின்றதென் றலேபொருத்தமுடைத்து. தில்லென்னுமிடைச்சொற் றில்லவென்றானுந் தில் லையென்றானுந்திரிந்துநின்றவழியவைவழக்கிற்குமுரியவாகலிற் றிரிசொலென ப்படாது. கடுங்காலென்புழிக்கடியென்னு முரிச்சொற்பெயரினும்வினையினுமெ ய்தடுமாறியென்பதனுற் பண்புப்பெயராய்ப்பெயரொடுதொக்குவழக்கினுட்ப யின்றுவருதலாற் றிரிசொலெனப்படாது. திசைச்சொலலுளேனைச்சொல்லு முளவேனுஞ்செய்யுட்குரித்தாய்வருவது பெயர்ச்சொல்லேயாம். வடசொல் லுள்ளும்பெயரல்லதுசெய்யுட்குரியவாய்வாராது. இவ்வாறுதல்சான்றோர்செ ய்யுணோக்கிக்கண்டுகொள்க. (க)

௩௯௭. அவற்றுள், இயற்சொற்றாமே, செந்தமிழ்நிலத்து வழ க்கொடுசிவணித், தம்பொருள்வழாமை யிசைக்குஞ் சொல்லே.

அந்நான்கனு ளியற்சொலென்றுசொல்லப்பட்டசொற்றாஞ் செந்தமிழ் நிலத்துவழக்காதற்குப் பொருந்திக்கொடுந்தமிழ்நிலத்துந்தம்பொருள்வழுவா மலுணர்த்துஞ்சொல்லாம். எ-று. அவையாவன-நிலம்-நீர்-தீ - வளி - சோறு- கூழ்- பால்-தயிர்-மக்கள்-மா-தெங்கு-கமுகு-என்னுந்தொடக்கத்தன. செந்தமி ழ்நிலமாவன வையையாற்றின்வடக்கும்,மருதயாற்றின்றெற்கும், கருவூரின்கி ழக்கும், மருவூரின்மேற்குமாம். திரிபின்றியியல்பாகியசொல்லாகலினியற்சொ லாயிற்று. செந்தமிழ்நிலத்திற்குங் கொடுந்தமிழ்நிலத்திற்கும்,பொதுவாகலினி யற்சொல்லாயிற்றெனினுமமையும். நீரொன்பதாரியச்சிதைவாயினு மப்பொருட்

கதுவேசொல்லாய்ச்செந்தமிழ்நிலத்துங்கொடுந்தமிழ்நிலத்தும் வழங்கப்படுத லானியற்சொலாயிற்று. பிறவுமிவ்வாறுவருவனஇயற்சொலாகக்கொள்க. இது மென்பதுகட்டுரைச்சுவைபடநின்றது. (௪)

௩௯௮. ஒருபொருள்குறித்த வேறுசொல்லாகியும், வேறுபொ ருள்குறித்த வொருசொல்லாகியு, மிருபாற்றென்ப திரிசொற்கிளவி.

ஒருபொருள்குறித்துவரும்பலசொல்லும் பலபொருள்குறித்து வருமொ ருசொல்லுமென விருவகைபடுந்திரிசொல். எ - று. வெற்பு - விலங்கல்-வி ண்டு - என்பன ஒருபொருள்குறித்த வேறுபெயர்க்கிளவி. எகினமென்பது - அன்னமுங் கவரிமாவு நாயு முணர்த்துதலானும், உந்தியென்பது யாழ்ப்பத் தலுறுப்புங் கொப்பூழுந் தேர்த்தட்டுங் கான்யாறுமுணர்த்தலானு மிவைவேறு பொருள்குறித்தவொருசொல். திரிசொல்லதுதிரிபாவது உறுப்புத்திரிதலுமுழு வதுஉந்திரிதலுமெனவிருவகைத்து. கிள்ளைமஞ்ஞையென்பனவுறுப்புத் திரிந்த ன. விலங்கல்-விண்டெனபனமுழுவதுந்திரிந்தன. முழுவதுந்திரிந்தவற்றைக்க ட்டியவழக்கென்பாருமுளர். அவைகட்டியசொலலாமாயிற்செய்யுள் வழக்கா மாறில்லை அதனனவையுந்திரிபெனல்வேண்டுமென்பது. அஃதேற் பலசொல் லொருபொருட்குரியவாதலும்,ஒருசொற்பலபொருட்குரித்தாதலும்-உரிச்சொ ன்முதலாயினவியற்சொற்குமுண்மையா னதுதிரிசொற்கிலக்கணமாமாறென் னையோவெனின் அதுதிரிசொற்கிலக்கண முணாத்தியவாறன்று;அதனது பாகு பாடுணர்த்தியவாறு. திரிபுடைமையேதிரிசொறகிலக்கணமாதல் சொலலின்று டிவினப்பொருண்முடித்தலென்பதனுற பெறவைத்தா. கிள்ளைமஞ்ஞையென் பனஒருசொல்லொருபொருட்குரித்தாகிய திரிசொல்லாதலி னிருபாற்றென் றனிரம்பாதெனின்அற்றன்று; ஆசிரியரிருபாற்றென்ப திரிசொற்கிளவியெனத் தொகைகொடுத்தாராகலிறகிள்ளை-மஞ்ஞையென்பனவற்றொ டொருபொருட் கிளவியாய்வருந திரிசொலுளவாகலொன்றே இவைபிறபொருள படுதலொ ன்றே இரண்டனுளொன்றுதிட்பமுடைத்தாதல்வேண்டும்.என்னை? ஆசிரியர்பி றகூறுமையினென்பது. திரித்துக்கொணடது இயறகைச்சொல்லா லின்பம் பெறச்செய்யுளீட்டலாகாமையானன்றே! அதனுறறிரிசொலலெனவே செய் யுட்குரித்தாதலும்பெறப்படும. (௫)

௩௯௯. செந்தமிழ்சேர்ந்த பன்னிருநிலத்துந்,தங்குறிப்பினவே திசைச்சொற்கிளவி.

செந்தமிழ்நிலத்தைச்சேர்ந்தபன்னிரண்டுநிலத்தும தாங் குறித்தபொரு ளை விளக்குந்திசைச்சொல. எ-று. என்றது அவ்வநிலத்துத் தாங்குறித்த பொருள்விளக்குவதல்ல தவ்வியற்சொற்போல வெந்நிலத்துந்தம் பொருள் ளக்காவென்றவாறும். பன்னிருநிலமாவன-பொதுங்காநாடு,ஒளிநாடு,தெ ண்டிநாடு,குட்டநாடு,குடநாடு,பனறிநாடு,கற்காநாடு,சீதநாடு,பூழிநாடு,மலை நாடு,அருவாநாடு, அருவாவடதலையெனச செந்தமிழ்நாட்டுத் தென்கீழ்பால் மு

தலாகலாகவடகீழ்பாலிறுதியாக வெண்ணிக்கொள்க. தென்பாண்டிநாட்டார்-ஆ-எருமை-என்பனவற்றைப்பெற்றமென்றும்,தம்மாமியென்பதனைதந்தையெ வென்றும்வழங்குப. பிறவுமன்ன. தங்குறிப்பினவென்றுதனிமொழி தம்பொருளுணர்த்துமாற்றுக்குச் சொல்லினுமிருமொழி தொடருமிடத்தும தன்னைவந்தானெனவேண்டியவாறுவரப்பெறுமென்றுரல்லவொன்பது. (௪)

௩௭௦. வடசொற்கிளவி வடவெழுத்தொரீஇ, யெழுத்தொடுபு
ணர்ந்த சொல்லாகும்மே.

வடசொற்கிளவியாவதுவடசொற்கேயுரியவெனப்படுஞ் சிறப்பெழுத்தினீங்கியிருசார்மொழிக்கும்பொதுவாகியவெழுத்தானியன்றசொல்லாம். எ-று. எனவேபொதுவெழுத்தானியன்றவடசொல்லுஞ் செய்யுட் செய்தற்குச்சொல்லாமென்றவாறாயிற்று. அவை-வாரி-மேரு-குங்குமம்- மணியென்னுந்தொடக்கத்தன. வடசொல்லாவதுவடசொல்லொடொக்கும தமிழ்ச்சொலென்றுரைானாசிரியரெனின் அற்றன்று ஒக்குமெனறுசொல்லப்படுவன ஒருபுடையானொற்றுமையும்வேற்றுமையுமுடைமையானிரண்டாகல்வேண்டும்; இவையெழுத்தானும்பொருளானும் வேறுபாடின்மையாகியவொருசொல்லிலக்கணமுடைமையானிரண்டுசொல்லெனபபடா. அதனுனொத்தல்யாண்டையது?ஒருசொல்லேயாமென்பது. ஒருசொல்லாயினுமாரியமுந்தமிழுமாகிய விடவேற்றுமையான்வேறாயினவெனின் அவ்வாறாயின்வழக்குஞ்செய்யுளுமாகிய விடவேற்றுமையாற்சோறு கூழென்னுந்தொடக்கத்தனவும் இரண்டுசொல்லாவான் செல்லும்; அதனானிடவேற்றுமையுடையவேனுமொருசொல்லிலக்கண முடைமையானொருசொல்லேயாம். ஒருசொல்லாயவழித்தமிழ்ச்சொல்வடபாடைக்கட்செல்லாமையானும், வடசொலெல்லாத்தேயத்திற்கும் பொதுவாகலானுமிவைவடசொல்லாயீண்டுவழங்கப்பட்டன வெனல்வேண்டும். அதனானதுபோலியுரையாமென்க. அல்லதூஉம் அவைதமிழ்ச்சொலாமாயின் வடவெழுத்தொரீஇயென்றல்பொருந்தாமையானும் வடசொலாதலறிக. (௫)

௩௭௧. சிதைந்தனவரினு மியைந்தனவரையார்.

பொதுவெழுத்தானியன்றனவேயன்றி வடவெழுத்தானியன்றவடசொல் சிதைந்துவரினும் பொருத்தமுடையனசெய்யுளிடத்துவரையார். எ - று. அரமியவியலகத்தியம்பும்-எ-ம், தசநான்கெய்தியபணைமருணோன்றாள்-எ-ம்வரும். சிதைந்தனவரினுமெனப்பொதுப்படக்கூறியவதனான் ஆணை-வட்டம்-நட்டம்-கண்ணனெனப்பாகதமாய்ச்சிதைந்து வருவனவுங்கொள்க. இச்சூத்திரத்தானுமவைதமிழ்ச்சொலன்மையறிக. (௬)

௩௭௨. அந்நாற்சொல்லுந் தொடுக்குங்காலை, வலிக்கும்வழிவலித்தலு மெலிக்கும்வழிமெலித்தலும், விரிக்கும்வழிவிரித்தலுந் தொகுக்கும்வழித்தொகுத்தலு,நீட்டும்வழிநீட்டலுங் குறுக்கும்வழிக்குறுக்கலு,நாட்டல்வலிய வென்மனார்புலவர்.

இயற்சொல் திரிசொல் திசைச்சொல வடசொலென்னுநான்குசொல்லையு ஞ்செய்யுளாகத்தொடுக்குங்கான்மெலியதனைவலிக்கவேண்டும்வழிவலித்தலும் வலியதனைமெலிக்கவேண்டும்வழி மெலித்தலுங் குறைவதனைவிரிக்கவேண்டும் வழிவிரித்தலு மிகுவதனைத்தொகுக்கவேண்டும்வழித் தொகுத்தலுங் குறியத னைநீட்டவேண்டும்வழி நீட்டலு நெடியதனைக்குறுககவேண்டும்வழிக் குறுக்க லுமாகியவறுவகைவிகாரமுஞ்செய்யுளினபம்பெறச்செய்வாருட்டுதலைவலியா கவுடைய. எ- று. குறுக்கையிரும்புலி-முத்தைவரூஉங்காலந்தோன்றின்-என்ப னவலிக்கும்வழிவலித்தல். சுடுமண்பாவை - குன்றியலுகரத்திறுதி - என்பன மெலிக்கும்வழிமெலித்தல். தண்ணந்துறைவன்-என்பது விரிக்கும்வழிவிரித்த ல். மழவரொட்டிய-என்பதுதொகுக்கும்வழித் தொகுத்தல். குன்றிகோபங் கொடிவிடுபவளமொண்செங்காந்தளொக்குநின்னிறம் என்றவழிச்செவ்வெண் ணின்றொகைதொக்குநிற்றலினிதுவுமது. வீடுமின் என்பது நீட்டும்வழி நீட்ட ல். பாசிலையென்பதுகாட்டுவாருமுளர். உண்டார்ந்துஎன்பது உண்டருந்தே னக்குறுகிநிற்றலிற்குறுக்கும்வழிக்குறுக்கல். அழுந்துபடுவிழுப்புண்-என்பது மது. பிறவுமன்ன.நாட்டல்வலியவென்பது இவ்வறுவகைவிகாரமு மின்னுழி யாமென்றுவரையறுக்கப்படா;செய்யுள்செய்யுஞ்சான்றோ ரணிபெறநாட்டலை த்தமக்குவலியாகவுடையவென்றவாறு. நாட்டல்-நிலைபெறச்செய்தல். (எ)

௩௭௩. நிரனிறைசுண்ண மடிமறிமொழிமாற், றவைநான்கென்
ப மொழிபுணரியல்பே.

இனிச்செய்யுளிடத்துவிகாரவகையான் மொழிகடம்முட்புணரு மாறுகூ றுகின்றா. நிரனிறையுஞ்சுண்ணமுமடிமறியுமொழிமாற்றுமெனநான்கென்று சொல்லுப அந்நான்குசொல்லுஞ்செய்யுளிடத்துத்தமமுட்புணரு முறைமை. எ-று. நான்குசொல்லுமென்பதூஉம், செய்யுளிடத்தென்பதூஉ மதிகாரத்தா ற்பெற்றாம். நிரனிறையுஞ்சுண்ணமுமொழிமாற்றுதலொக்குமாயினு நிரனிற்ற லுமளவடியெண்சீரைச்சுண்ணமாகத்துணித்தலுமாகிய வேறுபாடுடைமையா னவற்றைப்பிரித்தவ்வேறுபாட்டாற் பெயர்கொடுத்து வேறிலக்கண மில்லாத மொழிமாற்றைமொழிமாற்றென்றார். இச்சூத்திரத்தான் மொழிப்புணரியலு ன்கெனவரையறுத்தவாறு. (அ)

௩௭௪. அவற்று,ணிரனிறைதானே, பெயரினும்வினையினும்வினை
யத்தோன்றிச், சொல்வேறுநிலைஇப் பொருள்வேறு
நிலையல்.

அந்நான்கனுணிரனிறையாவது பெயரானும்வினையானும்ஆராயத்தோன் றிச்சொல்வேறுநிற்பப்பொருள்வேறுநிற்றலாம். எ-று. தொடர்மொழிப் பொ ருண்முடிக்குஞ்சொற்கண்ணதாகலான்முடிக்குஞ்சொல்லைப் பொருளென்றார். வினையினும்பெயரினுமென்றதனான் வினைச்சொல்லான்வருவதூஉம், பெயர்ச் சொல்லான்வருவதூஉம்,அவ்விருசொல்லான்வருவதூஉமெனநிரனிறைமூன்று ம். மாசுபோகவுங்காய்பசிநீங்கவுங்கடிபுனன்மூழ்கியடிசில்கைத்தொட்டு-என

முடிவனவுமுடிப்பனவுமாகிய வினைச்சொல்வேறுவேறுநிற்றலின் வினைநிரனி
றையாயிற்று. அவைமாசுபோகப்புனன்மூழ்கி,பசிநீங்கவடிசில்கைத்தொட்டு-
எனஇயையும். கொடிகுவளைகொட்டைநுசுப்புண்கண்மேனி - எனமுடிவனவு
முடிப்பனவுமாகிய பெயர்ச்சொல்வேறுவேறுநிற்றலிற் பெயர்நிரனிறையாயி
ற்று. அவைநுசுப்புக்கொடி, உண்கண்குவளை, மேனிகொட்டை-எனவியையும்.
உடலுமுடைந்தோடுமூழமலரும்பார்க்கும், கடலிருளாம்பல்பாம்பென்ற, கெ
டலருஞ்சீர்த், திங்கடிருமுகமாச்செத்து-எனமுடிப்பனவாகியவினையுமுடிவன
வாகியபெயரும் வேறுவேறுநிற்றலிற்பொதுநிரனிறையாயிற்று. அவைகடலு
டைலும், இருளுடைநதோடும், ஆம்பலூழ்மலரும்,பாம்புபார்க்குமெனவியையு
ம். நினையத்தோன்றியென்றதனாற்சொல்லும்பொருளும் வேறுவேறுநிற்குங்
கால்நிரல்படநில்லாது களிறுங்கந்தும்போலநளிகடற்கூம்புங்கலனுநதோன்று
ந்தோன்றன்மறநதோர்துறைகெழுநாட்டே-எனமயங்கிவருதலுங்கொள்க.(௯)

௩௭௫. சுண்ணந்தானே, பட்டாங்கமைந்த வீரடியெண்சீ, ரொ
ட்டுவழியறிந்து துணிந்தனரியற்றல்.

சுண்ணமாவதியல்பாகவமைந்த வீரடிக்கணுளவாகிய எண்சீரைத்துணி
த்தியையும்வழியறிந்துகூட்டியியற்றப்படுவதாம். எ - று. அளவடியல்லாதன
விகாரவடியாகலிற்பட்டாங்கமைநதிலவாகலிற் பட்டாங்கமைந்த வீரடியென
வேயளவடியாதல்பெறப்படும். ஈரடியெண்சீர்விகாரவடியானும்பெறப்படுதலி
னவற்றைநீக்குதற்குப்பட்டாங்கமைந்தவீரடியென்றார். எனவேசுண்ணமளவ
டியிரண்டாலுளல்லதுபிறண்டுவாராதென்பது. சுரையாழவம்மிதப்பவரைய
னைய,யானைக்குநீத்துமுயற்குநிலையென்ப. கானகநாடன்சுனை-என்புழிஆழமித
ப்பநீத்துநிலை-என்பனவும், சுரையம்மியானைமுயற்கு-என்பனவும்-நின்றுழிநிற்
பவியையாமையிற்சுரைமிதப்ப,அம்மியாழ, யானைக்குநிலை,முயற்குநீத்தெனத்
துணித்துக்கூட்ட வியைந்தவாறுகண்டுகொள்க. சுண்ணம்போலச்சிதரய்ப்ப
ரந்துகிடத்தலிற்சுண்ணமென்றார். (௧௦)

௩௭௬. அடிமறிச்செய்தி யடிநிலைதிரிந்து. சீர்நிலைதிரியாது த
டுமாறும்மே.

அடிமறிச்செய்யுளாவது சீர்நின்றாங்குநிற்பவடிகடத்தநிலையிற்றிரிந்தொ
ன்றனிலைக்களத்தொன்றுசென்றுநிற்கும். எ- று. எனவேயெல்லாவடியும் யா
ண்டுஞ்செல்லுமென்பதாம். மாறுக்காதலர்மலைமறைந்தனரே, யாறுக்கட்பனி
வரலானவே, வேறுமென்றோள்வளைநெகிழும்மே, கூறாய்தோழியான்வாழுமா
றே- எனவரும். இதனுட்சீர்நின்றாங்குநிற்பப் பொருள்சிதையாம லெல்லாவடி
யுந்தடுமாறியவாறுகண்டுகொள்க. பெரும்பான்மையுநாலடிச்செய்யுட்க ணல்
லதிப்பொருள்கோள்வாராதென்க.நிரனிறைதானேசுண்ணந்தானே மொழிமா
ற்றியற்கையென்பனபோலவீண்டுமடிமறிச்செய்தியென்பதனைக் குறளடியாக்
கியடிநிலைதிரிந்துசீர்நிலைதிரியாதுதடுமாறும்மேபொருடெரிமருங்கினென்றுசூ
த்திரமாகவகுப்பாருமுளர். (௧௧)

௩௭௭. பொருடெரி மருங்கி, னீற்றடியிறுசீ ரெருத்துவயிற்றி
ரியுந், தோற்றமும்வரையா ரடிமறியான.

பொருளாராயுங்காலடிமறிச்செய்யுட்கணீற்றடியதிறுதிச்சீ ரெருத்தடியிற்சென்றுதிரிதலும்வரையார். எ-று. சீர்நிலைதிரியாததடுமாறுமென்றுராகலிற் சீர்நிலைதிரிதலுமொருவழிக்கண்டெய்தியதிகந்துபடாமற்காத்தவாறு. இலக்கியம்வந்தவழிககண்டுகொள்க. எருத்துவயினென்பதற் கீற்றயற்சீர்வயினென்றுபொருளுரைத்துச் சூரல்பம்மியசிறுகான்யாறே, சூரரமகளி ராரணங்கினரே, சாரனுடைநீவருதியே, வாரலெனினேயானஞ்சுவலே - என்புழியஞ்சுவல்யானெனவிறுதிச்சீரீற்றயற்சீர்வயிற்சென்றுதிரிநததென்று தாரணங்காட்டினார்லுரையாசிரியரொனின்யானஞ் சுவலெனநின்றுங்குறிப்பவும் பொருள்செல்லுமாகலி னிவ்வாறுதிரிதல்பொருந்தாமையி னவாக்கதுகருத்தன்றெனக. எல்லாவடியும் யாண்டுஞ்செல்லுமாயினு முரைப்போர்குறிப்பானெருத்தெனறு மீற்றடியென்றுங்கூறினார். உரைப்போர்குறிப்பி னுணாவகையன்றி, யிடைப்பான்முதலூறென்றவைதம்மின், நீக்கப்படாதனமண்டிலயாப்பே - எனவுரைப்போர்குறிப்பான் முதலுமிடையுமீறுங்கோடல் பிறருங்கூறினாரென்பது.(கஉ)

௩௭௮. மொழிமாற்றியற்கை, சொன்னிலைமாற்றிப் பொருளெ
திரியைய, முன்னும்பின்னுங் கொள்வழிக்கொளாஅல்.

அம்மொழிமாற்றினதியல்பு பொருளெதிரியையுமாறுசொன்னிலையைமாற்றிமுன்னும்பின்னுங்கொள்ளும்வழிக் கொளுவுதலாம். எ-று. ஆரியமன்னர் பறையினெழூந்தியம்பும், பாரிபறம்பின்மேற்றண்ணுமை, காரி,விறன்முள்ளூர் வேங்கைவீதாஞுணுந்தோளா,ணிறனுள்ளூருளளதலர். எனவிதனுட்பாரி பறம்பின்மேற்றண்ணுமைதா ஞுணுந்தோளாளெனவும, நிறன்விறன்முள்ளூர் வேங்கைவீயெனவும், உள்ளூருள்ளதாகிய வல ராரியமன்னர்பறையினெழூந்தியம்புமெனவும் - முன்னும்பின்னுங்கொள்வழி யறிந்துகொளுவப் பொருளெதிரியைந்தவாறு கண்டுகொள்க.மொழிமாறறுநின் றென்றறகொன்று செவ்வாகாமை கேட்டார்கூட்டியுணருமாற்றுற்கடாவல்வேண்டும்;அல்லாக்காலவாய்நிலையுந்தகுதியுமுடையவேனு மண்மைநிலையாகியகாரணமின்மையாற் சொற்கடம்முளியையாவாமென்க. (கங)

௩௭௯. தநநு எ எனு மவைமுதலாகிய, கிளைநுதற்பெயரும்
பிரிப்பப்பிரியா.

செய்யுட்குரியசொல்லுஞ் சொற்றொடுக்குங்காற்படும் விகாரமுமவைசெய்யுளாக்குங்காற்றம்முட்புணர்ந்து நிற்குமாறுமாகிய செய்யுளொழிபுணர்த்தியினிவழக்கிலக்கணத் தொழிபுகூறுகின்றார். த ந நு எ-என்பனவற்றை முதலாகவுடையவாய்க் கிழமைநுதலிவரும்பெயரும் பிரிக்கப்படா. எ-று. அவையாவன தமன்-தமள்-தமர், நமன்-நமள்-நமர், நுமன் - நுமள்-நுமர், எமன்-எமள்-எமர், தம்மான்-தம்மாள்-தம்மார், நம்மான்-நம்மாள்-நம்மார், நும்மா

ன்-நும்மாள்-நும்மார்,எம்மான்-எம்மாள்-எம்மார்-எனவரும். உம்மையாற்பிற கிளைநுதற்பெயரும் பிரிக்கப் பிரியாவென்பதாம். அவை தாய்-ஞாய்-தந்தை-தன்னை என்னுந்தொடக்கத்தன. இவற்றைப் பிரிப்பப்பிரியாவென்ற தென்னை யோவெனின் வெற்பன்பொருப்பனென்னுந் தொடக்கத்தொட்டுப்பெயர் வெற்பு-அன், பொருப்பு-அன்-எனப்பிரித்தவழியும் வெற்புப்பொருப்பென்னு முதனிலை தம்பொருளை இனிதுவிளக்கும். தமன்-எமனென்பனவற்றைத் தம்-அன், எம்- அன்-எனப்பிரிக்குமிடத்-தம்-எம் - என்பனமுதனிலையாய்ப்பொருளுணர்த்துவனவாகல்வேண்டும் அவைபொருளுணர்த்தாமையாற்றமனெமனெனவழங்கியாங்குக்கொள்வதல்லதுபிரிக்கப்படாமையி னவ்வாறுகூறினொன்க. பிறவுமன்ன.அஃதேல்தாம்-யாம்-என்பனவற்றிற்குமுதனிலையாகப்பிரிக்கவேயவையுந் தம்பொருளுணர்த்துமெனின் தமன்-எமன் - என்பன தன்கிளை-என்கிளை-எ-ம், தங்கிளை-எங்கிளை-எ-ம்- முதனிலைவகையான் ஒருமைக்கும்பன்மைக்கும் பொதுவாதலுடைய; ஒருமையுணர்த்துங்கால் தாம்யாம் என்பனபொருந்தாமையான் தாம்யாமென்பனவே முதனிலையெனல்வேண்டும்; வேண்டவேயிவ்வாறுபிரிப்பின் தமன்-எமன்-என ஓரோவொன் றிரண்டுசொல்லாதல் வேண்டுதலானெழுத்தானும் பொருளானும் வேறுபாடின்மையி னொருசொல்லென வேபடும். இரண்டுசொல்லென்ற லிரம்பாமையினவ்வாறுபிரித்தலும் பொருத்தமின்றென்பது. கிளைநுதற்பெயர் விளிமரபின்கட் பெறப்பட்டமையாற் பெயரியலினுணர்த்தாராயினும் அதனுண்டியையுபட்டின்றுகலாற் பிரிப்பப்பிரியா வொருசொலடுக்கொடியைய விதனை யீண்டுவைத்தார். (கச)

௲அ௦. இசைநிறையசைநிலை பொருளொடுபுணர்தலென், றவை
மூன்றென்ப வொருசொலடுக்கே.

இசைநிறையு மசைநிலையும் பொருள்வேறுபாட்டொடு புணர்வதுமென வொருசொலடுக்கு மூன்றுவகைப்படும். எ-று. ஏ ஏ யம்பன் மொழிந்தனளெ ன்பதிசைநிறை. மற்றோ மற்றோ, அன்றோ அன்றோ - என்பனவசைநிலை. பாம்பு பாம்பு,அவன் அவன், வைதேன் வைதேன், உண்டு உண்டு,போம் போம்-என்பனமுறையானே விரைவுந்துணிவு முடம்பாடு மொருதொழில்பலகாலிகழ்தலுமாகிய பொருள்வேறுபாடுணர்த்தலிற் பொருளொடுபுணர்தல். பொருள்வேறுபாடு பிறவுமுளவேல் வழக்குநோக்கிக் கண்டுகொள்க. அடுக்கொருசொல்லது விகாரமெனப்படும் இரண்டுசொல்லாயி னிருபொருளுணர்த்துவதல்ல திப்பொருள்வேறுபாடுணர்த்தாமையினென்பது. (கரு)

௲அக. வேற்றுமைத்தொகையே யுவமைத்தொகையே, வினையின்தொகையே பண்பின்றொகையே, யும்மைத்தொகையே யன்மொழித்தொகையென், றவ்வாறென்பதொகைமொழிநிலையே.

இனித்தொகையிலக்கணமுணர்த்துகின்றார். வேற்றுமைத்தொகை முதலாகத்தொகைச்சொலாறும். எ-று. வேற்றுமையுருபு முவமையுருபு மும்மை

யும் வினைச்சொலீறும் பண்புச்சொலீறுந் தொகுதலிற்றொகையாயின வென்பாரும், அவ்வப்பொருண்மே லிரண்டும்பலவுமாகிய சொற்பிளவுபடாதொற்றுமைப்படத் தம்முளியைதலிற் றொகையாயினவென்பாருமென விருதிறத்தராசிரியர்.செய்தான்பொருள்-இருநதான்மாடத்து-எனவுருபுதொக்கொருசொன்னீர்மைப்படாதனவுந தொகையாவான்சேறலி னவற்றைநீக்குதற்கும், வேழக்கரும்பு-கேழற்பன்றி-என்புழித் தொக்கனவில்லையெனினுந் தொகையென வேண்டப்படுமாகலா னவற்றைத்தழுவுதற்கு முருபுமுதலாயின தொகுதலிற் றொகையென்பார்க்கு மொட்டியொருசொன்னீர்மைப்படுதலுந தொகையிலக்கணமெனல்வேண்டு மதனானுருபுமுதலாயின்தொகுத லெல்லாத்தொகையினுஞ் செல்லாமையா னெல்லாத்தொகைக்கண்ணுஞ்செல்லு மொட்டியொருசொல்லாதல் தொகையிலக்கணமாய்முடிதலி னிவ்வாசிரியர்க் கிதுவே துணிவெனப்படுமென்பது. அற்றாயின் உருபுதொகவருதலும்-எ-ம்,வேற்றுமைதொக்க பெயர்வயினானும்-எ-ம், உம்மைதொக்க பெயர்வயினானும்-எ-ம்- ஓதலானவை யாண்டுத்தொக்கனவெனப்படுமன்றோவெனின் அற்றன்றுஅதுவென்வேற்றுமையுயர்திணைத்தொகைவயி னதுவெனுருபு கெடக்குகரம்வருமேயென்புழி அதுவெனுருபுநின்றுகெட்டதாயினின்றகாலத்துத் திணைவழுவாம். அத்திணைவழுவமைவுடைத்தெனின் விரிக்கின்றுழி நான்காமுருபு தொடராததன்னையே விரிப்பினுமமைவுடைத்து அதனான்முறைமைப்பொருடோன்றநம்பிமகனென விரண்டுசொற்றொக்கனவென்பதே யாசிரியர்கருத்தெனல்வேண்டும்.அல்லதூஉம்வினைத்தொகைபண்புத்தொகை யன்மொழித்தொகையென்பன வற்றின்கண்வினையும்பண்புமன்மொழியுந தொக்குநில்லாமையானு மஃதேகருத்தாதலறிக. அதனானுருபுமுவமையுமும்மையுந்தொகுதலாவது தம்பொருளொட்டியசொல்லாற்றோன்றத்தாமாண்டுப்புலப்படாதே நிற்றலேயாம். வேற்றுமைத்தொகையென்பது வேற்றுமைப்பொருளையுடையதொகையென்றானும், வேற்றுமையொருசார்வுடையதொகையென்றானும், வேற்றுமைப் பொருடொக்கதொகையெனறானும் விரியும். உவமைத்தொகை உம்மைத்தொகை அன்மொழித்தொகை யென்பனவும் அவ்வாறுவிரியும்.அன்மொழியாவதுதொகைச்சொலல்லாதமொழி. வினைத்தொகை பண்புத்தொகையென்பனவினையின துதொகை பண்பின துதொகையெனவிரியும். வினைபண்பென்றதவற்றையுணர்த்துஞ்சொல்லை. ஒருசொல்லாற்றொகையின்மையிற் பிறிதோர்சொல்லொடு தொகுதல் பெறப்படும்.இச்சூத்திரத்தாற் றொகைச்சொலினைத்தெனவரையறுத்தவாறு. (கக)

## ௩௮௨. அவற்றுள்,வேற்றுமைத்தொகையே வேற்றுமையியல.

முற்கூறியவற்றுள்வேற்றுமைத்தொகை யவ்வேற்றுமையுருபுத்தொடர் பொருளுணர்த்தியாங்குணர்த்தும். எ-று. எனவேசாத்தனொடுவந்தானென்னும்பொருட்கட்சாத்தன்வநதான்-எ-ம், சாத்தற்குக்கொடுத்தானென்னும்பொருட்கட்சாத்தன் கொடுத்தான்-எ-ம்-உருபுத்தொடர்ப்பொருளுணர்த்து மாற்றலில்லனதொகா; அவ்வாற்றலுடையனவேதொகுவனவென்றவாறும். இரண்டா

ம்வேற்றுமைத்தொகைமுதலாக வேழ்றுமைத்தொகையறுவகைப்படும். நில ங்கடந்தான்-குழைக்காதன்-எ-ம்,தாய்மூவர்-பொறகுடம்-எ-ம்,கருப்புவேலி-கடிசூத்திரப்பொன்-எ-ம், வரைபாய்தல்-கருவூர்க்கிழக்கு-எ-ம், சாத்தன்பொ த்தகம்-கொற்றனுணர்வு-எ-ம்,மன்றப்பெண்ணை-மாரியாமா-எ-ம்-வரும். இவை முறையானே-நிலத்தைக்கடந்தான் -குழையையுடையகாதன்,தாயொடுமூவர், பொன்னுனியன்றகுடம், கரும்பிற்குவேலி, கடிசூததிரதிற்குப்பொன்,வரை யினின்றும்பாய்தல், கருவூரின்கிழக்கு, சாத்தனதுபொத்தகம், கொற்றனது ணர்வு, மன்றத்தின்கணிற்கும்பெண்ணை,மாரிக்கணுளதாமா - என்னுமுருபுத் தொடர்ப்பொருளை யினிதுவிளக்கியவாறுகண்டுகொள்க. பிறவுமன்ன. (கஎ)

கூஅகூ. உவமைத்தொகையே யுவமவியல.

உவமைத்தொகை உவமவுருபுத்தொடர்போலப்பொருளுணர்த்தும். எ-று. எனவேபுலியன்னசாத்தன்-மயிலன்னமாதர்- என்னும்பொருட்கட்புலிச்சாத்த ன்-மயின்மாதர்-எனவப்பொருள் விளக்குமாற்றலில்லனதொகா; ஆற்றலுடை டையனவேதொகுவனவென்பதாம். புலிபபாய்த்துள்-மழைவண்கை-துடிநடு வு-பொன்மேனி-என்பனபுலிப்பாய்த்துளன்னபாய்த்துள்- மழையையொக்கு ம்வண்கை-துடியன்னநடுவு-பொனனன்னமேனி-எனத்தம்விரிப்பொருளுணர் த்தியவாறுகண்டுகொள்க. அஃதேல்புலிப்பாய்த்துளையொக்கும்பாய்த்துள்-ம ழையையொக்கும்வண்கை-எனவிரிதலினவையெல்லாம் வேற்றுமைத்தொகை யெனவேபடும். அதனானுவமைத்தொகையெனவொன்றில்லையெனின் அற்றன் று-சொல்லுவார்க்கதுகருத்தாயினவைவேற்றுமைத்தொகையுமாம்; அக்கருத் தானன்றிப்புலியன்னபாய்த்துள்-பொன்மானுமேனி - எனவேற்றுமையொடி யைபில்லாவுவமவுருபுத்தொடர்ப்பொருட்கட் டொக்கவழி யுவமைத்தொகை யாவதல்லதுவேற்றுமையாண்டின்மையின் வேற்றுமைத்தொகையாமா றில் லையென்க. உவமவுருபு ஒப்பில்வழியாற்பொருள்செய்யுமிடைச்சொ லாகலா ன்வினையும்வினைக்குறிப்பும்பற்றிவரு மிரண்டாம்வேற்றுமையவைபற்றி- வூன் போற்பெருவிதுப்புறுகநின்னையின்னாதுற்றவறனில்கூரோ - என்புழிப்போலெ ன்பதுகுறிப்புவினையெச்சமாய்நிற்றலானும்,நும்மனோருமற்றினையராயினெம் மனோரிவட்பிறவலர்மாதோ-என்புழிஅன்னுறொன்பதிடைச்சொன்முதனிலையா கப்பிறந்த குறிப்புப்பெயராகலானும்-என்னைப்போல்நும்மையன்னோரொம்மை யன்னோரெனஇரண்டாவதுவிரித்தற்கேற்புடைமையறிக. (கஅ)

கூஅச. வினையின்தொகுதி காலத்தியலும்.

வினைத்தொகைகாலத்தின்கணிகழும். எ-று. காலத்தியலுமெனப் பொது வகையாற்கூறியவதனான்மூன்றுகாலமுங்கொள்க. தொகுதிகாலத் தியலுமெ னவே அவ்வினைவிரிந்துநின்றவழித்தோன்றுது தொக்கவழித்தொகையா மா ற்றலாற்காலந்தோன்றுமென்றவாறும். ஈண்டுவினையென்றதெவற்றை யெனி ன்வினைச்சொற்கும்வினைப்பெயர்க்குமுதனிலையாய உண்,தின், செல், கொல்-எ னவினைமாத்திரமுணர்த்திநிற்பனவற்றையென்பது. இவற்றைவடநூலார் தா

துவென்ப. ஆடரங்கு-செய்குன்று-புணர்பொழுது-அரிவாள்-கொல்யானை-செல்செலவு-எனவரும்.காலமுணர்த்தாது வினைமாத்திரமுணர்த்தும்பெயர் நிலப்பெயர்முதலாகியபெயரொடுதொக்குழிக்காலமுணர்த்தியவாறுகண்டுகொள்க காலமுணர்த்துகின்றுழிப் பெயரெச்சப்பொருளவாய்நின்றுணர்த்து மென்பது. செய்யுஞ்செய்தவென்னுங்கிளவியின்மெய்யொருங்கியலுந் தொழிறொகு மொழியுமென்பதனாற்கூறினர். தொகைப்பொருளாகியதாம்பிரிந்தவழிப் பெறப்படாமையினாசிரியரிவற்றைப் புணரியனிலையிடையுணரத்தோன்றா வென்றார்; அதனானிவைதஞ்சொல்லான் விரிக்கப்படாமையிற்பிரிவிலொட்டாம். பெயரெச்சநின்றுதொக்கதென்றாரா லுரையாசிரியரெனின்அற்றன்று ஆசிரியரிவற்றைப்பிரித்துப்புணர்க்கப்படா வழங்கியவாறேகொள்ளப்படுமென்றது பிரித்தவழித் தொகைப்பொருள்சிதைதலானன்றே! கொன்றயானையெனவிரிந்தவழியுமப்பொருள்சிதைவின்றேற்புணரியனிலையிடை யுணரத்தோன்றாவென்றற் கோர்காரணமில்லையாம்; அதனாற்பெயரெச்சநின்றுதொகுதலாசிரியர் கருத்தன்மையினுரையாசிரியர்க்கு மதுகருத்தன்றென்க; அல்லதூஉ மாகுபெயருணர்த்தியவழிவினைத்தொகையுளப்பட விருபெயரொட்டுமென்றா ராகலானும் வினைநின்று தொகுதலவர்கருத்தன்மையறிக. அஃதேல் வினைத்தொகைக்கு முதனிலைபெயராமன்றேவெனின் உரிஞென்பதுமுதலாயினவற்றைத் தொழிற்பெயரொன்றாராகலிற் றொழின்மாத்திரமுணர்த்துவனவெல்லாந்தொழிற்பெயரொன்பதாசிரியர்கருத்தென்ப. (கக)

௬அரு. வண்ணத்தின்வடிவி னளவிற்சுவையினென், றன்னபிறவு மதன்குணநுதலி, யின்னதிதுவென வரூஉமியற்கை, யென்னகிளவியும் பண்பின்றொகையே.

வண்ணம் வடிவு அளவு சுவை என்பனவு மவைபோல்வனபிறவுமாகிய குணத்தைநுதலிப்பின்றொக்கவழிக்குணச்சொற்குணமுடையதனை யுணர்த்தலானின்னதிதுவென வொன்றனையொன்றுவிசேடித்திருசொல்லு மொருபொருண்மேல்வருமியல்புடைய வெல்லாத்தொகைச்சொல்லும் பண்புத்தொகையாம். எ - று. நுதலியென்னுஞ்சினைவினையெச்சம் வருமென்னுமுதல்வினையொடுமுடிந்தது. இயற்கையென்றது தொக்குழிப்பண்புடையதனைக் குறித்தலத்தொகைச்சொல்ல தியல்பென்பதல்லதுகாரணங்கூறப்படாதென்றவாறு. தொகைக்கணல்லதச்சொல்லை - உண் - தின் - செல் - கொல் - என்பனபோலப்பொருளுணர்த்தாமையிற்பண்புத்தொகையும் பிரிக்கப்படாதாம். கருங்குதிரையென்பது வண்ணப்பண்பு. வட்டப்பலகையென்பதுவடிவு. நெடுங்கோலென்பதளவு. தீங்கரும்பென்பதுசுவை. பிறவுமென்றதனான் நுண்ணூல், பராரை, மெல்லிலை, நல்லாடையென்னுந்தொடக்கத்தனகொள்க. அவைகரியதாகியகுதிரை, வட்டமாகியபலகையெனப்பண்புச்சொல்லும்பண்புடைப்பொருளே குறித்தலானிருசொல்லு மொருபொருளவா யின்னதிதுவெனவொன்றையொன்றுபொதுமைநீக்கியவாறுகண்டுகொள்க. பிறவுமன்ன. அஃதேற்கரியதாகியகுதிரை வட்டமாகியபலகையென்பன அத்தொகையின் விரியாகலிற்பண்புத்தொகைவிரிக்கப்படாதென்ற தென்னையோவெனின்! அற்றன்று தொ

கைப்பொருளுணர்த்துதற்குப் பிறசொற்கொணர்ந்துவிரித்ததல்லது தன்சொல்லான் விரியாமையினவைவிரியெனப்படாவென்க. வடநூலாரும் பிரியாத்தொகையும் பிறசொல்லான்விரிக்கப்படுமென்றார். கரியதென்னும்பண்புகொள்பெயர்கருங்குதிரையெனத் தொக்கதென்றாரா லுரையாசிரியரெனின் அதனைப்பெயரெச்சம்வினைத்தொகை நிலைமொழியென்றதற்குரைத்தாங்குரைத்து மறுக்க. பிறசொற்கொணர்ந்துவிரிக்குங்காற் கரியகுதிரை, கரியதாகியகுதிரை-கரியதுகுதிரையெனவத்தொகைப்பொருளுணர்த்துவன வெல்லாவற்றானும்விரிக்கப்படும். முதனிலையாவதுகரியன்செய்யன், கருமைசெம்மை யென்பனவற்றிற்கெல்லாமுதனிலையாய்ச் சொல்லானிரம்பாது கருசெவ்வெனப்பண்புமாத்திரமுணர்த்திநிற்பதாம். என்னகிளவியுமென்றதனாற்சாரைப்பாம்பு வேழக்கரும்பு- கேழற்பன்றியெனப்பண்புதொகாது பெயர்தொக்கனவு மத்தொகையாதல்கொள்க. இவற்றதுசாரைமுதலாகிய நிலைமொழிபிரித்தவழியும்பொருளுணர்த்தலினிவற்றைப்பிரித்துப் புணர்த்தார். அஃதேற்பாம்பைச் சாரைவிசேடித்ததல்லது சாரையைப்பாம்புவிசேடித்ததின்றாகலிற்றொன்றை யொன்றுபொதுமைநீக்காமையாற் சாரைப்பாம்பென்பது முதலாயினபண்புத்தொகையாகியவா றென்னையெனின்?நன்றுசொன்னாய் விசேடிப்பதும் விசேடிக்கப்படுவதுமாகிய விரண்டனுள்விசேடிப்பது விசேடியாக்காலதுகுற்றமாம். விசேடிக்கப்படுவது விசேடித்தின்றென்றலும் விசேடிக்கப்படுதலாகிய தன்றன்மைக்கிழுக்கின்மையான் விசேடியாது நிற்பினுமமையுமென்க. இவ்வேறுபாடுபெறுதற்கன்றேயின்னதிதுவென வரூஉமெனப் பின்மொழியை விசேடிப்பதாகவும்,முன்மொழியைவிசேடிக்கப்படுவதாகவுமாசியரோதுவாராயிற்றென்பது. அற்றேனுஞ்சாரையெனவே குறித்தபொருள்விளக்கலிற் பாம்பென்பது மிகையாம் பிறவெனின் அற்றன்று உலகவழக்காவது சூத்திரயாப்புப்போல மிகைச்சொற்படாமற் சொல்லப்படுவதொன்றன்றித் தொன்றுதொட்டுக்கேட்டார்க்குப் பொருளினிதுவிளங்க வழங்கப்பட்டுவருவதாகலிற் கடாவன்றென்க. மிகைச்சொற்படாமைச் சொல்லப்படுமாயின் யான்வந்தேன்-நீ வந்தாயென்றது வந்தேன் வந்தாயென்றே வழங்கல்வேண்டுமென்பது. இனியொற்றுமை நயத்தான்அஃதென்புந்தோலுமுரியவாதலாகிய வுறுப்புஞ்சாரையெனப்படுதலினவற்றைநீக்கலாற் பாம்பென்பதூஉம்பொதுமைநீக்கிற்றென்பாருமுளர். உயர்சொற்கிளவி இடைச்சொற்கிளவி உரிச்சொற்கிளவி என்புழி உயர்சொல் இடைச்சொல் உரிச்சொலென்பன சொல்லென்பதன்கட் கருத்துடையவன்றிக் குறிமாத்திரமாய் உயர் இடை உரியென்றதுணையாய் நின்றனவாகலிற் சாரையென்பது பாம்பை விசேடித்தாற்போல வவைகிளவியென்பதனை விசேடித்து நின்றனவென்பது. அவ்வாற்றானமைவுடையவாயினுஞ் சூத்திரமாகலின் உயர்சொல் இடைச்சொல் உரிச்சொலெனவேயமையும்; கிளவியென்பது மிகையெனின் மிகையாயினு மின்னோரன்னவமைவுடையவென்பதுணர்த்துதற் கவ்வாறோதினாரென்பது. (௨௦)

௩௮௬. இருபெயர்பல்பெய ரளவின்பெயரே, யெண்ணியற்
பெயரே நிறைப்பெயர்க்கிளவி, யெண்ணின்பெயரொ

டவ்வறுகிளவியுங், கண்ணியகிலேத்தே யும்மைத்தொ
கையே.

இருபெயர்முதலாகச் சொல்லப்பட்ட வறுவகைச்சொற்றிரளையுந் தனக்குச்சார்பாகக் குறித்து மும்மைத்தொகை. எ-று. உவாப்பதினான்சென்பது இருபெயராகியவும்மைத்தொகை. புலிவிற்கெண்டையென்பதுபலபெயராகியவும்மைத்தொகை. தூணிப்பதக்கென்ப தளவுப்பெயராகிய வும்மைத்தொகை. முப்பத்துமூவரொன்ப தெண்ணியற்பெயராகிய வும்மைத்தொகை. தொடியரையென்பதுநிறைப்பெயராகியவும்மைத்தொகை. பதினைந்தென்பது எண்ணுப்பெயராகியவும்மைத்தொகை. இனியவைவிரியுங்கால்உவாவும்பதினான்கும்-எ-ம், புலியும் வில்லுங் கெண்டையும்-எ-ம், தூணியும் பதக்கும்-எ-ம், முப்பதின்மரும்மூவரும்-எ-ம், தொடியுமரையும்-எ-ம், பத்துமைந்தும்-எ-ம்-விரியும். வேற்றுமைத்தொகைமுதலாயின பலசொற்றொகுதல்சிறுபான்மை யதனானும்மைத்தொகை யிருசொல்லானும் பலசொல்லானு மொப்பத்தொகுமென்பதறிவித்தற் கிருபெயர்பல்பெயரொன்றார். கற்சுனைக்குவளையிதழ்- பெருந்தோட் பேதையெனப்பிறதொகையும் பெரும்பான்மையும் பலசொல்லாற்றொகுமாலோவெனின்? அற்றன்று கல்லென்பதுஞ் சுனையென்பதுங் கற்சுனையெனத்தொக்கொருசொல்லாய்ப் பின்குவளையென்பதனொடுதொக் கொருசொல்லாய்ப் பின்னிதழென்பதனொடுதொக்குக் கற்சுனைக்குவளையிதழெனவொன்றாயிற்று. பெருந்தோளென்னுந்தொகை யொருசொல்லாய்ப் பின்பேதையென்பதனொடுதொக்குப் பெருந்தோட் பேதையெனவொன்றாயிற்று. அவை யிவ்வாற்றானல்லது தொகாமையி னிருசொற்றொகையேயாம். புலிவிற்கெண்டையென்புழிமூன்றுபெயருந் தொகுமென்றது முதற்பெயரொழித்தும், இறுதிப்பெயரொழித்து மேனையவிரண்டுந் தம்முட்டொக்கொருசொல்லாய்ப் பின்மற்றையதனொடுந்தொகுமெனின் முன் றொகுமிரண்டற்கு மோரியைபுவேறுபாடின்மையானும், இருதொகைப்படுதல் பலசெய்கைத்தாகலானு மவைமூன்றுபெயரு மொருங்குதொக்கனவெனவேபடுமென்பது. அளவின்பெயர் முதலாயின விருபெயராயல்லது தொகாவெனவரையறுத்தற் கிருபெயர் பல்பெயரொன வடங்குனவற்றையே பெயர்த்துக்கூறினார். கலனேதூணிப்பதக்கு-தொடியேகஃசரை-நூற்றுநாற்பத்துநான்கு-என்புழித் தூணிப்பதக்கு - கஃசரை-நாற்பத்துநான்கு என்பனவொருசொற்போல வளவுப்பெயரு நிறைப்பெயரு மெண்ணுப்பெயருமாய் வழங்கப்பட்டுவருதலிற் கலனுந் தூணிப்பதக்கும், தொடியும்கஃசரையும், நூறுநாற்பத்துநான்குமென விருமொழியாகநின்று தொக்கனவென்றலேபொருத்தமுடைமையறிக. உம்மைத்தொகை யின்னபொருள்பற்றித் தொகுமென்றதவ்வறுகிளவியுமெனச் சொல்லேபற்றியோதினானு மேற்புழிக்கோடலென்பதனானும்,உயர்திணைமருங்கினும்மைத்தொகை பலர்சொன்னடைத்தென்பதனானு மெண்ணும்மைப்பொருட்கட் டொகுமென்பதுபெறப்படும். எண்ணின்கண்வரு மிடைச்சொற்பலவேனுந் தொக்குநிற்குமாற்றலுடைய தும்மைப்பெயராகலா னும்மைத்தொகையாயிற்று. (உக)

௩௮௭. பண்புதொகவரூஉங் கிளவியானு, மும்மைதொக்கபெ
யர்வயினானும், வேற்றுமைதொக்க பெயர்வயினானு,
மீற்றுநின்றியலு மன்மொழித்தொகையே.

பண்புச்சொற்றொகுஞ்சொற்கண்ணு மும்மைதொக்கபெயர்க்கண்ணும் வேற்றுமைதொக்கபெயர்க்கண்ணு மிறுதிச்சொற்கணின்றுநடக்கு மன்மொழித்தொகை. எ - று. பண்புத்தொகைபடவும், உம்மைத்தொகைபடவும், வேற்றுமைத்தொகைபடவுமச்சொற்றொக்கபின் னத்தொகை யன்மொழித்தொகையாகாமையிற் றொகுவதன்முன் னவற்றிற்குநிலைக்களமாகிய சொற்பற்றி வருமென்பதுவிளக்கிய தொகைவயினானுமென்னாது பண்புதொகவரூஉங்கிளவியானு மும்மைதொக்கபெயர்வயினானும் வேற்றுமைதொக்கபெயர்வயினானு மென்றார். இறுதிச்சொற்படுத்தலோசையாற் பொருள்விளக்குமாறு வழக்கினுள்ளுஞ்செய்யுளுள்ளுங்கண்டுகொள்க. வெள்ளாடை-அகரவீறென்பனபண்புத்தொகைநிலைக்களத்துப்பிறந்தவன்மொழித்தொகை. தகரஞாழலென்பதும்மைத்தொகைநிலைக்களத்துப பிறந்தது. பொற்றொடியென்பது வேற்றுமைத்தொகைநிலைக்களத்துப்பிறந்தது. இனிஅவை வெள்ளாடையுடுத்தாள்- எ-ம், அகரமாகியவீற்றையுடையசொல் - எ-ம், தகரமு ஞாழலுமாகியசாந்துபூசினாள்-எ-ம், பொற்றொடிதொட்டாள் - எ-ம்-விரியும். பண்புத்தொகைநிலைக் களத்துப்பிறத்தல் பெரும்பான்மையாகலின்முறையிற்கூறாது அதனைமுற்கூறினார். வேற்றுமைத்தொகைநிலைக்களத்துப் பிறத்தலி னும்மைத்தொகை நிலைக்களத்துப்பிறத்தல் சிறுபான்மையாயினுமொருபயனோக்கியதனையதன்முன்வைத்தார். யாதோபயனென்னின்? சிறுபான்மையுவமைத்தொகைநிலைக்களத்தும் வினைத்தொகைநிலைக்களத்து மன்மொழித்தொகைபிறக்குமென்பதுணர்த்துதலென்க. அவைபவளவாய்-திரிதாடி-எனவரும். அவைதாம்-பவளம்போலும் வாயையுடையாள்-திரிந்ததாடியையுடையான்-எனவிரியும். பிறவுமன்ன. (௨௨)

௩௮௮. அவைதா, முன்மொழிநிலையலும் பின்மொழிநிலையலு,
மிருமொழிமேலு மொருங்குடனிலையலு, மம்மொழிநி
லையா தன்மொழிநிலையலு, மந்நான்கென்ப பொருணி
லைமரபே.

முன்மொழிமேனிற்றலும் பின்மொழிமேனிற்றலு மிருமொழிமேனிற்றலு மிருமொழிமேனில்லாது பிறமொழிமேனிற்றலுமெனவத்தொகையு மவற்றதுபொருணிலைமரபு நான்கென்றுசொல்லுவராசிரியர். எ - று. தொகையுமவற்றது பொருணிலைமரபுமொருவகையான்வேறாயினுமொற்றுமை நயம்பற்றியவைதாமென்றார். பொருணிற்றலாவதுவினையொடியையுமாற்றான் மேற்பட்டுத்தோன்றுதல. வேங்கைப்பூவென்புழிப்பூவென்னு முன்மொழிக்கட்பொருணின்றது. அதுநறிதென்னும்வினையொடியையுமாற்றான் மேற்பட்டுத்தோன்றியவாறுகண்டுகொள்க. மேல்வருவனவற்றிற்கு மிதொக்கும். இடவகையான்முன்மொழியாயிற்று. அடைகடலென்புழி அடையென்னும் பின்மொழிக்க

ட்பொருணின்றது. இடவகையாற் பின்மொழியாயிற்று. முன்பின் என்பன காலவகையாற்றடுமாறிநிற்கும். கடலுங்கடலடைந்தவிடமும் கடலெனப்ப டுதலி னடைகடலென்ப தடையாகிய கடலென விருபெயர்ப்பண்புத்தொ கை. இனிவரையறையின்மையிற்சிறுபான்மை முன்மொழிபின்மொழியாகத் தொக்கதோராறும்வேற்றுமைத் தொகையெனவுமமையும். உவாப்பதினான் கென்புழித்தொக்கவிருமொழிமேலும் பொருணின்றது. தன்னினமுடித்தலெ ன்பதனாற்பலபெயர்மேனிற்றலுங் கண்டுகொள்க. வெள்ளாடை யென்புழித் தொக்கவிருமொழிமேலுநில்லாது உடுத்தாளென்னுமன்மொழிமே னின்றது. வேற்றுமைத்தொகைமுதலான்குதொகையுமுன்மொழிப்பொருளவும், வேற்று மைத்தொகையும்பண்புத்தொகையுஞ்சிறுபான்மைபின்மொழிப்பொருளவுமா ம்., உம்மைத்தொகையிருமொழிப்பொருட்டு. ஆறுகசசொல்லப்பட்டதொகை ச்சொற்பொருள்வகையானான்காமெனப்பிரித்தோர்வகைகுறித்தவாறு. (உரு)

௩அகூ. எல்லாத்தொகையு மொருசொன்னடைய.

அறுவகைத்தொகைச்சொல்லுமொருசொல்லாய்நடத்தலையுடைய- எ-று. ஒருசொன்னடையவெனப்பொதுப்படக்கூறியவதனாள்-யானைக்கோடு-கொல் யானை-எனமுன்மொழிபெயராகியவழியொருபெயர்ச்சொன்னடைய வாதலு ம், நிலங்கடந்தான்-குன்றத்திருந்தான்-எனமுன்மொழிவினையாயவழியொரு வினைச்சொன்னடையவாதலுங்கொள்க. அவையுருபேற்றலும்பயனிலை கோட லுமுதலாகியபெயர்த்தன்மையும், பயனிலையாதலும், பெயர்கோடலுமுதலாகி யவினைத்தன்மையு முடையவாதலவ்வச்சொல்லொடுகூட்டிக் கண்டுகொள்க. நிலங்கடந்தான்-குன்றத்திருநதான்-எனப்பெயருமவினையுந்தொக்கனவொருசொ ன்னீர்மையிலவாகலிற்றொகையெனப்படாவென்பாருமுளர். எழுத்தோத்தினு ட்பெயருந்தொழிலும்பிரிந்தொருங்கிசைப்ப வேற்றுமையுருபுநிலை பெறுவழி யுந்தோற்றம்வேண்டாத்தொகுதிககண்ணுமென்றதனான்வேற்றுமையுருபுதொ க்கபெயருநதொழிலுமொருங்கிசைத்த லாசிரியர்நேர்ந்தாராகலி னவைதொ கையெனவேபடுமென்பது. கடந்தானிலம்-இருந்தான்குன்றத்து-என்பனவொ ருங்கிசையாது பக்கிசைத்தலினிவைதொகையன்மையறிக. எல்லாத்தொகை யுமொருசொன்னடையவென்றதனாற் றொகையல்லாத்தொடர்மொழியு ளொ ருசொன்னடையவானகிளவியுளவென்பதாம்.யானைகோடுகூரிது,இரும்புபொ ன்னாயிற்று, மக்களையுயாதிணையென்ப-என்பனவற்றுட்கோடுகூரிது - பொன் னாயிற்று-உயர்திணையென்பவென்னுந்தொகையதுதொடர்மொழி யொருசொ ன்னடையவாயெழுவாய்க்கு மிரண்டாவதற்குமுடிபாயினவாறுகண்டுகொள் க. பிறவுமன்ன. (உசா)

௩கூ0. உயர்திணைமருங்கி னும்மைத்தொகையே, பலர்சொன் னடைத்தென மொழிமனார்புலவர்.

உயர்திணைக்கண்வரு மும்மைத்தொகை பலர்க்குரிய வீற்றானடக்கும் எ-று. பொதுவிற்கூறினோனும் மாமூலகபிலர்-பரணநக்கீரர்-எனவரும். விரவு

பபெயர்த் தொகையுமடங்குதற்குயர்திணைப்பெயரும்மைத்தொகையென்னாது உயர்திணைமருங்கி னும்மைத்தொகையென்றார். அவையொட்டி யொருசொல் லாய்நிற்றலிற் பலரறிசொல்லெனப்படும். பலரறிசொற் கபிலபரணனென வொருமையிற் றனடத்தல் வழுவாகலின் வழுக்காத்தவாறு. இதனானுந் தொகையொரு சொல்லாதல்பெற்றாம். ஒருசொன்னீர்மை பெற்றின்றாயிற் கபிலபரணனென வொருமைச்சொல் லொருமையிற் றனட்த்தற்கட்படு மிழுக்கென்னையென்பது. (உரு)

ஙகூக. வாராமரபின வரக்கூறுதலு, மென்னாமரபின வெனக் கூறுதலு, மன்னவையெல்லா மவற்றவற்றியல்பா, னி ன்னவென்னுங் குறிப்புரையாகும்.

வாராவியல்பினவற்றை வருவனவாகச் சொல்லுதலு மென்னாவியல்பின வற்றை யென்பனவாகச்சொல்லுதலு மத்தன்மையனவெல்லா மவ்வப்பொருளியல்பா னித்தன்மையவென்று சொல்லுங் குறிப்புமொழியாம். எ - று. அந்நெறியீண்டுவந்துகிடந்தது. அம்மலைவந்திதனொடு பொருந்திற்று-எ-ம், அவலவலென்கின்றன நெல்-மழைமழையெனகின்றன பைங்கூழ்-எ-ம்வரும். அவை வரவுஞ்சொல்லுதலு முணர்த்தாதின்னவென்பதனைக் குறிப்பானுணர்த்தியவாறு கண்டுகொள்க. மூலைவந்தன-தலைவந்தன - என்பன காட்டுவாருமுளர். ஆண்டுவருதல் வளர்தற்பொருட்டாகலா னவையீண்டைக்காகாவென்க. நிலம்வல்லென்றது-நீர்தண்ணென்றது என்பன காட்டினாரா லுரையாசிரியரெனின் சொலற்பொருள வன்மையினவைகாட்ட லவர்கருத்தன்றென்க. அன்னவையெல்லாமென்றதனான் இந்நெறி யாண்டுச்சென்றுகிடக்கும்-இக்குன்றக் குன்றொடு சென்றணுகும்-என்னுந தொடக்கத்தனகொள்க. (உசு)

ஙகூஉ. இசைப்படுபொருளே நான்குவரம்பாகும், விரைசொ ல்லடுக்கே மூன்றுவரம்பாகும்.

மேற்கூறப்பட்ட வொருசொலடுக்கினு ளிசைநிறையடுக்குநான்காகியவரம்பையுடைத்துப் பொருளொடுபுணர்தற்கண் விரைவுப்பொருள் படவடுக்குவதுமூன்றாகியவரம்பையுடைத்து. எ-று. வரம்பாகுமென்றதனைநான்கினு மூன்றினுமிறநதுவாரா குறைநதுவரப்பெறுமென்றவாறு. பாடுகோபாடுகோ பாடுகோ பாடுகோ-எ-ம், தீத்தீத்தீ-எ-ம்வரும். அவைமும்முறையானு மிருமுறையானுமடுக்கிவருதலிவற்றைக் குறைத்துச்சொல்லிககண்டுகொள்க. இசைப்படுபொருளாவதுசெய்யுளின்பம். விரைவிக்குஞ்சொல்லடுக்கை விரைசொலென்றார். அசைநிலையிருமுறையல்லதடுக்காமையினதற்கெல்லைகூறாராயினார் அஃதிருமுறையடுக்கு மென்பதியாண்டுப்பெற்றாமெனின் அடுக்கென்பதனாற் பெற்றாம். ஒருமுறைவருவதடுக்கெனப்படாமையினென்பது. முன்னர்க்கூறப்படுமசைநிலையடுக்கிவருமென்பததிகாரத்தாற்கோடறபொருட் டிசைநிறையசைநிலையென்னுஞ்சூத்திரத்தின்பின்வையா திச்சூத்திரமிரண்டனையுமீண்டு வைத்தார். (உஎ)

௩௯௩. கண்டீரென்று கொண்டீரென்று, சென்றதென்று போ
யிற்றென்று, வன்றியனைத்தும் வினவொடுசிவணி, நி
ன்றவழியசைக்குங் கிளவியென்ப.

கண்டீரெனவுங்கொண்டீரெனவுஞ் சென்றதெனவும்போயிற்றெனவும்வ
ரும்வினைச்சொனான்கும்வினவொடு பொருந்திநின்றவழி யசைநிலையடுக்காம்.
எ-று. கட்டுரையகத்தொருவனொன்றுசொல்லியவழி யதற்குடம்படாதான் க
ண்டீரோ கண்டீரோயென்னும். ஈண்டுவினைச்சொற்பொருண்மையும்வினப்பொ
ருண்மையுமின்மையினசைநிலையாயினவாறுகண்டுகொள்க. வரையாது கூறி
னமையிற்கண்டீரோயெனச்சிறுபான்மையடுக்காதுவருதலுங்கொள்க. ஏனைய
வுமேற்றவழியடுக்கியுமடுக்காது மசைநிலையாம். அவையிக்காலத்தரிய. வந்த
வழிக்கண்டுகொள்க. (உ௮)

௩௯௪. கேட்டையென்று நின்றையென்று, காத்தையென்று க
ண்டையென்று, வன்றியனைத்து முன்னிலையல்வழி,மு
ன்னுறக்கிளந்த வியல்பாகும்மே.

கேட்டையெனவு நின்றையெனவுங் காத்தையெனவுங் கண்டையெனவு
ம் வருநான்கு முன்னிலையல்லாக்கான் மேறசொல்லப்பட்ட வசைநிலையாம்.
எ-று. இவையுமகட்டுரைக்க ணடுக்கியுஞ் சிறுபான்மையடுக்காது மேற்றவழி
யசைநிலையாய் வருமாறுங்கண்டுகொள்க. நின்றைகாத்தை என்பன இக்கா
லத்துப்பயின்றுவாரா; வினக்கடையாகவடுக்கி வாதவழி முன்னையசைநிலை
யேயாம். இவையடுகிகியு மடுக்காது முன்னிலைச்சொல்லாதலு முடைமையா
ன் அந்நிலைமை நீக்குதற்கு முன்னிலையல்வழியென்றார். முன்னுறக்கிளந்த வி
யலபாகுமென்பதனான் முன்னையபோலச் சிறுபான்மை வினவொடு வருதலு
ங்கொள்க. முன்னிலை யல்வழியென்பதற்கு முன்னையபோல வினவொடு சிவ
ணிநில்லாதவழியென்றுரைத்தாராலுரையாசிரியரெனின் அற்றன்று வினவொ
டு சிவணலிவற்றிற் கொன்றுனெய்தாமையின் விலக்கவேண்டா அதனனவர்க்
கது கருத்தன்றென்க. இரண்டுசூத்திரத்தானுங் கூறப்பட்டன வினைச்சொ
லாதலும், இடைச்சொலாதலு முடைமையான் வினையியலுள்ளு மிடைச்சொ
லோத்தினுள்ளுங் கூறுதீண்டுக்கூறினார். அஃதேல் ஆக ஆகல்எனபது-என்பன
வற்றொடிவற்றிடைவேற்றுமையென்னை? அவையும்வினைச்சொலாதலுடைமை
யானெனின் இசைநிறைத்தற்கும், பொருள்வேறுபாட்டிற்கு மடுக்கிவரினல்
ல தடுக்காதுவருதலே வினைச்சொற்கியல்பாம். ஆக ஆகல்என்பது என்பனவ
டுக்கியல்லது நில்லாமையின் வினைச்சொல் இடைச்சொலாயினவெனப்படா.
கண்டீர் கொண்டீரென்பனமுதலாயின வினைச்சொற்குரிய.வீற்றவாயடுக்கியு
மடுக்காதும் வருதல் வினைச்சொல் அசைநிலையாயின வெனப்படும். இது தம்
முள் வேற்றுமையென்க. அல்லதூஉம் வினவொடு சிவணிநிற்றலானும், வினை
ச்சொலெனவேபடுமென்பது. (உ௯)

௩௯௫. இறப்பினிகழ்வி னெதிர்வினென்றச், சிறப்புடைமரபி
னம்முக்காலமுந், தன்மைமுன்னிலை படர்க்கையென்

னு, மம்மூவிடத்தான் வினையினுங்குறிப்பினு, மெய்ம்
மையானு மீரிரண்டாகு, மவ்வாறென்ப முற்றியன்
மொழியே.

முற்றுச்சொல்லாவ திறப்பு நிகழ்வெதிர்வென்னு மூன்றுகாலமுந் தன்
மை முன்னிலை படர்க்கை யென்னு மூன்றிடத்தும் உயர்திணையு மஃறிணையு மி
ருதிணைப்பொதுவுமாகிய பொருடோறும் வினையானுங் குறிப்பானுமவ்விரண்
டானும்வருமவ்வறுவகைச்சொல்லாமெனறுசொல்லுவராசிரியர். எ-று. சென்
றனன் கரியன்-எ-ம், சென்றது கரிது-எ-ம், சென்றனை கரியை-எ-ம்-வரும். இ
டமுணர்த்தலுந் திணையும்பாலும் விளக்கலும்போல வொருசாரனவற்றிற்கே
யாகா தெல்லாமுற்றுச்சொற்குங் காலமுற்சிறத்தலிற் சிறப்புடைமரபினம்
முக்காலமுமென்றார். வினையினுங்குறிப்பினுமென்புழி யோரீற்றவாகிய வினை
யும் வினைக்குறிப்புமே கொள்ளப்படும். இவ்விரண்டாதற் சேற்பனவவையாக
லான்] மெய்ம்மையாவது பொருண்மை. உயர்திணையு மஃறிணையுமல்ல திருதி
ணையென்பதோர் பொருளில்லையாயினுஞ் சென்றனைகரியை யென்பனசொல்
விற்கு வினைமுதலாதலும் பண்பியுமாகிய வொருநிமித்தம்பற்றி யிருதிணை
க்கண்ணுஞ் சேறலினந்நிமித்த மிருதிணைப்பொதுவெனப்பட்டது. வினையினுங்
குறிப்பினு மீரிரண்டாய்வருதலாவது தெரிநிலைவினையாற் றெற்றெனத்தோன்
றலுங் குறிப்புவினையாற் றெற்றெனத்தோன்றுமையுமாம். முற்றிநிற்றன்முற்
றுச்சொற்கிலக்கணமாதல் முற்றியன்மொழியேயென்பதனாற்பெற்றும். முற்
றிநிற்றலாவதிதுவென்பது வினையியலுட்கூறினும். திணையும் பாலுங்காலமும்
விளக்க லெல்லாமுற்றிற்குமின்மையா னிலக்கணமன்மையறிக. உயர்திணை அ
ஃறிணை விரவென்னும் பொருண்மேல் வினையும் வினைக்குறிப்புமாய் வருதல்
பற்றி யவ்வாறென்பவென்றார். காலமுமிடமு முதலாயினவற்றொடு கூட்டிப்
பகுப்பப்பலவாம். ஊரானோர்தேவகுலம் என்றாற்போல மெய்ம்மையானும்
என்புழி ஆனென்பது தோறுமென்பதன் பொருட்டாய்நின்றது. முன்னர்ப்பி
ரிநிலைவினையே பெயரேயென்புழிப் பெயரொச்சமும் வினையெச்சமுங் கூறுப
வாகலி னவற்றொடியையமுற்றுச்சொல்லையுமீண்டுக்கூறினார். கூறவே முற்று
ச்சொல்லும் பெயரொச்சமும் வினையெச்சமுமெனவினைச்சொன் மூவகைத்தா
கலி னிஃதுணரப்படுமென்பது. உரையாசிரியர் வினையியலுளோதப்பட்டன
சிலவினைச்சொற்கு முற்றுச்சொல்லென்று குறியிடுதனுதலிற்றிச்சூத்திரமென்
றாரலெனின் குறியீடுகருத்தாயி னவ்வாறென்ப முற்றியன்மொழியே யென்
று தவ்வாறுமுற்றியன்மொழியெனல் வேண்டுமாகலா னதுபோலியுரையெ
ன்க. முற்றியன்மொழி யென்பவென மொழிமாற்றலே குறியீடாமெனின்
குறியீ டாட்சிப்பொருட்டாகலி னக்குறியானதனை யாளாமையின் மொழி
மாற்றி யிடர்ப்படுவ தென்னையோவென்பது. அல்லதூஉ முற்றியன்மொழி
யெனக்குறியிட்டாராயின் அவையேபெயரொஞ்சுகிளவி - எ-ம், இவையேவி
னையெஞ்சுகிளவி-எ-ம் - குறியிடல்வேண்டுமவ்வாறுகுறியிடாமையானு மதுக
ருத்தன்றும். அதனான்வினைச்சொல்லுளிருவகையெச்சமொழித்தொழிந்தசொ

ன்முற்றிநிற்குமென்றும், அவையிணைத்துப்பாகுபடுமென்றுமுணர்த்தலிச்சூத்திரத்திற்குக்கருத்தாகக்கொள்க. (௬௦)

௬௬௬. எவ்வயின்வினையு மவ்வியனிலையும்.

மூவிடத்தாற்பொருடொறுமிவ்விரண்டாமென மேற்சொல்லப்பட்டகட்டளையுட்பட்டடங்காதுபிறண்டுவரும்வினையமுற்றியல்பாய்நிலையும்.எ-று. யார் எவன்-இல்லை-வேறு-என்பனவிடமுணர்த்தாமையின் மேற்கூறியகட்டளையினடங்காது பிறண்டுவந்தனவாம். சிறப்பிற்றன்வருநதெரிநிலைவினையுங் குறிப்பு வினையும்போலப் பொருடோறும்வினையும்வினைக்குறிப்புமாய் வருதற்கெய்தாமையின்மெய்ம்மையாறு மீரிரண்டாகுங்கட்டளையுட்படாது பிறண்டுவாநதனவாம். குறிப்புவினைக்கிருகாது தெரிநிலைவினைக்கிருவனவுநதெரிநிலை வினைக்கிருகாது குறிப்புவினைச்கிருவனவுஞ் சிறப்பின்றாம். அவை வினையியலுட்கூறிப்போநதாம். யார்-எவன் என்பனபாலும், இல்லை-வேறு-என்பன திணையும்பாலுமுணாத்தாவாயினு மேலைச்சூத்திரத்தான் முற்றுச்சொற்குப்பாலுநதிணையுமுணர்த்த லொருதலையாகவெய்தாமையி னிடமுணாத்தாமையேபற்றி யீண்டுக்காட்டப்பட்டன. திணையுமபாலுமுணர்த்த லொருதலையாயிற் றன்மைமுன்னிலைபடர்க்கையென்னு மம்மூவிடத்தானென வாசிரியர்முன்னிலையிடமாண்டுவையாரென்பது. முற்றுச்சொல்லேயன்றிப் பெயரொச்சமும் வினையெச்சமுங் காலமுமிடமு முணர்த்துமென்பது இச்சூத்திரத்திற்குப பொருளாகவுரைத்தாரா லுரையாசிரியரெனின் அவையிடவேறுபாடுணர்த்தாது மூவிடத்திற்கும் பொதுவாய்நிற்றலி னதுபோலியுரையெனக. இனியோருரை-மேலைச்சூத்திரத்தாற்கூறப்பட்ட பொருண்மேலும் வருமெல்லாவினையு முற்றுச்சொல்லாய்நிற்கும். எ-று. ஈண்டுவினையென்றது வினைச்சொலலையாக்குமுதனிலையை. எல்லாவினையு முற்றுச்சொல்லாமெனவேயெச்சமாதலொருதலையன்றென்பதாம். ஆகவே வினைச்சொலாதற்குச்சிறநதன முற்றுச்சொல்லேயென்பதாம். எல்லாவினையு முற்றுச்சொல்லாகலும், கச்சினன்-கழலினன்-நிலத்தன்-புறத்தன்-என்னுந் தொடக்கத்து வினைக்குறிப்பின் முதனிலையெச்சமாய் நில்லாமையும் வழக்குநோக்கிக்கண்டுகொள்க. பிறவுமன்ன. இவையிரண்டு சூத்திரத்துப் பொருளாகக்கொள்க. (௬௧)

௬௬எ. அவைதாந், தத்தங்கிளவி யடுக்குநவரினு, மெத்திறத் தானும் பெயாமுடிபினவே.

மேற்சொல்லப்பட்ட முற்றுசசொற்றாந தந்தங்கிளவி பலவடுக்கிவரினுந் தம்முட்டொடராதெவ்வாற்றானும் பெயரொடுமுடியும். எ-று. உண்டான் தின்றான் ஓடினான் பாடினான் சாத்தன், நல்லன் அறிவுடையன் செவ்வியன் சான்றோர் மகன்-எனவரும். அடுக்கிவரினுமென்னு மும்மையான் வந்தான்வழுதி-கரியன்மாலென வடுக்காதுபெயரொடுமுடிதலே பெரும்பான்மையென்பதாம். தம்பாற்சொல்லல்லது பிறபாற்சொல்லொடுவிராயடுக்கின்மையிற்றத்தங்கிளவியென்றார். என்மனார்புலவர்-மும்பஃதென்ப-என வெளிப்பட்டும் வெளிப்

படாதும் பெயர்முடிபாமென்றற் கெத்திறத்தானுமென்றார் எவ்வயிற்பெயரு ம் வெளிப்படத்தோன்றி யென்றதனான் வெளிப்படாதுநிற்றலும் பெறப்பட் டமையா னீண்டுக்கூறல்வேண்டாவெனின் ஆண்டுமுடிக்கப்படும்பெயர் வெ ளிப்படாதுநிற்றலு முடைத்தென்றார் இதுமுடிக்கும்பெயராகலி னாண்டடங் காதென்பது. முடிக்கப்படுவதனொடு முடிப்பதனிடைவேற்றுமை வேற்றுமை யோத்தினுட்கூறினாம். இன்னுமெத்திறத்தானுமென்றதனான்-உண்டான்சாத்த ன்-சாத்தனுண்டானென முன்னும்பின்னும் பெயர்கிடத்தலுங்கொள்க. அஃ தேன் முற்றிநிற்றலாவது மற்றுச்சொன்னோக்காமையாகலின்முற்றிற்றேலது பெயரவாய்நில்லாது; பெயரவாவிற்றேன் முற்றுச்சொல்லெனப்படாது. அத னான் முற்றுச்சொறபெயர்கொள்ளுமென்றன் மாறுகொளக்கூறலாமெனின் அற்றன்று உண்டான்சாத்தன் என்பதெற்றையென்னு மவாய்நிலைக்கட்சோற் றையென்பதனொடியைந்தாற்போல உண்டானென்பதியாரென்னு மவாய்நிலை க்கட்சாத்தனென்பதனொ டியைவதல்லது அவாய்நிலையில்வழி யுண்டானென த் தான்றொடராய்நிற்றல் வினையியலுள்ளுங்கூறினாமென்பது. அஃதேற் சாத் தனென்னும்பெயர் சோற்றையென்பதுபோல வவாய்நிற்றலை யுள்வழிவருவ தாயினெத்திறத்தானும் பெயர்முடிபினஎன விதந்தோதவேண்டாவாம் பிற வெனின் நன்றுசொன்னாய் அவாய்நிற்றலையுள்வழிவருவதவ்விரண்டற்குமொ க்குமேனு முண்டானென்றவழியுண்டற்றொழிலாற் செயப்படுபொருளுய்த்து ணர்ந்து பின்னதன்வேறுபாடறியலுறிற் சோற்றையென்பது வநதியைவதல் லது சொற்கேட்டதுணையா னெற்றையெனக்கேட்பான் செயப்படுபொருள் வேறுபாடறிவதற் கவாவாமையிற்சோற்றையென்பது வருதலொருதலையன் று. இனியுண்டானென்னுஞ்சொல்லாற் பொதுவகையான்வினைமுதலுணர்ந்து கேட்பானதனவேறுபாடறியவுறுதலிற் சாத்தனென்பது வருதலொருதலையா ம். அதனானிச்சிறப்புநோக்கி விதந்தோதினாரென்பது. (நஉ)

நகூ. பிரிநிலைவினையே பெயரேயொழியிசை, யெதிர்மறையு
ம்மை யெனவேசொல்லே, குறிப்பேயிசையே யாயீ
ரைந்து, நெறிப்படத்தோன்று மெஞ்சுபொருட்கிளவி.

முற்றுச்சொலுணர்த்தி யெச்சமுணர்த்துகின்றார். எஞ்சுபொருட்கிளவி கொண்டலலதமையாமையி னெச்சமாயினவு மொருதொடர்க்கொழிபா யெ ச்சமாயினவுமென அவையிருவகைப்படும். பிரிநிலைமுதலாகச் சொல்லப்பட் டபத்துமெஞ்சுபொருட்கிளவியாம். எ-று. அவற்றுட்கடைநிலைமூன்று மொரு தொடர்க்கொழிபாயெச்சமாயின. அல்லனவெஞ்சுபொருட்கிளவியான் முடி வன. எஞ்சுபொருட்கிளவியெனினு மெச்சமெனினுமொக்கும். பெயரெச்சம்வி னையெச்சம் பெயர்வினையான்முடிதலி னதுபெயராற்பெயரேவினையேயென் றார். ஆயீரைந்துமெஞ்சுபொருட்கிளவியென்றாரேனுமெஞ்சுபொருட்கிளவி ப த்துவகைப்படுமென்பது கருத்தாகக்கொள்க. எச்சமாவனவொருசார்ப்பெய ரும் வினையுமிடைச்சொல்லுமாகலிற் பெயரியன்முதலாயினவற்றுட் பத்து மொருங்குணர்த்துதற்கேலாமையறிக. முடிவும்பொருளுமொத்தலா னென் றென்பதனைனவின்கணெற்றினார். (நந)

௩௯௯. அவற்றுட், பிரிநிலையெச்சம் பிரிநிலைமுடிபின.

மேற்சொல்லப்பட்ட வெச்சங்களுட்பிரிநிலையெச்சமென்பதாற் பிரிநிலையும் ஏகாரப்பிரிநிலையும் ஓகாரப்பிரிநிலையுமெனவிருவகைப்படும். அவ்விருவகைப்பிரிநிலையெச்சமும் பிரிக்கப்பட்டபொருளையுணர்த்துஞ்சொல்லொடுமுடியும். எ-று. தானேகொண்டான் தானோகொண்டானென்னும் பிரிநிலையெச்சம் பிறர்கொண்டிலரெனப் பிரிக்கப்பட்டபொருளையுணர்த்துஞ்சொல்லான் முடிந்தவாறுகண்டுகொள்க. அஃதேற்றானெனப்பட்டானன்றேயாண்டுப் பிரிக்கப்பட்டான் பிறர்கொண்டிலரென்பதவனையுணர்த்துஞ்சொலலன்மையானவை பிரிநிலைகொண்டு முடிந்ததில்லையாலெனின் அற்றன்றுதானெனப்பட்டான் பிறரிற்பிரிக்கப்பட்ட பொருளையுணர்த்தும்வழியபிறருமவனிற்பிரிக்கப்பட்டமையினவைபிரிநிலைகொண்டனவேயாமென்க. பிரிநிலையொடுமுடிதலாவது அவனேகொண்டானென்றவழி அவனேயெனபது கொண்டானெனப்பிரிக்கப்பட்டபொருளை வினையெனகொண்டு முடிதலென்றுராலுரையாசிரியரெனின் அவனேகொண்டானென்புழி அவனென்னுமெழுவாய்வேற்றுமைகொண்டானென்னும் பயனிலைகொண்டது. ஏகாரம்பிரிவுணர்த்திறறு. ஆண்டெச்சமும் எச்சத்தைமுடிக்குஞ்சொல்லுமின்மையா னவாகலதுகருத்தன்றென்க. (௩௪)

௪00. வினையெஞ்சுகிளவிக்குவினையுங்குறிப்பு,நினையத்தோன்றி
யமுடிபாகும்மே, யாவயிற்குறிப்பேயாக்கமொடுவருமே.

வினையெச்சத்திற்குத் தெரிநிலைவினையுங்குறிப்புவினையுமுடிபாம் ஆண்டுக்குறிப்புவினையாக்கவினையொடுவரும். எ-று. உழுதுவந்தான்-மருநதுண்டுநல்லனாயினன்-எனவரும். உழுதுவருதல- உழுதுவநதவன் - எனவினையெச்சம்வினைப்பெயரொடுமுடிதல்நினையத்தோன்றியவென்றதனாற்கொள்க. வினையெச்சத்திற்குமுடிபுவினையியலுட்கூறப்பட்டமையா னிச்சூத்திரம்வேண்டாவெனின்இதற்குவிடையாண்டேகூறினும். வேங்கையுங்காநதளுநாறியாம்பன்மலரினுந்தான்றண்ணியளே-வில்லகவிரலிற் பொருந்தியவர்நல்லகஞ்சேரிறைருமருங்கிலமே-எ-ம், கல்லூவல்லன்-பெற்றுடையன்-எ-ம்-வினைக்குறிப்பாக்கமின்றிவந்தனவாலெனின் ஆக்கமொடுவருமென்றது பெரும்பான்மைகுறித்தாகலிற் சிறுபான்மையாக்கமின்றியும் வருமென்பது. (௩௫)

௪0௧. பெயரெஞ்சுகிளவி பெயரொடுமுடிமே.

பெயரெச்சம்பெயரொடுமுடியும். எ-று. உண்ணுஞ்சாத்தன்-உண்டசாத்தன்-எனவரும். அவ்வறுபொருட்குமோரன்னவுரிமைய வென்றதனாற் பெயரெச்சம்பொருள்படுமுறைமைகூறினார். முடிபு எச்சவியலுட் பெறப்படுமெனவினையியலுட்கூறியவாறுகடைப்பிடிக்க. (௩௬)

௪0௨. ஒழியிசையெச்ச மொழியிசைமுடிபின.

மன்னையொழியிசையுந்தில்லையொழியிசையு மோகாரவொழியிசையு மாகிய வொழியிசையெச்சமூன்றுமொழியிசையான்முடியும். எ-று. கூறியதோ

ர்வாண்மன் -வருகதில்லம்மவெஞ்சேரிசேர-கொளலோ கொண்டான்-என்னு மொழியிசையெச்சமுறையானே திட்பமின்று,வந்தாலின்னதுசெய்வல், கொண்டுய்யப்போமாறறிந்திலன்-என்னு மொழியிசையான்முடிந்தவாறு. பிறவுமு டிக்தற்கேற்குமொழியிசையறிந்துகொள்க. (௩எ)

சoஙு. எதிர்மறையெச்ச மெதிர்மறைமுடிபின.

மாறுகொளெச்சமெனப்பட்ட வேகாரவெதிர்மறையு மோகாரவெதிர்ம றையு மும்மையெதிர்மறையுமாகிய எதிமறையெச்சமூன்று மெதிர்மறையா ன்முடியும். எ-று. யானேகொள்வேன-யானேகளவேன - வரலுமுரியன்-என் னுமெதிர்மறையெச்சமுறையானே கொள்ளேன்-கள்ளேன்-வாராமையுமுரிய ன்-என்னுமெதிர்மறையான்முடிந்தவாறுகண்டுகொள்க. (௩அ)

சoச. உம்மையெசச மிருவீற்றுனுந், தன்வினை யொன்றிய மு டிபாகும்மே.

எஞ்சுபொருட்கிளவியு மவ்வெஞ்சுபொருட்கிளவியான் முடிவதுமாகிய வும்மையெச்சவேறுபாடிரண்டனகண்ணுந் தன்வினை யும்மையொடுதொடர்ந் தசொற்குப்பொருந்தியமுடிபாம. எ-று. என்றது எஞ்சுபொருட்கிளவி. செஞ் சொலாயினென்றதனு னும்மையுடைத்தாயுமும்மையின்றியும்வரும். எஞ்சுபொ ருட்கிளவியும்மையெசசத்திற்குமுடிபாதலெய்திற்று. என்னை! எலலாவெச்சத் திற்குமெஞ்சுபொருட்கிளவியே முடிபாகலினினி யும்மையொடு தொடர்ந்த சொல்லிரண்டற்கும் வினையொன்றியாகல்வேண்டுமென வெய்தாததெய்து வித்தவாறு. ஒன்றற்காயதேயேனையதற்குமாகலிற் றனவினையெனறூர். சாத் தனும்வந்தான்-கொற்றனும்வந்தானென விரண்டுமொருவினை கொண்டவாறு கண்டுகொள்க. சாத்தனும்வந்தான்-கொற்றனுமுண்டான் - எனவினைவேறுப ட்டவழி யும்மையெச்சமு மெஞ்சுபொருட்கிளவியு மியையாமை கண்டுகொ ள்க. அஃதேற் பைம்புதல்வேங்கையுமொள்ளிணர்விரிந்தன நெடுவெண்டிங் களு மூர்கொண்டன்றேயென வினைவேறுபட்டுழியுந் தம்முளியைந்தனவாலெ னின் இணர்விரிதலுமூர்கோட வுமாண்டுமணஞ்செய்காலமிதுவென் றுணர்த் துதலாகியவொருபொருள்குறித்துநின்றமையான் அவை யொருவினைப்பாற்ப டுமென்பது. பிறவுமிவ்வாறுவருவனவறிந்து ஒருவினைப்பாற்படுக்க. எஞ்சு பொருட்கிளவிசெஞ்சொலாயவழித் தன்வினைகோடலீண்டடங்காமையா ன து தன்னினமுடித்தலெனபதனுற் பெறபபடும். உம்மையெச்ச மிருவீற்றுனு மென்றதனுனும்மையெச்சத்திற்கு முடிபாகியவெஞ்சுபொருட்கிளவியு மும் மையொடுவரினெச்சமாமென்பதாம். அஃதெச்சமாங்கான்முன்னின்றதெஞ்சு பொருட்கிளவியாமென்பது. எதிர்மறையும்மை யெதிர்மறையெச்சமா யடங் குதலி னீண்டும்மையெச்சமென்றதெச்சவும்மையேயாம். (௩க)

சoரு. தன்மேற்செஞ்சொல் வரூஉங்காலை, நிகழுங்காலமொடு வாராக்காலமு, மிறந்தகாலமொடு வாராக்காலமு, மய ங்குதல்வரையார் முறைநிலையான.

உம்மையெச்சத்தின்முன்னெஞ்சுபொருட்கிளவி யும்மையில்சொல்லாய் வருங்கா னிகழ்காலத்தொ டெதிர்காலமுமிறந்தகாலத்தொடெதிர்காலமு ம யங்குதலைவரையா ரவ்வாறுமயங்குமுறைமையான். எ- று. முறைநிலையான வென்றதனாற் கூறியமுறையானல்ல தெதிர்காலமுன்னிற்பவேனைக்காலம் பி ன்வந்துமயங்குதலில்லையென்பதாம். கூழுண்ணுநின்றான்- சோறுமுண்பன்- எ-ம், கூழுண்டான்-சோறுமுண்பன். எ-ம்- அவைகூறியமுறையான் மயங்கி யவாறுகண்டுகொள்க. இவற்றொடு துமயங்குதல்வரையாரெனவே யிறந்தகா லத்தொடு நிகழ்காலமு நிகழ்காலத்தொ டிறநதகாலமும்வந்து மயங்குதல்வ ரையப்படுமென்றவாறுமிற்று. தன்மேற்செஞ்சொல்வரூஉங்காலையென்றதனு னும்மையடுத்தசொல வரூஉமகால்வேறுபாடின்றியிரண்டுசொல்லு மொருகா லத்தான் வருமென்பதாம். தன்வினைகாலம்வேறுபடுதலும் படாமையுமுடை மையா னின்னுழியின்னவாறருனல்லது காலம் வேறுபடாதெனவரையறுத் தவாறு. (௪0)

௪0௬. எனவெனெச்சம் வினையொடுமுடிமே.

எனவென்னுமெச்சம்வினைகொண்டுமுடியும். எ- று. கொள்ளெனக்கொ டுத்தான்-துண்ணெனத்துடித்தான - ஒல்லெனவொலித்தது-காரெனக்கறுத்த து-எ-ம், நன்றென்றுகொண்டான்-தீதெனறிகழ்நதான்-எ-ம்வரும். (௪௧)

௪0௭. எஞ்சியமூன்று மேல்வந்துமுடிக்கு, மெஞ்சுபொருட் கிளவி யிலவெனமொழிப.

சொல்லப்பட்ட தொழிநதுநின்றசொல்லுங்குறிப்புமிசையுமாகிய வெச் சமூன்றுமேல்வந்துதம்மைமுடிக்கு மெஞ்சுபொருட்கிளவியை யுடையவல்ல வென்றுசொல்லுவராசிரியர். எ-று. என்றது அவ்வதுதொடர்க்குத்தா மெச்ச மாய்வநது அவற்றதவாய்நிலையைநீக்கலிற் பிரிநிலையெச்சமுதலாயின போலத் தம்மைமுடிக்கும்பிறசொல்லைத்தா மவாய்நில்லாவென்றவாறு. அவைபிறசொ ல்லவாவாது தாமேயெச்சமாய்வருமாறுமுன்னர்ச் சூத்திரத்தாற்பெறப்படும்.

௪0அ. அவைதாந், தத்தங்குறிப்பி னெச்சஞ்செப்பும்.

அவ்வெச்சமூன்றுஞ் சொல்லுவார்குறிப்பானெஞ்சிநின்ற பொருளையுண ர்த்தும். எ-று. பசப்பிற்றுச்சென்றருடையையோ வன்னநிறத்தையோ பீரம லர்-இளைதாகமுண்மரங்கொல்ககளையுநர், கைகொல்லுங் காழ்த்தவிடத் தென் புழிமுறையானே பசப்பிற்றுச்சென்றாரை யாமுடையேம்-எ-ம், நீயாரைக்க லத்தாற்களைக-எ-ம்-வந்ததொடர்மொழி யெச்சமாய்நின்றகுறிப்புப்பொரு வெளிப்படுத்தலாற் குறிப்பெச்சமாயின. அகரமுதலவெழுத்தெல்லாமாதி, பக வன் முதற்றேயுலகு- அளித்தஞ்சலென்றவர் நீப்பிற்றெளித்தசொற், றேறியா ர்க்குண்டோதவறு-என்றவழிமுறையானே அதுபோல-எ-ம், நீத்தார்க்கேதவ று-எ-ம்-வருவன வெஞ்சியவிசைப் பொருளுணர்த்தலானிசையெச்சமாயின. சொல்லெச்சத்திற்குதாரண முன்னர்க்காட்டுதும், சொல்லளவல்லதெஞ்சுத

லின்றேயென்றதனு னஃதொருசொல்லாதல் பெறப்படுதலி னிதுதொடர்சொல்லாமென்பது. சொல்லெனனுஞ்சொல் எஞ்சுவதும் சொல்லெச்சமென்பார் இவ்விருவகையு மிசையெச்சமெனவடக்குப. பசப்பிற்றுச்சென்றாயா முடையேயென்னுந் தொடக்கத்தன குறிப்பிற்றோன்றலாயடங்குதலின் வின்னெனவிணைத்ததென்பது குறிப்பெச்சமென்று மதுபோலவென்னுந்தொடக்கத்தன விகாரவகையாற்றொக்குநின்றமையின் ஒல்லெனவொலித்ததென்பது இசையெச்சமென்று மிவைதத்தஞ்சொல்லான் முடிந்ததல்லது பிறசொல்லான் முடியாமையி னிவற்றை மேல்வந்துமுடிக்கு மெஞ்சுபொருட்கிளவி யிலவென்றொன்று முரைத்தாராலுரையாசிரியரெனின் அற்றன்று தெரிபுவேறு நிலையலுங் குறிப்பிற்றோன்றலுமெனச் சொற்பொருட்பாகுபாடுணர்த்தினார் குறிப்பிற்றோன்றும் பொருளைவெளிப்படுத்து மெச்சமாதலுடைமையான் குறிப்பெச்சமென்ற ரதனுணண்டடங்காது. இனி விணைத்ததொலித்ததென்பன தஞ் சொலெனப்படா; படினும் வின்னெனவீங்கிற்று, துண்ணெனத்துளங்கினான்-எ-ம், ஒல்லெனவிழவிழ-எ-ம்-பிறசொல்லானுமுடிதலி னெஞ்சுபொருட்கிளவி யிலவென்றெனல்பொருந்தாதாம்.என்னை? தன்சொலல்லாதனவெஞ்சுபொருட்கிளவியாமாகலி னினியதுபோலவென்பதுதொகுக்கும்வழித் தொகுத்தலென்பதனுற்றொக்கதாயின் அதனைச்சுட்டிக்கூறு வுவமையென வணியியலுளாசிரியரோருவமவேறுபாடாகக் கூறல்பொருந்தாது. தொகுக்கும்வழித்தொகுத்தலொருமொழிக்கண்ணதாகலிற் பலசொற்றொனுமென்றலும் பொருத்தமின்றதனு னவர்க்கது கருத்தன்றென்க. வின்னெனவிணைத்தது-ஒல்லெனவொலித்ததென்னுந் தொடக்கத்தனவற்றை எனவெனெச்சமெனவடக்கிக் குறிப்பெச்சத்திற்கு மிசையெச்சத்திற்கும் வேறுதாரணங்காட்டல் கருத்தென்க. அல்லதூஉமெனவெனெச்சமென வடக்காதிசையுங்குறிப்பும்பற்றிவருவனவற்றை வேறோதின் வெள்ளெனவிளர்த்ததெனப் பண்புபற்றிவருவதனையும் வேறோதல்வேண்டுமதனை வேறோதாமையானு மெனவெனெச்சமெனவடக்குதல்கருத்தாகக்கொள்க. குறிப்புப்பொருளைப் பசப்பிற்றுச்சென்றாருடையையோ-இனைதாகமுண்மரங்கொல்கவென்பன முதலாகிய தொடர்மொழியே யுணர்த்தலா னெஞ்சுபொருளெனப்படாவாயினு மப்பொருள் பிறசொல்லானல்லது வெளிப்படாமையினச்சொலெச்சமாயிற்று. குறிப்புப்பொருளேயன்றி யெஞ்சியபொருளுஞ்சொல்லுவான் குறிப்பொடுபடுத்துணர்ந்து தமக்கேற்றசொல்லா னுணர்த்தப்படுதலாற் குறிப்பானெச்சஞ் செப்பன்மூன்றற்கு மொத்தவாறறிக. (சஙு)

சுOசு. சொல்லெனெச்ச முன்னும்பின்னுஞ், சொல்லளவல்ல தெஞ்சுதலின்றே.

சொல்லெச்சமொருசொற்கு முன்னும்பின்னுஞ் சொன்மாத்திரமெஞ்சுவதல்லது தொடராயெஞ்சுதலின்று. எ-று. உயர்திணையென்மனு ரென்புழி லுசிரியரென்னுஞ்சொன்முன்னும், மருநதெனின்மருந்தே வைப்பெனின் வைப்பேயென்புழி எமக்கென்னுஞ்சொற்பின்னு மெஞ்சிநின்றவாறுகண்டுகொள்க. ஒருசாரரிவற்றை இசையெச்சமென்றுசொல்லளவல்ல தெஞ்சுதலின்

றேயென்பதற்குச் சொல்லென்னுஞ்சொல்லளவல்லது பிறிதுசொல்லெஞ்சுத லின்றென்று பொருளுரைத்து-பசித்தேன் பழஞ்சோறுதாவென்றுநின்ற, ஞ சுப்போவுலகம்பெறும்-என்புழித் தாவெனச்சொல்லியெனச்சொல்லென்னு ஞ்சொல்லெஞ்சிநின்றதென் றிதனை யுதாரணமாகக்காட்டுப. அவர் முன்னும் பின்னுமென்பதற்குச் சொல்லென்னுஞ்சொற்கொணாந்து கூட்டுவதன் முன் னும்பின்னு மிடர்ப்படப்பொருளுரைப்ப. (சுசு)

சுகο. அவையல்கிளவி மறைத்தனர்கிளத்தல்.

நன்மக்களிடையுரைக்கப்படாதசொல்லை யவ்வாய்பாடுமறைத்துப் பிற வாய்பாட்டாற்சொல்லுக. எ-று. அவைக்கண்வழங்கப்படுஞ்சொல்லை யவை யென்றார். ஆன்முன்வரூஉ மீகாரபகரம்-எ-ம், கண்கழீஇவருதும்-கான்மேனீர் பெய்துவருதும்-கருமுகமந்தி - செம்பினேற்றை - புலிநின்றிறந்த நீரலீரத்து- எ-ம் - இடக்கர் வாய்பாடுமறைத்துப் பிறவாய்பாட்டாற் கூறியவாறு. ஈகார பகரமென்பதுபோலக் கண்கழுவுதன்முதலாயின அவையல்கிளவியைக் கிட ந்தவாறுகூறாது பிறிதோராற்றாற் கிளந்தனவல்லவெனினு மவையல்கிளவிப் பொருண்மையையுணர்த்தலி னொற்றுமைநயத்தா னவையல்கிளவியைப்பிறி தோராற்றாற்கூறிய வாய்பாடாகக்கொள்ளப்படும். இவைதகுதியும் வழக்கு மென்புழித் தகுதியாயடங்குமெனின் செத்தாரைத்துஞ்சினரென்றன் முத லாயினவன்றேதகுதியாவன. ஆண்டுச்செத்தாரென்பதிலக்கணமாதலி னதனு னும் வழங்கப்பட்டுத் தகவுநோக்கிச் சொல்லுங்காற்றுஞ்சினரென்றுஞ் சொ ல்லப்படும். ஈண் டவையல்கிளவியாற்கிளத்தல் வழுவாதலின் மறைத்தவாய் பாட்டானே கிளக்கப்படும் அதனானண்டடங்காதென்பது. இதுவழுவமைதி யன்மையாற் கிளவியாக்கத்துட் கூறாதீண்டுக்கூறினார். (சுரு)

சுகக. மறைக்குங்காலை மரீஇயதொராஅல்.

அவையல்கிளவியைமறைத்துச்சொல்லுங்கால் மேற்றொட்டுவழங்கப்ப ட்டுவருவனமறைக்கப்படா எ-று. ஆப்பி-யானையிலண்டம்-எனமரீஇவந்தனம றைக்கப்படாதுவந்தவாறு. பகல்கான்றெழுதரும் பல்கதிர்ப்பரிதியென்புழிக் கான்றென்பதுதன்பொருண்மேனில்லாதணிகுறித்துப் பிறிதோர்பொருண்மே னிற்றலின்மரீஇயசொல்லாய் மறைக்கப்படாமையி னதன்பொருண்மே னின் றவழிமறைக்கப்படுதலுமறிக. (சுசு)

சுகஉ. ஈதாகொடுவெனக் கிளக்குமூன்று, மிரவின்கிளவி யா கிடனுடைய.

ஈதாகொடுவெனச்சொல்லப்படுமூன்று மொருவனொன்றையிரத்தற்கண் வருஞ்சொல்லாம். எ-று. அவைபிறபொருண்மேல்வருதலுமுடைமையா னிர வின்கிளவி யாகிடனுடையவென்றார். வழங்கல் உதவல் வீசல் முதலாயபிறவு முளவாகவிவற்றையே விதந்தோதியதென்னையெனின்? அவைகொடைப் பொ ருளவாய்வருவதல்லதிவைபோலவிரத்தற்குறிப்பு வெளிப்படுக்கு மிரவின்கிள

வியாய்ப்பயின்றுவாராமையானும், இன்னார்க்கின்னசொல்லுரித்தென்றுவரை யறுத்தலும் வழுவமைத்தலுமாகிய வாராய்ச்சியாண்டின்மையானுமிவற்றை யேவிதந்தோதினுரென்பது. அஃதேல் ஈயென்கிளவியென்னுஞ் சூத்திரமுத லாயநான்குமமையு மிச்சூத்திரம்வேண்டாவெனின் இவையிரவின்கிளவியா கலுமென்றென்னும்வரையறையு மவற்றுற்பெறப்படாமையின் வேண்டுமென் பது. முன்னிலைச்சொல்லாய் வருவழியல்லது பிறுண்டின்னசொல்லின்னு ற்குரித்தென்னும்வரையறையிலவெனபதுணாத்தற்கு ஈதாகொடுவென முன னிலைவாய்பாடுபற்றியோதினுர். (சஎ)

சகங. அவற்றுள், ஈயென்கிளவி யிழிந்தோன்கூற்றே, தாவெ
ன்கிளவி யொப்போன்கூற்றே, கொடுவென்கிளவி யுயு
ர்ந்தோன்கூற்றே.

ஈயென்கிளவியிரக்கப்படுவோனினிழிந்த விரவலன்கூற்றும்; தாவென்கி ளவியவனோடொப்போன்கூற்றும்; கொடுவென்கிளவியவனினுயர்ந்தவன்கூற் றும். எ - று. சோறீஇ-யாடைதாஅ-சாந்துகொடுவெனமூன்றுசொல்லுமுறை யானேமூவர்க்குமுரியவாய் வந்தவாறுகண்டுகொளக. இவைமூன்றுசூத்கிரம்.

சகச. கொடுவென்கிளவி படர்க்கையாயினுந், தன்னைப்பிறன
போற் கூறுங்குறிப்பிற், றன்னிடத்தியலு மென்மனார்
புலவர்.

கொடுவென்னுஞ்சொன்முதனிலைவகையாற் படர்க்கையாயினுந் தன்னை பபிறனொருவன்போலக் கூறுங்கருத்துவகையாற் றன்னிடத்துச் செல்லும். எ-று. உதாரணமேற்காட்டப்பட்டது. தன்மைக்குமுன்னிலைக்குமுரிய தாவெ ன்பதனைகப்பொதுவாக ஈயென்பதனைசவன்றேசொல்லற்பாலது உயர்ந் தானங்ஙனந்தானேற்பானைகச்சொல்லாது கொடுவெனப்படர்க்கைவாய்பாட் டாற்சொல்லும். ஆண்டுத்தன்னையேபிறன்போலக் குறித்தானைகலிற் றன்னிட த்தேயாமென இடவழுவமைத்தவாறு. உயர்ந்தான்றமனொருவனைக்காட்டி இ வற்குக்கொடுவென்னுமென்றுரா லுரையாசிரியரொனின் ஆண்டுப்படர்க்கைச் சொல் படர்க்கைச்சொல்லொ டியைதலான்வழுவின்மையினமைக்கல்வேண் டாவாமதனைதுபோலியுரையென்க. (சகூ)

சகரு. பெயர்நிலைக்கிளவியி னைஅகுநவுந், திசைநிலைக்கிளவி யி
னைஅகுநவுந், தொன்னெறிமொழிவயி னைஅகுநவு, மெ
ய்ந்நிலைமயக்கி னைஅகுநவு, மந்திரப்பொருள்வயி னைஅ
குநவு, மன்றியனைத்துங் கடப்பாடிலவே.

பெயர்நிலைக்கிளவியினைஅகுநவுமென்பது ஒருதிணைப்பெயரொரு திணைக் காய்வருவனவும். எ-று. அவையாவன ஒரெருத்தைநம்பியென்று வழங்குத லும், ஒருகிளியைநங்கையென்றுவழங்குதலுமாம். பிறவுமன்ன. திசைநிலைக்

கிளவியினுருநவுமென்பது - திசைச்சொல்லிடத்துவாய்பாடுதிரிந்து வருவன வும். எ-று. அவை-புலியான்-பூசையான்-என்னுந்தொடக்கத்தன. தொன்னெறிமொழிவயினுருநவுமென்பது முதுசொல்லாகியசெய்யுள் வேறுபாட்டின் கணியைபில்லன வியைந்தனவாய்வருவனவும். எ-று. அவை யாற்றுட்செத்த வெருமையீர்த்தல் ஊர்க்குயவர்க்குக்கடனென்பது முதலாயின. மெய்ந்நிலை மயக்கினுருநவுமென்பது-பொருண்மயக்காகிய * பிரகேளிகைச்செய்யுட்கட்டிணைமுதலாயினதிரிந்துவருவனவும். எ-று. அவை எழுதுவரிக்கோலத்தாரீவார்க்குரியார், தொழுதிமைக்கண்ணமைந்ததோட்டார், முழுதகலா, நாணிற்செறிந்தார் நலங்கிளவிநாடோறும், பேணற்கமைநதார்பெரிது - என்பதுபொத்தகமென்னும்பொருண்மேற் றிணைதிரிந்துவந்தவாறு கண்டுகொள்க. பிறவுமன்ன. மந்திரப்பொருள்வயினுருநவுமென்பது மந்திரப் பொருட்கண் அப்பொருள்குறித்தல்லாச்சொல்வருதலும். எ-று. உதாரணம் மந்திரநூல்வல்லார்வாய்க்கேட்டுணர்க. அன்றியனைத்துங்கடப்பாடிலவேயென்றது அவையனைத்தும் வழங்கியவாறு கொள்வதல்லது இலக்கணத்தான் யாப்புறவுடையவல்ல-எ-று. இஃதிச்சூத்திரத்திற் கொருசாராருரை. ஒருசாரார்பிறவுரைப்ப. இஃதியற்சொல்லுநதிசைச்சொல்லும் பிறவும்பற்றிவழுவமைத்ததாகலிற் கிளவியாக்கமுதலாயவற்றின்க ணுணர்த்துதறகியைபின்மையானீண்டு வைத்தார்.

சஃகூ. செய்யாயென்னு முன்னிலைவினைச்சொல், செய்யென் கிளவி யாகிட னுடைத்தே.

செய்யாயென்னும் வாயபாட்டதாகிய முன்னிலைமுற்றுச்சொல் ஆயென னுமீறுகெடச்செய்யென்னுஞ்சொல்லாய் நிற்றலுமுடைத்து. எ- று. ஆகிடனுடைத்தென்றதனாற்செய்யாயென வீறுகெடாது நிற்றலேபெரும்பான்மையென்பதாம். உதாரணம்- உண்ணாய்-தின்னாய்-கிடவாய்-நடவாய்- தாராய்-வாராய்-போவாய்-என்பனவீறுகெட்டு-உண்-தின்-கிட-நட-தா-வா-போ-எனச்செய்யென்கிளவியாயினவாறுகண்டுகொள்க. செய்யாயென்னுமுன்னிலை யெதிர்மறைசெய்யென் கிளவியாதற்கேலாமையிற் செய்யாயென்னு முன்னிலைவினைச்சொலென்றது விதிவினையேயாம். தன்னினமுடித்தலென்பதனான்என்பனமீன் கடல்மதமெனநிற்றலும், அழியலை-அலையலை-என்னுமுன்னிலையெதிர்மறைஐகாரங்கெட்டு-அழியல்-அலையல்-எனநிற்றலுங்கொள்க. ஒன்றெனமுடித்தலென்பதனாற்புகழ்ந்தாரொன்னும் படர்க்கைவினை ஆரீறுகெடப் புகழ்ந்திகு மல்லரோவெனநிற்றலுங்கொள்க. இவையெல்லாஞ்செய்யுண்முடிபென்பாருமுளர்.செய்யாயென்னு முன்னிலையெதிர்மறை யெதிர்மறைபடாது செய்யென் விதிவினையாதலுமுரித்தென் றுரைத்தாராலுரையாசிரியரொனின் அற்றன்றுசெய்யாயென்னு மெதிர்மறையுஞ்செய்யாயென்னும் விதிவினையுமுடிந்தநிலைமையொக்குமாயினுமெதிர்மறைக்கண்மறையுணர்த்து மிடைநிலையுமுண்மையான் முடிக்குஞ்சொல்வேறெனவேபடும். மறையுணர்த்துமிடைநிலையாவன உண்ணலன்-உண்டிலன்-உண்ணாது-உண்ணேன்-என்புழிவரும் அல்லுமில்லுமாவுமேயும்பி

---

* பிசிச்செய்யுளென்றும் பாடம்.

றவுமாம். உண்ணாய்-உண்ணேன்-என்புழியெதிர்மறை யகரவேகாரங்கெட்டு நின்றனவெனல்வேண்டும். அல்லாக்கானமறைப்பொருள்பெறப்படாமையின் அதனெதிர்மறைச்சொல்லே விதிவினைச்சொல்லாகாமையி னவர்க்கதுகரு த்தன்றென்க. அல்லதூஉமாசிரிய ரக்கருத்தினராயிற் செய்யாயென்னுமெதிர் மறைவினைச்சொலென்றேதுவார்மன் அவ்வாறோதாமையானவர்கதுகருத்த ன்மையானுரையாசிரியர்க்கு மதுகருத்தன்மையறிக. (௫௧)

சசஎ. முன்னிலை முன்னரீயுமேயு, மந்நிலைமரபின் மெய்யூர்ந் துவருமே.

முன்னிலைவினைச்சொன்முன்வரு மீகாரமுமேகாரமு மமமுன்னிலைச்சொ ற்கேற்றமெய்யூர்ந்துவரும். எ-று. சென்றீபெருமநிறறகைக்குநாயாரோ - அட் டிலோலைதொட்டனைநின்மே-எனவவைமுன்னிலைக்கேறற மெய்யூர்நது வந்த வாறுகண்டுகொள்க. முன்னிலையென்றோனுஞ் செயயென்கிளவியாகியமுன் னிலையென்ப ததிகாரத்தாற்கொள்க. ஏகாரமொன்றேயாக-புக்கி - உண்டீ-உ ரைத்தீ-சென்றீ-எனமுன்னிலைவினையீற்று வேறுபாட்டிற்கேற்ப மெய்வேறுப ட்டுவருதலானந்நிலைமரபின்மெய்யென்றார். ஏகாரமகரமூர்நதல்லது வாராது. இவ்வெழுத்துப்பேறுபுணர்ச்சிவிகாரமாகலி னீண்டுக்கூறற்பாற்றன் றெனின் அற்றன்று இயற்பெயர்முன்னராரைக்கிளவியப்பெயரொடொற்றுமைப்பட்டு நின்றாற்போல முன்னிலைமுன்னரீயுமேயு முன்னிலைச்சொல்லொன்றொடொற் றுமைப்பட்டுநிற்றலா னிலைமொழிவருமொழிசெய்து புணர்க்கப்படாமையா ன்மெய்ப்புணர்ச்சி விகாரமெனப்படாவென்க. அஃதேலிடைச்சொ லியனு லியற்பெயர்முன்னராரைக்கிளவியென்பதனொடியையவிதனையும் வைக்கவெ னின் ஆண்டுவைப்பிற்செய்யாயென்பது செய்யென்கிளவியாயவழி யஃதவ் வீகாரவேகாரவரவென்பதுபெறப்படாமையி னீண்டுவைத்தார். செய்யாயெ ன்னுமுன்னிலைவினைச்சொலென்பதனை யீண்டுவைத்தற்குமிதுவேபயனாதலறி க. முன்னிலைவினைச்சொல் விகாரமொருங்குணர்த்த லதற்குப்பயனெனினுமமை யும். ஈயென்பதோரிடைச்சொலுண்டென்ப திச்சூத்திரத்தாற் பெற்றாம். இவையிரண்டுமீண்டுப்புறத்துறவுப பொருள்படநின்றன. அசைநிலையென்பா ருமுளர். (௫௨)

சசஅ. கடிசொலில்லைக் காலத்துப்படினே.

இவைதொன்றுதொட்டனவல்லவென்றுகடியப்படுஞ்சொல்லில்லை யவ்வ க்காலத்துத்தோன்றிவழங்கப்படுமாயின். எ-று. சம்பு-சள்ளை-எனவரும். இவை தொனறுதொட்டுவநதனவாயின் முதலாகக்கரத்துட் சகரக்கிளவியுமவற்றோ ரற்றே அ ஐ ஔ வென்னு மூன்றலங்கடையேயென விலக்காரா மாசிரியர் அதனானவை பிற்காலத்துத்தோன்றியசொல்லேயாமென்பது. இஃதெழுவகை வழுவமைதியுமல்ல தோர்பாதுகாவலாதலிற்கிளவியாக்கத் தியைபின்மையா னீண்டுக்கூறினாரென்பது. இஃதொருசாரார்துரை. இன்னவனுவதிக்குங்காலமா முக்காலத்தவை வழுவன்மை யெல்லாவாசிரியர்க்கு முடன்பாடாகலி னத

னைத்தழீஇக்கொண்டவாறென்க. இவையிரண்டு மிச்சூத்திரத்திற்குப் பொரு ளாகக்கொள்க. (௫௩)

௪௧௯. குறைசொற்கிளவி குறைக்கும்வழியறிதல்.

குறைக்குஞ்சொல்லைக் குறைக்குமிடமறிந்துகுறைக்க. எ-று. குறைக்கும் வழியறிதலென்பது ஒருசொற்குத் தலையுமிடையுங்கடையுமென இடமூன்ற ன்றே யவற்றுளின்னுழிக்குறைக்கப்படு மிச்சொல்லென்றறிந்து குறைக்க. எ-று. தாமரையென்பது மரையிதழ்புரையுமஞ்செஞ்சீறடி - எனத்தலைக்கண் ணும், ஓந்தியென்பது வேதின வெரிநினோதிமுதுபோத்து- எனவிடைக்கண்ணு ம், நீலமென்பது நீலுண்டுகிலிகைகடுப்ப-எனக்கடைக்கண்ணுங்குறைக்கப்பட் டவாறும் அவையிரண்டுக்குறைத்தற் கேலாமையுங் கண்டுகொள்க. குறைத் தலாவதொருசொல்லிற சிறிதுநிற்பச் சிறிதுகெடுத்தலாகலின் முழுதுங்கெடு த்தலாகியதொகுக்கும்வழித் தொகுத்தலின்வேருதலறிக. இயற்சொற்றிரிசொ லெனுஞ் சூத்திரமுதலாகிய செய்யுளதிகாரத்துக்கூருமையானு மொருகார ணத்தாற் கூறினாேனுஞ் செய்யுட்கணென்று விதந்துகூருமையானு மிதுவழ க்கு முடிபென்பாருமுளர். (௫௪)

௪௨0. குறைத்தனவாயினு நிறைப்பெயரியல.

குறைத்தனவாயினு மவை குறையாதுநிறைந்துநின்ற பெயரியல்பையு டைய. எ-று. என்றது குறைந்தவழியு நிறைந்தபெயராகக்கொள்க. குறைக்க ப்படுவனபெயரேயாகலி னிறைப்பெயரியலவென்ருர். (௫௫)

௪௨௧. இடைச்சொலெல்லாம் வேற்றுமைச்சொல்லே.

பிறிதோர்சொல்லை வேறுபடுப்பனவும் பிறிதோர்சொல்லான் வேறுபடுக் கப்படுவனவுமெனச் சொல்லிருவகைப்படும். பிறிதோர்சொல்லை வேறுபடுத்த லாவது விசேடித்தல். பிறிதோர்சொல்லான் வேறுபடுக்கப்படுதலாவது விசே டிக்கப்படுதல். இடைச்சொலெல்லாம் பிறிதோர்சொல்லை விசேடிக்குஞ்சொ ல்லாம். எ-று. வேறுபடுத்தலும் வேறுபடுக்கப்படுதலும் பொதுவகையான் எல்லாச்சொற்குங் கூருமையெய்துமாகலின் இடைச்சொலெல்லாம் வேற்று மைச்சொல்லென்றதனு னவைவேறுபடுக்குஞ் சொல்லாதலல்ல தொருஞான் றும் வேறுபடுக்கப்படுஞ்சொல்லாகாவென நியமித்தவாரும். அவையன்னவா தலிடைச்சொ லோத்தினுளோதப்பட்ட விடைச்சொல் வழக்கினுள்ளுஞ் செ ய்யுளுள்ளும்வரும்வழிக் கண்டுகொள்க. வேற்றுமைச்சொல் வேற்றுமையை ச்செய்யுஞ்சொல்லெனவிரியும். வேற்றுமையெனினும் வேறுபாடெனினுமொ க்கும். இடைச்சொலெல்லாம் வேற்றுமைச்சொல்லாயினு மவற்றுளொருசார னவற்றை வேற்றுமைச்சொலென்ருள்ப. இயற்சொல்லுளொருசாரனவற்றை யியற்பெயரொன்ருற்போலவென்பது. இதுவுமோர்நயம். (௫௬)

௪௨௨. உரிச்சொன்மருங்கினு முரியவையுரிய.

உரிச்சொலிடத்தும் வேறுபடுக்குஞ்சொல்லாதற்கு முரியனவுரியவாமெல்லா முரியவாகா. எ-று., எனவே உரிச்சொல்லுள் வேறுபடுத்தும் வேறுபடுக்கப்பட்டும் இருநிலைமையுமுடையவாய்வருவனவே பெரும்பான்மையென்பதாம். வேறுபடுக்குஞ்சொல்லேயாவன உறு-தவ-நனியென்னு நதொடக்கத்தன இருநிலைமையுமுடையன குரு-கெழு-செல்லல்-இன்னல்-என்னுந தொடக்கத்தன. உறுபொருள்-தவப்பல-நனிசேய்த்துஎகலுக்கம் எனவிவையொன்றனைவிசேடித்தல்லதுவாராமையும், குருமணிவிளங்கு-குருகேழ்கிளரகலம்-செங்கேழ்-செல்லனோய்-அருஞ்செல்லல்-இன்னற்குறிப்பு-பேரின்னல் எனவிவையொன்றைவிசேடித்தும், விசேடிக்கப்பட்டுமிருநிலைமையுமுடையவாய்வருமாறும்வழக்குஞ்செய்யுளுநோக்கிக்கண்டுகொள்க. குருவிளங்கிற்று-செல்லநீர்-எனத்தாமேநின்றுவினைகொளவன விசேடிக்கப்படுநதன்மையுடையவாதலின் விசேடிக்கப்படுஞ்சொல்லாம். பிறவும்விசேடித்தல்லதுவாராதனவும், விசேடித்தும் விசேடியாதும்வருவனவும்வழக்குஞ் செய்யுளுநோக்கியுணர்க. வேறுபடுக்குஞ்சொலலேயாவன இவையெனத்தொகுததுணாத்தற்கு முரிச்சொன்மருங்கினுமுரியவையுரியவெனச சூத்திரஞ்சுருங்குதற்கு மிடைச்சொலோத்தினுள்ளு முரிச்சொ லோத்தினுள்ளும்வையா திரண்டுசூத்திரத்தையு மீண்டுவைத்தார். (ருஎ)

சஉ௩. வினையெஞ்சுகிளவியும் வேறுபலகுறிய.

மேற்கூறப்பட்ட வினையெச்சமும்வேறுபட்டபல இலக்கணத்தையுடையன-று. அவையாவன-உரற்கால்யானையொடித்துண்டெஞ்சிய-எ-ம், ஞாயிறுபட்டுவநதான்-எ-ம்-செய்தெனெச்சம் வினைமுதல்வினைகொள்ளாது பிறிதின்வினைகோடலும், அஃதிறுதிரிதலும், மோயினளுயிர்த்தகாலே-எ-ம், கண்ணியன்வில்லன்வரும்-எ-ம்- முற்றுச்சொல்லதுதிரிபாய்வருதலும், ஓடிவநதான் விரைந்தபோயினன்-எ-ம், வெய்யசிறியமிழற்றுஞ் செவ்வாய்-எ-ம், செவ்வன்றெரிகிற்பான்புதுவதனியன்றவணி[illegible]-எ-ம் - தம்மைமுடிக்கும் வினைக்கட்கிடந்ததொழிலானும், பண்பானும், குறிப்பானுமுணர்த்தித்தெரிநிலைவினையுங்குறிப்புவினையுமாய்முடிக்குஞ்சொல்லை விசேடித்தலும்பிறவுமாம். செய்தெனெச்சத்திறுதிரிதல்வினையியலுட்காட்டிப்போநதாம். பெருங்கையற்றவெனப்புலம்புமுந்துறுத்தி-என்புழிப்பெருமென்பதனை யொருசாரார்வினையெச்சவாய்பாடென்ப. ஒருசாரார்வினைச்சொற்பற்றி நின்றதோருரிச்சொலென்ப. இடைச்சொல்லுமுரிச்சொல்லு மேற்கூறப்பட்டஇலக்கணமேயன்றிப் பிறவிலக்கணமுமுடையவென்பதுணர்த்தினர். இனியவையேயன்றி வினையெஞ்சுகிளவியும் பலவிலக்கணத்தனவென்பது படநின்றமையான் உம்மையிறந்ததுதழீஇயவெச்சவும்மை. அவ்விலக்கணமோரியலவன்றித்திரிதலும்வேறுபொருளுணர்த்தலும் விசேடித்தலுமுதலாகிய வேற்றுமையுடையவாகலின் வேறுபலகுறிய வென்றார். வினையெச்சத்துள்விசேடித்தேநிற்பனவு முளவென்பதூஉ முணர்த்துகின்றாதலின்தினைவினையியலுள்வையா தீண்டுவிசேடித்தசொல் லுணர்த்துவனவற்றொடுவைத்தார். பெயர்த்தனென்முயங்கவென்பது முதலாயின செய்

தெனெச்சமுற்றுய்த்திரிந்தனவென்றுரைத்தாரா லுரையாசிரியரெனின் பெய
ர்த்தனென்றுயங்கவென்பதுமுதலாயின வெச்சத்திரிபாயினெச்சப்பொருளு
ணர்த்துவதல்ல திடமும்பாலுமுணர்த்தற்பாலவல்ல; எச்சப்பொருண்மையா
வது மூன்றிடத்திற்கும் ஐந்துபாற்கும்பொதுவாகிய வினைநிகழ்ச்சிச் சொற்
கோதியவீற்றவாயிடமும்பாலுமுணர்த்தலி னவைமுற்றுத்திரிசொல்லெனவே
படும். சொன்னிலையுணர்த்தும் வினைகோடன்மாத்திரத்தான வினையெச்சமெ
னின் மாலைக்கிளவியும் வினையொடுமுடியும்வேற்றுமையும், பிறவுமெல்லாம்
வினையெச்சமாவான் செல்லுமதனானவாக்கதுகருத்தன்றென்க. அல்லதூஉங்
கண்ணியன்வில்லன் எனவரும்வினைக்குறிப்புமுற்றுய்த் திரிதற்கேற்பதோர்வி
னையெச்சமின்மையானுமதுகருத்தன்மையறிக. ஒடித்துண்டெஞ்சிய வென்ப
தூஉம், ஞாயிறுபட்டுவந்தானென்பதூஉம் பிறவினைகொண்டனவாயினுஞ்செ
ய்தெனெச்சத்திற்குரிய விறந்தகாலமுணர்த்தலானேனைக்காலத்திற்குரிய செ
யவெனெச்சத்தின் றிரிபெனப்படா; செயவெனெச்சத்தின்றிரிபாயிற் செய
வெனெச்சத்திற்குரியகாலமுணர்த்தல்வேண்டும். மழைபெய்யமரங்குழைத்த
தெனச்செயவெனெச்சத் திறந்தகாலமுமுரித்தெனி னதுகாரணகாரியப்பொ
ருண்மையுணர்த்தும்வழியல்லது செயவெனெச்சமிறந்தகால முணர்த்தாது.
ஒடித்துண்டலும், ஞாயிறுபடுதலும்-எஞ்சுதற்கும், வருதற்குங்காரணமன்மை
யானுண்டிறந்தகாலமுணர்த்தாமையிற் செய்தெனெச்சமாய்நின்று தமக்குரி
யவிறந்தகாலமுணர்த்தினவெனப்படும். அதனாற்செயவெனெச்சஞ் செய்தெ
னெச்சமாய்த்திரிந்தனவென்றலு மவர்க்கதுகருத்தன்றென்க. ஞாயிறுபட்டு
வந்தானென்பது ஞாயிறுபட்டபின்வந்தானெனலும், ஞாயிறுபடவந்தா னெ
ன்பதுஞாயிறுபடாநிற்பவந்தானென நிகழ்காலமுணர்த்தலும் வழக்குநோக்
கிக்கண்டுகொள்க. (௫அ)

௪௨௪. உரையிடத்தியலு முடனிலையறிதல்.

வழக்கிடத் துடனிற்கப்பாலனவல்லனவற்றதுடனிலைபோற்றுக. எ-று.
உடனிற்கற்பாலவல்லனவாவன தம்முண்மாறுபாடுடையன. மாறுபாடில்லன
வற்றதுட னிலைக்கணாராய்ச்சியின்மையி னுடனிலையென்றது மாறுபாடுடைய
னவற்ற துடனிலையேயாம். இந்நாழிகையிந்நாழி சிறிதுபெரிதே என்புழி உடனி
ற்கப்பாலவல்லாச் சிறுமையும் பெருமையும் உடனின்றவாறு கண்டுகொள்க.
சிறிதென்பது பெரிதெனப்பட்ட பொருளைநோக்காது பெரிதென்பதற்கடை
யாய் மிகப்பெரிதன்றென்பது படநிற்றலானமைவுடைத்தாயிற்று. அறிதலெ
ன்ப திவ்வாறியைபுடையனகொள்கவென்றவாறு. மாறுபாடுடையன உடனி
ற்றலெழுவகைவழுவினு ளொன்றெனவமையாமையி னிதனைக்கிளவியாக்கத்
துட் கூறுதீண்டுக்கூறினார். (௫௯)

௪௨௫. முன்னத்தினுணருங் கிளவியுமுளவே, யின்னவென்னு
ஞ் சொன்முறையான.

சொல்லானன்றிச் சொல்லுவான்குறிப்பாற் பொருளுணரப்படுஞ் சொ
ல்லுமுள விப்பொருளித்தன்மையவென்று சொல்லுதற்கண். எ-று. செஞ்செ

வி-வெள்ளொக்கலர்-என்புழி மணியும்பொன்னு மணிந்தசெவியென்றும், வெள்ளியதுடுத்த சுற்றமென்றுங் குறிப்பானறியப்பட்டவாறுகண்டுகொள்க. குழைகொண்டு கோழியெறியும் வாழ்க்கையரொன்புழி அன்னபெருஞ்செல்வத்தாரொன்பதூஉங் குறிப்பானுணரப்படும். இதுதெரிபுவேறுநிலையலுங் குறிப்பிற்றோன்றலுமென்புழி யடங்குமெனி னுண்டப்பொருணிலை யிருவகைத்தென்பதல்ல தின்னுழியிப்பொருள் குறிப்பிற்றோன்றுமென்னும் வேறுபாடுபெறப்படாமையா னுண்டீங்காதென்பது. இதுவுமேலையோத்துக்களு ளுணர்த்துதற்கியைபின்மையி னீண்டுணர்த்தினா. (சு0)

சஉசு. ஒருபொருளிருசொற் பிரிவிலவரையார்.

பொருள்வேறுபாடின்றி யொருபொருண்மேல்வரு மிரண்டுசொல் பிரிவின்றித் தொடர்ந்துவரி னவற்றைக்கடியார. எ-று. நிவந்தோங்கு பெருமலை-எ-ம், துறுகண்மீமிசையுறுகண்-எ-ம் வரும். பிரிவிலவென்றது வேறோசொல்லானிடையிடப்படாது நிற்பனவெனறவாறு. இருசொலொருபொருண்மேலவருத லெழுவகைவழுவினு ளொன்றன்மையா னீண்டுக்கூறினர். வையைக்கிழவன் வயங்குதார்மாணகலந, தையலாயின்றுநீ நல்கினைநல்காயேற், கூடலார்கோவொடு நீயும்படுதியே, நாடறியக்கௌவையொருங்கு - என்புழிவையைக்கிழவன் கூடலார்கோவென்பன ஒருபொருளை வரைந்துணர்த்தலாற் பிரிவிலவாகலின் வரையப்படாவென்றும், கொய்தளிர்தண்டலைக் கூத்தப்பெருஞ்சேந்தன், வைகலுமேறும் வயக்களிறே-கைதொழுவல், காலேகவண்ணனைக்கண்ணுரககாணவெஞ், சாலேகஞ்சாரநட - என்புழிக்காலேகவண்ணனென்பதைச்சார்ந்து பூசினொல்லார்க்கும்பொதுவாய்க் கூத்தப் பெருஞ்சேந்தனையேவரைந்துணர்ததாமையி னவைபிரிவுடையவாமெனறு முரையாசிரியருரைத்தாராலெனின் அற்றன்று நாணிநின்றோணிலைகண்டியானும், பேணினேனல்லனோமகிழ்நவானத், தணங்கருங்கடவுளன்னோணின்மகன் றாயாதல்புரைவதாலெனவே-என்புழிவானத் தணங்கருங்கடவுளன்னோளென்பது மகளிர்க்கெல்லாம் பொதுவாய் நாணிநின்றோளை வரைந்துணர்த்தாதாயினுஞ் சொல்லுவான் குறிப்பானவளையே யுணர்த்தினாற்போலக் காலேகவண்ணனென்பதூஉம் பொதுவாயினுஞ்சொல்லுவான் குறிப்பாற்கூத்தப்பெருஞ்சேந்தனையே யுணர்த்திப் பிரிவிலவாய்நிற்றலா னவர்க்கது கருத்தன்றென்க. (சுக)

சஉஎ. ஒருமைசுட்டிய பெயர்நிலைக்கிளவி, பன்மைக்காகுமிட
னுமாருண்டே.

ஒருமைக்குரிய பெயர்ச்சொற்பன்மைக்காகு மிடமுமுண்டு. எ-று. ஏவலிளையர்தாய்வயிறுகரிப்ப-என்புழித்தாயென்னு மொருமைசுட்டியபெயர் இளையரொன்பதனாற்றாயரொன்னும் பன்மையுணர்த்தியவாறுகண்டுகொள்க. பன்மைக்காகு மிடனுமாருண்டேயென்ப தொருமைச்சொற் பன்மைச்சொல்லொடு தொடர்தற்குப் பொருந்துமிடமுமுண்டென்பதூஉம் படநின்றமையான் அஃதைதந்தையண்ணல் யானையடுபோர்ச்சோழர்-எனவொருமைச்சொற்பன்மை

ச்சொல்லொடு தொடர்தலுங்கண்டுகொள்க. ஈண்டொருமைச்சொற் பன்மை ச்சொல்லொடு மயங்குதலுடைமையா னொருவனைக்கூறும் பன்மைக்கிளவி யென்புழி யடங்காமையறிக. ஏற்புழிக்கோடலென்பதனா னுயர்திணைக்கண் ணதென்றுகொள்க. ஆகுமிடனென்பதனாற்பன்மையுணர்த்துதற்கும், பன்மை ச்சொல்லொடு தொடாதற்குமபொருநதும்வழிக் கொள்கவென்பதாம். (சஉ)

சஉஅ. முன்னிலைசுட்டிய வொருமைக்கிளவி, பன்மையொடு முடியினும் வரைநிலையின்றே, யாற்றுப்படைமருங்கிற் போற்றல்வேண்டும்

முன்னிலைகுறித்துநின்றவொருமைச்சொற் பன்மையொடுமுடிந்த தாயி னுங்வரையப்படாதம்முடிவாற்றுப்படைச்செய்யுளிடத்துப் போற்றி யுணரப் படும். எ-டு. கூத்தராற்றுப்படையுட்கலம்பெறு கண்ணுளரொக்கற்றலைவ-என நின்றவொருமைச்சொற் பெயரிருபெயரொக்கலொடுபதமிகப்பெறுகுவிரொ ன்னும்பன்மைச்சொல்லொடு முடிநதவாறுகண்டுகொள்க. ஈண்டு முன்னிலை யொருமைபெயராத லதிகாரத்தாற்கொள்க. ஒருமைசுட்டியபெயர்நிலைக்கி ளவிபன்மைக்காகு மிடனுமாருண்டேயென்பதனாலிதுவுமடங்குதலி னிச்சூத் திரமவேண்டாவெனின்பன்மையொடுமுடியு மிடனுமாருண்டே யென்னாதுப ன்மைக்காகுமிடனுமாருண்டேயென்றாராகலி னீண்டுபபன்மைச்சொற் கொ ண்டுமுடியாதொருமைச்சொற் பன்மையுணர்த்தலும், பன்மைச்சொல்லொ டொருபொருட்டாகியதுணையான் மயங்குதலுமுணாத்தினர் அதனைக்கொ ண்டுமுடிவாண்டடங்காதென்பது. அல்லதூஉம் இம்முடிபுசெய்யுட்குரித்தென் றமையானு மாண்டடங்காமையறிக. [illegible]துவகையா னாற்றுப்படைமருங்கி னென்றாராயினுஞ் சுற்றத்தொடுசுற்[illegible]த்தலைவனை யாற்றுப்படுத்தற்கண்ண தி ம்மயக்கமென்பது பாதுகாத்துணாகவென்பா போற்[illegible]ல்வேண்டுமென்றார். பான்மயக்குற்றவையக்கிளவியென்பதனாற்கூறிய வொருமை பன்மைமயக் கம்வழுவமைதியாயினுமிலக்கணத்தொ டொத்துப்பயின்றுவரும். ஒருமைசு ட்டியபெயர்நிலைக்கிளவிபன்மைக்காகலும், முன்னிலையொருமைபன்மையொ டுமுடிதலு மன்னவன்றிச் சிறுவழகின்று. ஒருவரொருவனை ஆற்றுப்படுத் தறகண்முன்னிலையொருமை பன்மையொடுமுடிதல்வழக்கிற்கும் பெயாக்கு மாகலானாற்றுப்படையென்றா. (சஙு)

சஉகூ. செய்யுண்மருங்கினும் வழக்கியன்மருங்கினு, மெய்பெற க்கிளந்தகிளவியெல்லாம், பலவேறுசெய்தியினூனெறி பிழையாது, சொல்வரைந்தறியப் பிரித்தனர்காட்டல்.

செய்யுளிடத்தும் வழக்கிடத்து மிவ்வதிகாரத்தினகட் பொருள்பெறசு சொல்லப்பட்ட சொல்லெல்லாவறறையும் பலவேறுசெய்கையுடைய தொன் னூனெறியிற்பிழையாது சொல்லைவேறுபடுத்துணருமாற்றாற் பிரித்துக்காட்டு க. எ-று. என்றதுநிலப்பெயர்குடிப்பெயர்-எ-ம், அம்-ஆம்-எம்-ஏம்.எ-ம்-பொ துவகையாற்கூறப்பட்டன அருவாளநிலத்தான் என்னும்பொருட்கண் அரு

வாளன்-எ-ம், சோழியநிலத்தானென்னும்பொருட்கட்சோழியன்எ-ம், இறந்தகாலத்தின்கண்-உண்டனம்-உண்டாம்-எ-ம்,நிகழ்காலத்தின்கண்-உண்ணுநின்றனம்-உண்ணுநின்றும்-உண்கின்றும்-எ-ம், எதிர்காலத்தின்கண் - உண்குவம்-உண்பாம்-எ-ம்- வேறுபட்டுவருமன்றே அவ்வேறுபாடெல்லாங் கூறிற்பல்குமென்றஞ்சிக்கூறிற்றிலேனாயினுந் தொன்னூனெறியிற்பிழையாம லவ்வேறுபாடுணரப்பிரித்துக்காட்டுத னூல்வல்லார் பிறநூன்முடிந்தது தானுடன்படுதலென்னுந்தந்திரவுத்தி. பிறவுமன்ன. செய்கைவிதிசொலவணைந்தறிய வெனவேவணைந்தோதாது பொதுவகையாளோதப்பட்டவற்றுமேற்றிப்புறநடையென்பதாம். இனியோருரை-செய்யுளிடத்தும்வழக்கிடத்து மென்னுற்கிளக்கப்படாது தொன்னூலாசிரியராற்கிளக்கப்பட்டெஞ்சிநின்றசொல்லெல்லாவற்றையுமவ்வத்தொன்னூனெறியிற் பிழையாமைச் சொல்லவணைந்துணரக்கொணர்ந்துபிரித்துக்காட்டுக. எ-று. என்னுற்கிளக்கப்படாதென்பது பெற்றவாறென்னையெனின்? கிளந்தன பிறநூலிற கொணர்ந்துகாட்டல் வேண்டாமையிற்கிளக்கப்படாதென்பது பெறப்படுமென்க. புறநடையாற கொள்ளப்படுவன யானு நீயு மவனுஞ் செல்வேம்-எ-ம், யானு நீயுஞ் செல்வேம்-எ-ம்- ஏனையிடத்திற்குரிய சொற்றன்மைச்சொல்லொ டியைந்தவழித் தன்மையாய்முடிதலும், அவனு நீயுஞ் சென்மினெனப்படர்க்கைச்சொன் முன்னிலையொடியைந்தவழி முன்னிலையான் முடிதலும், நில்லாதுபெயர்ந்த பல்லோருள்ளார் என்புழிப் பல்லேமுள்ளேமெனததன்மையாகற்பாலது பல்லோருள்ளாரெனப் படர்க்கைப்பன்மையாயவழியமைதலும், முரசுகெழுதானை மூவருள்ளுமரைசெனப்படுவது நினதேயத்தேயென்புழி மூவிருள்ளுமென முன்னிலையாகற்பாலது மூவருள்ளுமெனப் [illegible]ர்க்கையாயவழி யமைதலும், இரண்டனுட் கூர்ங்கோட்ட [illegible]வலென்புழிக் [illegible]ர்ங்கோட்டதென வொருமையாகற்பாலதுகூர்ங்கோட்[illegible]வெனப் பன்[illegible]மையாயவழியமைதலுமாம். பிறவுமுளவேற்கொள்க. அகத்தியமுதலாயின வெல்லாவிலக்கணமுங்கூறலிற் பலவேறுசெய்தியி னூலென்றார். இவ்விரண்டுரையு மிச்சூத்திரத்திற் குரையாகக்கொள்க. (சுசு)

ஒன்பதாவது

எச்சவியல் - முற்றிற்று.

———:0:———

## தொல்காப்பியச்சொல்லதிகாரம்

## சேனாவரையருரை.

## முற்றியது.